கழக வெளியீடு—கஉச

உ

வேலுமயிலுந்துணை

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க

---

## ஞானியாரடிகள்

# கந்தர்சட்டிச் சொற்பொழிவுகள்

சென்னை முத்தியாலுப்பேட்டை

உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியரும்

மறைத்திரு ஞானியாரடிகளின் மாணவருமாகிய

**வித்துவான் திரு. மு. இராசாக்கண்ணு முதலியார், P. O. L.,**

அவர்கள்

குறிப்பெடுத்தெழுதியவை

திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,

திருநெல்வேலி :: சென்னை

 விசு—மார்கழி [விலை ரூபா ஒன்று

சிவமயம்.

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

## திருக்கைலாய பரம்பரை, திருக்கோவலூராதீனம்,
## ஸ்ரீமத் ஞானியார் மடாலயம்

சந்நிதி வீதி,
திருப்பாதிரிப்புலியூர்

நாங்கள் விசு ஐப்பசியில் கந்தர் சஷ்டித் திருவிழாவில், மடாலயத்தில், ஐந்து நாட்களிலும் செய்த சொற்பொழிவுகளைக் கேட்ட திரு. மு. இராசாக்கண்ணு முதலியார் சொற்பொழிவுகளைச் செய்யும் வேளையிலேயே எழுதி வந்தனர். அவற்றை அச்சிடல் வேண்டும் எனக் கருதுகின்றனர். அச்சிட்டவற்றைப் பார்த்தோம். நாங்கள் பேசினவையே பெரும்பாலும் ஒத்திருக்க எழுதப்பட்டிருக்கின்றன. இம் முயற்சியொரு நல்ல முயற்சியே; பலர்க்கும் பயன்படலாம் என எண்ணுகின்றோம். இவரது நன்முயற்சி மேன்மேலும் ஓங்குக. இவரும் நலம் பல பெற்று வாழ்க.

இங்ஙனம்
(கை ஒப்பம்)
**ஞானியார் மடாலயம்**

(தற்போதிருப்பு)
திருவண்ணாமலை
7—12—'41.

# பொருளடக்கம்

சு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

உ

வேலுமயிலுந்துணை

சிவசண்முக மெய்ஞ்ஞானதேசிகன் திருவடி வாழ்க

# முகவுரை

தண் தமிழ் ஞாயிறாய்த் தணவாது என்றும் ஒளிரும் **மறைத்திரு ஞானியாரடிகள்** பிறந்த பெருஞ் சிறப்பால் நம் நாடும் நம் உயிர் மொழியும் அடைகின்ற பயன் எண்ணில. அவர்களின் சொற்பொழிவு, 'கொழும் தேனும் செழும் பாகும் குலவு பசும் பாலும், கூட்டி உண்டால்' இனிப்பதினும் மிக இனிப்பதைக் கேட்டு மகிழ்ந்து அம்மகிழ்வில் அழுந்தி நில்லாதவர் எவர்!

இத்தகைய சிறந்த சொற் செல்வத்தை, என்றும் நிலைத்து நிற்கும் நிலையில் அச்சிடல் வேண்டும் என்ற எண்ணம் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்க்கு நீண்ட நாட்களாக உண்டு எனக் கழகக் கிளைநிலைய முகவர் **திருவாளர் வ. சுப்பையா பிள்ளை**யவர்கள் அடிக்கடி வற்புறுத்தி வந்தனர். சிற்சில குறிப்புக்களும் விரிவுரையாக எழுதிய சிலவும் அடியேன்பா லிருக்கின்றன வாயினும், அவை தொடர்ச்சியாக இல்லாமையை எண்ணி இதுகாறும் வாளா இருந்தனன்.

இவ்வாண்டுக் **கந்தர்சட்டி நாட்களில்** புலிசையில் இருக்கும் வாய்ப்பு அடியேனுக்குக் கிட்டியது. அஞ்ஞான்று அடிகள்பால் அடியேன் எண்ணத்தை விண்ணப்பித்து, ஐப்பசித் திங்கள் ஐந்தாம் நாள் தொடங்கி அடிகள் ஆற்றிய சொற்பொழிவுக ளாகிய **தோற்றம், வேல், தாரகன், சிங்கமுகன், சூரபதுமன்** எனும் ஐந்தினையும் அடிகளார் சொற்றொடர் பெரும்பாலும் அமையக் குறிப்பெடுத்தேன். அக்காலத்திலேயே முதலிரு சொற்பொழிவுகளை எழுதி அடிகளாரிடத்துப் படித்துக் காட்டித் தவறுகளைத் திருத்தியும் விடப்பட்டிருந்தவற்றை நிரப்பியும் ஒழுங்கு செய்து கொண்டேன். கார்த்திகை விழாவின் இறுதி நாட்களில்

அடிகளைத் திருவண்ணாமலையில் கண்டு வணங்கி மற்றைய மூன்று சொற்பொழிவுகளையும் முதலிரண்டைப் போலவே சீர்செய்து கொண்டேன். தெய்வயானை அம்மையார், வள்ளி அம்மையார் ஆகிய இருவருடைய திருமணச் சொற்பொழிவுகளும் வேறு பிறவும் அடிகள் திருவுள்ளத்துத் திருவருள்துணை கூட்டுதலால் தொடர்ந்து அச்சிடப்பெறும் என்பதைப் பணிவுடன் அறிவித்துக் கொள்கின்றனன்.

அடிகளார் சொற்பொழிவுகளைக் கேட்டவர்களுக்கும், கேட்க விழைபவர்களுக்கும் இச் சொற்பொழிவு நூல் சிறந்த விருந்தாகும்.

அடிகள் அன்புகூர்ந்து அருளிய சிறு குறிப்புக்களின் உதவி கொண்டும், அடியேன் அறிந்தவாறும் **அடிகளின் வரலாற்றுச் சுருக்கம்** ஒன்றினையும் எழுதிச் சேர்த்திருக்கின்றேன். பின்னர் அடிகள் வரலாறு பெரு நூலாக எழுதி வெளியிடப் பெறுதற்கு அடிகளாரின் திருவருள் முன்னிற்கும் எனவும் நம்பியிருக்கின்றேன்.

ஐந்து சொற்பொழிவுகளையும் சீர்பெற அச்சிட்டு உதவும் **சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்**, மேலும் இத்தகைய நற்பணிகளில் ஈடுபட்டுச் சிறக்க என்று என்னுள்ளத்தமர் இறை திருவருளை வேண்டி வணங்குகின்றேன்.

முருகனுக்குரிய சட்டி நோன்பு நாட்களில், முருகனை வழிபடு கடவுளாகக் கொண்டு விளங்கும் அடிகளாரின் திருவுள்ளத் தாமரையில் தோன்றித் ததும்பிப் பெருக்கெடுத்த நறுந்தேனாகிய இவ்வினிய விரிவுரைகளை, அடிகளின் திருவடிகளிற் பணிந்து தமிழன்னையின் இணையடிகளில் உரிமைப்படுத்துகின்றேன். இக் கடவுள் தேன் யாண்டும் தன் பெரும் பொருளாகிய நறுஞ் சுவையை இனிக்க ஊட்டி என்றும் நின்று நிலவுவதாக.

செவ்வேளகம்,
18, பவழக்காரத் தெரு,
சென்னை

இங்ஙனம்
மு. இராசக்கண்ணு

# கருத்துரை

*கரந்தைப் புலவர் கல்லூரியின் தலைவராகிய*
*நாவலர் பண்டித* **திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்**
*எழுதியது*

*தமிழ் நாட்டிலே கல்வியிலும், சொல்வன்மையிலும், மக்களை நல்வழிப் படுத்தும் தவநெறி யொழுக்கத்திலும் இஞ்ஞான்று தலைசிறந்து விளங்கும் பெரியார் திருப்பாதிரிப் புலியூர் திரு. ஞானியார் மடத்தின் தலைவராகிய மறைத்திரு. ஞானியாரடிகள் என்பதனை அனைவரும் அறிவர். ஏறக்குறைய அரை நூற்றாண்டின் மேலாக நாடெங்கணும் உலாப்போந்து தமது பொருணிறைந்த சொன்மாரிகளால் மக்களுள்ளத்தைக் குளிர்வித்து வரும் அவ்வருண்ஞானக் கொண்டலுக்கு உலகம் ஆற்றத்தக்க கைம்மாறும் உளது கொல்? நூற்றுக் கணக்கான தலைப்புக்களில் அடிகள் ஆற்றியுள்ள சொற்பொழிவுக ளெல்லாம் எழுத்துருவெய்தி நூல் வடிவில் வெளியிடப் பெறுமேல் அவை தமிழின் ஒப்பற்ற உரை நடை இலக்கியங்களாகத் திகழு மென்பது ஒருதலை. பல ஆண்டுகளாக மெய்யன்பர் பலரால் எதிர்பார்க்கப் பெற்ற இப்பணியானது அடிகளின் மாணுக்கராகிய வித்துவான் திரு. மு. இராசாக்கண்ணு, P. O. L., அவர்கள் வாயிலாக நிறைவேறத் தொடங்கியிருப்பது பெருமகிழ்ச்சி யளிப்ப தொன்றும். அடிகள் இவ்வாண்டு கந்தர் சட்டித் திருநாட்களில் ஆற்றிய தோற்றம், வேல், தாரகன், சிங்கமுகன், சூரபதுமன் என்னுந் தலைப்புக்களையுடைய ஐந்து சொற்பொழிவுகளைத் திரு. இராசாக்கண்ணு அவர்கள் எழுதித்தர, அவற்றைத் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் ஒரு புத்தகமாக அச்சிட்டு வெளிப்படுத்தி யுள்ளனர்.*

இக்கட்டுரைகள் யாவும் வழுவற்ற செஞ்சொற்களா லாகியவை; சிறு சிறு தொடர்களாலியன்றவை; யாவரும் உணரத்தக்க எளிமையும் இனிமையும் உடையவை. இவ் வாற்றால் அறிவுடையோர் எழுதும் உரைநடைகட்கு இவற்றை உரையாணி யெனல் வேண்டும்.

எடுத்துக்கொண்ட பொருளை வகுத்தும் விரித்தும் விளக்குதல், அவற்றிற்குத் தென்மொழி வடமொழிகளி லுள்ள உயரிய நூல்களிலிருந்து இன்றியமையா மேற்கோள் காட்டுதல், பலரும் அறியும் உவமைகளால் பொருளை விளங்கவைத்தல், உலக நடையுடன் சிறந்த நீதிகளை உளங் கொளச் செய்தல், சாத்திர நுணுக்கங்களை வரலாற்றோடு இயைவித்துத் தெளிவுறுத்தல், இடையிடையே எழுத்துச் சொற்பொருள் இலக்கண அமைதிகளும், குறிப்புப்பொருள், அணி முதலியனவும் காட்டிச் செல்லுதல், மொழிப்பொருட் காரணந் தெரிவித்தல் என்றின்னோரன்ன சிறப்புக்கள் கற் போர் உள்ளத்தில் பசுமரத் தாணிபோற் பதியுமாறு இவற் றின்கண் அமைந்துள்ளன. செய்யுட்களுக்கு உரைவிரிக்கும் அடிகளின் பேராற்றலை, 'தோற்றம்' என்னுங் கட்டுரைக் கண் 'மறைகளின் முடிவால்' என்னும் செய்யுட்கு எழுதிய விரிவுரையே நன்கு புலப்படுத்தும்.

எனவே, இவற்றைக் கற்போர் இலக்கிய அறிவே யன்றி, இலக்கணப் பயிற்சி, உலகியலறிவு, தத்துவ வுணர்வு, கடவுள்மாட்டன்பு முதலிய பலவகை நலங்களும் பெறுவர் என்பது உண்மை; உண்மை.

கரந்தை,<br>18—12—1941.

ந. மு. வேங்கடசாமி நாட்டார்.

உ

வேலு மயிலுந் துணை.

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

# மறைத்திரு ஞானியா ரடிகளின் வரலாற்றுச் சுருக்கம்

## பிறப்பு

சிவம் விளங்கும் திருப்பதிகள் பலவற்றைத் தன்னிடத்துக் கொண்டு திகழ்வது செந்தமிழ்நாடு. இது பண்டைநாள் தொட்டு முடியுடை மூவேந்தரால் ஆளப்பெற்று வந்தது. இதன் ஒரு பகுதி சோழ நாடு என்பது. இங்கு அறவோர் பலர் தோன்றினர்; அடியார் பலர் அருந்தொண்டு ஆற்றினர். 'புள்ளுறு புன்கண் தீர்த்த' சிபி இங்கு ஆண்டனன். மகனை முறை செய்த காவலன் ஆட்சியுடன் கூடியது. பொன்னியாறு வான்மறப்பினும் தான் வறத்தலின்றிப் பொய்யாக் குலக்கொடியாக விளங்கும் பெருமையினை உடையது.

இந்நாட்டில் தென்னாடுடைய சிவபிரான் எழுந்தருளப் பெற்ற பதி பல உண்டு. திருநாகேசுரம் என்பது அவற்றுள் ஒன்று. குடந்தைக்கு இருகல் தொலைவினுள் அஃது அமைந்திருக்கின்றது. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திகளாகிய மூவராலும் பாடப்பெற்ற பதி அது ஆகும். மூவரும் பாடிய ஆறு பதிகங்களைப் பெற்று விளங்குகின்றது. 'நாகேச்சுர நகருள், தலைவா எனவல் வினைதான் அறுமே'; 'நம்பர் நாளும் அமர்கின்ற நாகேச்சுரம் நண்ணுவார், உம்பர் வானோர் தொழச் சென்றுடன் ஆவதும் உண்

மையே', என்று அம்மை திருஞானம் உண்ட திருஞான சம்பந்தர் புகழ்ந்தனர். 'நச்சுவார்க் கினியர்போலும் நாகவீச் சரவனாரே'; 'ஆன அஞ்செழுத் தோதவந் தண்ணிக்கும், தேனர் போல்திரு நாகேச் சுரவரே', என்று சொற்குறுதி அப்பர் சொற்றனர். 'பிறையணி வாணுதலாள் உமையா ளவள் பேழ்கணிக்க, நிறையணி நெஞ்சனுங்க நீலமால்விடம் உண்டதென்னே, குறையணி குல்லைமுல்லை யளைந்துகுளிர் மாதவிமேல், சிறையணி வண்டுகள்சேர் திருநாகேச் சுரத் தானே', என்று சொல் தமிழால் கூறினர் சுந்தரர். இங்ஙனம் அப் பதி சைவ சமய குரவர் பாமாலை யணிந்து விளங்கு கின்றது.

அந்நகரில் சென்ற நூற்றாண்டினிடைக் காலத்தில் அந்திவான்மதி சூடிய அண்ணலைச் சிந்தையில் என்ஞான்றும் சேர்த்திய பெரியார் அண்ணாமலை ஐயர் என்னும் பெயரினர் ஒருவர் வாழ்ந்தனர். அவர்தமக்குக் கற்பிற் சிறந்த பார்வதி அம்மையார் என்பவர் இல்வாழ்க்கைத் துணைவியராக விளங் கினர். இவர்கள் வீரசைவ மரபினைச் சார்ந்தவர்கள். இவர் தம் சமயமும் வீரசைவமாகும். இவர்கள் இல்லறம் என்னும் நல்லறத்தை இனிது நடத்தினர்.

இல்வாழ்க்கைக்கு ஆவதோர் அணிகலம் நன்மக்கட்பே றாகும். இவ்வுண்மையை வள்ளுவனார், 'மங்கல மென்ப மனை மாட்சி மற்றதன், நன்கலம் நன்மக்கட் பேறு', என்றனர். அந்நெறியே, சொல்லறம் பலவற்றுள் சிறந்த இல்லறவழி நின்ற இருவருக்கும், இறைவன் திருவருள் முன்னிற்கத் தமிழ்நாடு செய்த நற்றவப் பயன் சிறந்தொளிரத் தமி ழணங்கு தன் முன்னைய நன்னிலை எய்த அடிகளார் பிறந் தனர். ஸ்ரீமுக ஆண்டு வைகாசித் திங்கள் 4-ம் நாள் வியாழக் கிழமை மூலநாள் தனுசு ஓரையே அடிகளார் தோன்றும் பெருமை பெற்ற காலமாகும்.

திசையனைத்தின் பெருமையெலாம் தென்றிசையே வென்றேற
மிசையுலகும் பிறவுலகும் மேதினியே தனிவெல்ல
அசைவில்செழும் தமிழ்வழக்கே அயல்வழக்கின் துறைவெல்ல
விசைமுழுது மெய்யறிவு மிடங்கொள்ளு நிலைபெருக.

—திருஞா - புராணம்.

எனும் செய்யுள் ஈண்டு எண்ணி மகிழ்தற்குரியது.

அடிகளாரின் தந்தையாராகிய அண்ணாமலை ஐயர் வீர சைவர் இல்லங்களில் திருமணங்கள் போன்ற நன்னிகழ்ச்சி களையும் நீத்தாருக்குச் செய்யத்தகு மரபினவாகிய கடன்களை யும் செய்து வைத்துக்கொண்டிருந்தனர்.

ஐயரவர்களுக்கும் அவருடைய முன்னோருக்கும் ஞான ஆசிரியராகவும் சமய குரவராகவும் இருந்தவர் **கோவல் மடாலயத்து ஞானியார் அடிகள்.** மேலும் நம் அடிகளாரின் தந்தையார், சிறிய தந்தையார், பாட்டனார் முதலியோர் அம் மடத்திலேயே செயலாளர்களாகத் தொண்டு புரிந் திருந்தனர்.

திருநாகேசுரத்து மக்கள் அடிகள் பிறந்த வீட்டினை ஐயர் வீடு என்றழைப்பர். 'ஐ' என்பது தலைமை என்னும் பொருளை யுடையது. பல மொழித் தலைமை, அறிவுத் தலைமை, ஞானத்தலைமை ஆகிய எண்ணில தலைமைகளைப் பெற்று விளங்கும் அடிகளார் தலைமையை யுடையார் (ஐயர்) வீட்டில் பிறந்தமை நினைவு கூர்தற்பாலது.

பிறந்து ஆறுமாதங்களும் நிரம்பாக் குழந்தையாக இருந்த காலத்திலேயே அடிகள் புலிசை மடாலயத்திற்குக் கொண்டுவரப்பட்டனர். அஞ்ஞான்று பட்டத்திலிருந்த அடி களின் திருமுன்னர்க் குழவிப் பருவத்திலிருந்து வளர்ந்து வந்தனர். மறுஒழித்த இளம்பிறை நாள்தோறும் கலை நிரம்ப வளர்வதை அடிகள் வளர்ச்சிக்கு உவமை கூறலாம். கல்வியைக் கற்பிக்கும் காலம் நெருங்கியது.

## கல்வியும் பட்டமும்

முதல் முதலில் அடிகளுக்குத் தெலுங்கு கற்பிக்கப் பட்டது. தெலுங்கு மொழி ஆசிரியராக விளங்கியவர் சென்ன கேசவலு நாயுடு என்போராவர். அடுத்துத் "தெருந் தோறும் இனிதாம் தமிழ்" மொழியைக் கற்றனர். அரசியல் மொழியாம் ஆங்கிலம் அடுத்துப் படித்தற்கு உரிய தகுதியைப் பெற்றது. அம்மொழியினை உயர்நிலைப் பள்ளி யில் பயின்றனர்.

சிவசண்முக பரமசிவ மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமி கள் எனும் சீரிய அறிஞர், அடிகட்கு முன்பு பட்டம் எய்தி இருந்தவர்களாவார். அவர்களின் உடல்நிலை நன்முறையில் இல்லை என மருத்துவர் நவின்றனர். அடுத்துப் பட்டம் எய்தவேண்டியவருக்கு முன்னிருந்த அடிகளே பட்டத்தைச் சூட்டவேண்டியது மடத்து மரபு. ஆதலினாலே உயர்நிலைப் பள்ளியின் உயரிய வகுப்பில் படித்துக்கொண்டிருந்த அடிகள் மடத்தைச் சேர்ந்ததும் அவர்கட்கு அடுத்தநாள் பட்ட மேற்பு நாள் என்பதை அறிந்தனர். அங்ஙனமே 1889-ம் ஆண்டு நவம்பர் மாதம் 7-ம் நாள் அடிகளார் பட்டத்திற்கு வந்தனர். பட்டம் சூட்டிய பேரடிகள் நம் அடிகட்கு, சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் என்ற பட்டப் பெயரைச் சூட்டினர். ஆகவே, திருக்கைலாய பரம் பரை திருக்கோவலூராதீனம் ஐந்தாம் பட்டத்து அருள் ஞானியாராக அடிகள் அமைந்தனர்.

தெலுங்கு மொழியைத் தேர்ந்து தமிழ்க்கடலில் ஆழ்ந்து ஆங்கிலமொழி நுணுட்பம் உணர்ந்த அடிகள் வட மொழி எல்லையையும் ஏற்றத்தையும் முற்றும் உணர முற் பட்டனர். கூடலூர் நேடிவ் கல்லூரியில் தமிழாசிரியராக விளங்கிய திரு. தெய்வசிகாமணி ஐயர் என்பவரும் திரு. கி. மு.

சாமிநாத ஐயரென்பவரும் அடிகளுக்குத் தமிழாசிரியராக விளங்கினர். வடமொழி கற்பித்தவர் அக்கல்லூரியின் வடமொழி ஆசிரியராகிய திரு. இராமநாத சாஸ்திரிகள் ஆவார். தெலுங்கினை நான்காண்டுகளும் ஆங்கிலத்தை ஏழாண்டுகளும் தென்மொழி வடமொழிகளைப் பதினைந்தாண்டுகளும் கற்றுச் சிறந்தனர்.

## தொண்டுகள்

தமிழ் வளம், தெலுங்கின் சிறப்பு, ஆங்கில மொழியறிவு, வடமொழியின் வன்மை ஆகியவற்றால் பொலிகின்ற அடிகள் தமிழகத்திற்குச் செய்திருக்கும் தொண்டுகள் சொல்லிலும் எழுத்திலும் அடங்குவன அல்ல. இற்றைக்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர்த் தமிழ்நாடும் தமிழ்மொழியும் அடைந்திருந்த நிலைமை எத்தகைத்து என்பதை யாவரும் அறிவர். வடமொழியின் வழிமொழி தமிழ் என்று நாக்கூசாது கூறிய மக்களே எங்கும் இருந்தனர். அன்றியும் ஆங்கிலப் புயலில் தமிழ்ப் பயிர் அலையுண்டிருந்தது! கூட்டங்களில் தமிழில் பேசுவோர் அரியர் என்பது உறுதி. அந்தகைய நாள்களில் மொழிப்பெருமையைப் பரப்புதற்குக் கழகங்கள் மிகுதியும் வேண்டியன என்பதை அடிகள் அறிந்தனர். மற்றவர்களிடம் கூறிக் கழகங்களை நிறுவுமாறு சொல்லாது தாமே மேற்கொண்டு செய்து மற்றவர்களுக்கு வழிகாட்டியாக நின்றனர். சோபகிருது ஆண்டில், வாணி விலாச சபை என்னும் பெயருடன் தமிழ்க் கழகம் ஒன்றை மடத்திலேயே தொடங்கி வைத்தனர். பல கழகங்கள் நாட்டில் சின்னாள் தோன்றி நின்று அழிகின்றன. அவ்வாறின்றி அக்கழகம் இன்றுவரை நடந்து வருவது எண்ணத் தக்கது. டாக்டர் உ. வே. சாமிநாதய்யரவர்கள், நான்காம் மதுரைத் தமிழ்ச்சங்கம் நிறுவியோரும் தமிழ்ப் பணியே எந்தம்

தலைப்பணி என்று அப்பணியை மேற்கொண்ட சிற்றரசரு மாகிய பாண்டித்துரைத்தேவர் முதலிய பேரறிஞர்களே முதலாண்டு முதலாக நடந்த ஆண்டு நிறைவிழாவில் தலைமை தாங்கினர். இவ்வாறு தமிழறிவு பெற்றோரும் தமிழ்ப் பற்றுச் சிறந்தோரும் தலைவர்களாக விளங்க ஆண்டு நிறைவு விழாக்கள் நடந்து வந்திருக்கின்றன.

இன்று ஒருவாறு சமயப் போரடங்கித் தமிழ்நாடு விளங்குகின்றது. முப்பதாண்டுகளுக்கு முன்னர்ச் சைவம் என்ற சிங்க ஏற்றினைப் பல மதக்களிறுகளும் தாக்கி நின்றன. சைவ சமயத்தின் அடிப்படையான உண்மைகளைப் பொது மக்களுக்குச் செவ்வையாக அறிவித்து அது கொண்டு அவர்களை மோதி நின்ற பல வேற்றுமதங்களின் தகுதிகளை அறிவிக்க வேண்டி இருந்தது. இதனை அறிந்த அடிகள் சைவ சித்தாந்த மகா சமாசத்தைத் தம் மடத்தி லேயே தோற்றுவித்தனர். இவர்களால் தோற்றுவிக்கப் பட்ட அச் சமாசம் தமிழ் நாட்டில் புரிந்துவரும் சைவத் தொண்டினைச் சிறப்பாகச் சைவர்களும் பொதுவாக யாவ ரும் அறிந்ததே. அச் சமாச ஆண்டுவிழா வேலூரில் கூடிய இரு முறையிலும் புலிசை, கூடலூர், புதுவை, திருவெண் ணெய் நல்லூர் ஆமிடங்களில் கூடிய காலங்களிலும் அடிகள் தலைவராக இருந்து திறமுற நடத்தினர். இவையே அன்றிச் சென்னையில் நடந்த இரண்டு சைவசித்தாந்தச் சிறப்புக் கூட் டங்களிலும் தலைவராக இருந்தனர். இவ்வாண்டிலும் திரிச் சிராப்பள்ளியில் நடக்கும் கூட்டத்திற்குத் தலைவராகத் தேர்ந்து கொள்ளப்பட்டுள்ளார்கள்.

தமிழார்வம் பொங்கித் தவழும் உள்ளம் திருவாளர் உமாமகேசுவரன் பிள்ளையவர்களின் உள்ளம். அன்னவர்தம் மூத்த உடன் பிறந்தார் ஆகிய திருவாளர் இராதாகிருட்டின பிள்ளையவர்களின் நல்லுணர்வின் வன்மையாலும் முன்ன

வரின் உணர்ச்சி வெள்ளத்தாலும் வளர்க்கப்படும் பயிராகத்திகழும் தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் ஏழும் எட்டும் ஆகிய ஆண்டு நிறைவு விழாக்களில் அடிகள் தலைவராக இருந்தனர். மேலும் அச்சங்கத்தின் 25ம் ஆண்டு நிறைவு விழாவாகிய வெள்ளி விழாவிலும் தலைமை தாங்கினர்.

தமிழ் நாட்டு மக்களிடையில் மொழிப் பற்றையும் நாட்டுப் பற்றையும் செவ்வன் பரப்புதற்கு முற்படும் அறிஞர்களிடம் அடிகளுக்கு அளவிலா மகிழ்ச்சி யுண்டு. மேலும் மேலும் அன்னார்தமக்கு ஊக்கத்தை ஊட்டி அவர்தம் முயற்சியைப் பாராட்டும் தன்மையையும் பெற்றனர். கரந்தைச் சங்கத்தின் உயிர் நாடியாகி ஒப்பற்ற வழக்கறிஞராக உழைத்த உயர்தனிப் பெரியாராகிய உமாமகேசுவரன் பிள்ளையவர்களுக்குத் 'தமிழ்ப்புரவலர்,' என்ற உயரிய மிகப் பொருத்தமான பட்டத்தை அடிகளார் தம் அறுபானாண்டு நிறை விழாவில் தந்தமையே இதற்குச் சிறந்த சான்றாகும்.

வாணி விலாச சபை, சைவ சித்தாந்த மகா சமாசம் போன்ற மிகப் பெரிய சங்கங்களைத் தமிழ் மொழியின் வழியாலும், சைவத்தின் வழியாலும் தமிழ்நாடு முழுவதும் நிறுவி வருகின்றனர். இக் கழகங்களே இன்று ஒருவாறு நம் மொழிப் பெருமையையும் சமயத்தினையும் காப்பாற்றி வருகின்றன எனின் மிகையாகாது. அறுபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகியும் இன்றும் அத்தகைய ஊக்கம் அடிகள் பால் காலை எழும் கதிரென விளங்குவது அறிதற் பாற்று. சென்ற சின்னாட்களின் முன்னர்த் திருவண்ணாமலை கார்த்திகை விழா நாட்களில் சத்தி விலாச சபையில் தலைமை தாங்கிச் சொற்பொழி வாற்றிய அடிகள் அப்பெருநகரில் தமிழ்க் கழகம் ஒன்றிருத்தல் வேண்டும் என்ற எண்ணத்தினராய் அதற்காக்கமாய்த் திகழும் திரு. முத்துக்குமாரசாமி முதலியார் வழக்கறிஞர் திரு. நாராயணசாமி முதலி

யார், பி.ஏ., பி.எல்., திரு. பெருமாள் முதலியார், எம்.ஏ., எல்.டி., முதலியோர் சார்பில் கார்த்திகைத் திங்கள் 20-ம் நாள் வெள்ளிக்கிழமை (5-12-'41) மாலைக் காலத்தில் தொடங்கி வைத்தமை பெருஞ் சான்றாய் விளங்குகின்றது.

## சொற்பொழிவுத் திறன்

அடிகள் சொற்பொழிவால் தோட்கப்படாச் செவி தமிழ் நாட்டில் இல்லை என்பது உறுதி. சொற்பொழிவாளர்களுக்குப் பேரெல்லையாய்க் கலங்கரை விளக்கமாக அடிகள் விளங்குகின்றனர். எளியவும் இனியவுமாகிய சொல்லம்புகளால் கேட்போருளத்து இருட்பகைவனை அழிக்கும் வீரச் செல்வம் அடிகட்குண்டு. சொற்பொழிவினைக் கேட்டுக் கொண்டிருப்போர் 'தன்னை மறந்தாள் தலைப்பட்டாள்' என்ற சொல்லரசர் சொற்களுக்கு இலக்காய் அவர்தம் பேருரையாகிய உறையினுள் அடங்கிக் கிடப்பர். ஐம்பொறிகளும் வேறு தொழிலில் ஈடுபடமாட்டா; கண்கள் அவர்தம் திருமுகமண்டலத்தினின்றும் பெருகும் கருணைக் கடலில் நீந்தி நிற்கும்; காதுகள் அவர்கள்தம் திருவாயினின்றும் வெளிவரும் சொல்லமிழ்தை மாந்திக் களிக்கும்; உள்ளம் ஒன்றினையும் உன்னாது அடிகளார் சொல்லிச் செல்லும் நெறிவழி இயைந்து நிற்கும்; இவ்வாறு பேசும் பேச்சு வன்மை பெற்று வாழ்வோர் நம் தமிழகத்தில் மிக அரியராவர்; கல்லாத எளிய மக்களுள்ளத்திலும் கற்ற அறிஞரிடத்திலும் இறைவன் வேறுபாடின்றி எழுந்தருளி ஆகும் நலன்களை அவரவர் அறிவுநிலைக்கேற்பவும் வினைநிலைக் கேற்பவும் ஊட்டுமாறுபோல அடிகளாரும் கற்றவர் கல்லாதவர் என்ற இருதிறத்தினரும் ஒரேகாலத்தில் அறிந்து மகிழ் சிறக்கப் பேசும் பெருமையினர். அவர்கள் சொற்கள் கேட்டார் செவியில் என்றும் ஒலித்துக்கொண்டிருக்கும்.

தமிழ் வழங்கும் மாவட்டங்களிலெல்லாம் அடிகள் சொற்பொழிவு ஆற்றியுள்ளார். அவர்கள் இதுவரை செய்துள்ள சொற்பொழிவுகளைக் கணக்கெடுப்பின் அவை ஆயிரம் எனும் பேரெண்ணைக் கடந்து நிற்கும் என்பதில் எட்டுணையும் ஐயமின்று.

சைவசமய ஆசாரியர்களாகிய நாவரையர் முதலியோர் தம் மண்ணுலக வாழ்வின் பெரும் பகுதியைச் சிவபிரான் எழுந்தருளும் திருக்கோயில்தோறும் சென்று அங்கு இறைவனடிகளை வழுத்தியதில் கழித்தமையையே காண்போம். அங்ஙனமே நம்மடிகளார் சிவிகையிலேயே செல்லும் கட்டுப்பாட்டினராயினும் தென்னாட்டில் தேவாரம் பெற்ற திருக்கோயில்களெல்லாவற்றிற்கும் சென்று இறைவனை வணங்கிச் சைவர்களுக்கு நல்வழி காட்டியுள்ளார். இறைவனைக் கோயில்களில் வணங்குதற்காக வடநாட்டிற்கும் யாழ்ப்பாணத்திற்கும் செல்லும் விருப்பமும் அடிகளுக்குண்டு.

## பாடங் கற்பித்தல்

மாணவர்களுக்குத் தமிழ் கற்பிக்கும் ஆற்றல் அடிகளிடத்தில் காணப்படும் உயர் சிறப்புகளுள் ஒன்றாகும். ஒரு செய்யுளை ஒருமுறை சொல்லி விட்டுவிடும் வழக்கம் அவர்கள்பாலில்லை. அவர்களிடத்துக் கற்றோர் கற்ற நூல்களின் நுண்பொருளையும் மாண்பொருளையும் கனவிலும் தவறின்றிக் கூறுவர். ஏன்? பிண்டம், பொழிப்பு, பதவுரை, மேற்கோள் முதலியவற்றை மேற்கொண்டு கேட்போர் உளங்கொளக் கூறிவைப்பர். அடிகள்பால் ஒரு செய்யுளை ஒருமுறை கேட்பின், அச் செய்யுளின் முழுக்கூற்றினையும் நன்மாணவர் அறிந்துகொள்வர். சொற்பொழிவிலும் அவர்கள் செய்யுளைப் படித்துக் காட்டிக் கூட்டிப்,

பிரித்துக் காட்டிச், சொற்பொருள், சொல்நயம், பொருள்நயம், அமைந்துள்ள இலக்கணச் சிறப்புக்கள் ஆகியவற்றைக் கூறக் கேட்டோர் மறவார் என்றால் பாடம் கற்பிக்கும் நெறியினைப் பற்றிச் சொல்லுதலும் வேண்டுமோ? தம்பால் கற்கும் மாணவர்களின் முன்னேற்றத்தில் அடிகள் அளவிறந்த கருத்துடையவர்கள். பல பெரும்புலவர்களை ஆக்கிய ஞானப் புலவராக அடிகள் வீற்றிருக்கின்றனர்.

பாடம் நடந்துகொண்டிருக்கும் காலத்தில் எவரேனும் அடிகளைக் காணவரின் அவர்களுடன் பின்பற்றும் நெறியில், நடந்துகொண்டிருக்கும் பகுதியின் முன்பின் முதலியவற்றைச் சுருக்கிக் கூறி அவர்களையும் உடனிருந்து கேட்டு மகிழும்வண்ணம் செய்வர். மாணவர்களுக்குப் பாடம் கற்பித்தலுக்குக் காலவரையறையை அடிகள் கொண்டது இந்நாள்வரை இன்று. கால் எலும்பு முறிந்து நடக்கும் தொழில் முயற்சியும் இன்றி இருந்த காலத்திலும் குன்றாத ஊக்கத்துடன் அலர்ந்த தாமரையினை வென்ற முகப்பொலிவுடன் பாடம் கற்பித்துக் கொண்டிருந்தனரெனின் இவர்களின் கைம்மாறறியாக் கடப்பாட்டினை எச்சொல் கொண்டெழுதுவது!

உடல்நிலையில் கருத்தூன்றாது சொற்பொழிவுக் காலங்களில் உணர்ச்சி மிகுந்திருப்பர் அடிகள். ஐந்தாண்டுகளுக்கு முன்பின்னாக வேலூரில் சைவ சித்தாந்த மகா சமாசம் நடந்தபோது அடிகள் தலைமை வகித்தனர். முதல் நாள் தலைமை உரையின் பின்னர் இரவில் அடியேன் கை கால் பிடித்துக் கொண்டிருந்த காலத்தில் அடிகளின் உடல் தொட முடியாத நிலையில் சூடாக இருந்தது. குறைந்தது 103° அளவு சூடாகவாவது இருந்திருக்கும். 'இவ்வாறு உடல்நிலை இருக்கும்போது அடிகள் பேசுதல் நன்றாகக் காணப்படவில்லை' என்று தழுதழுத்துக் கூறிய என்னை நோக்கி,

'பேசும்பொழுதே உயிர் நீங்கினும் கவலை இல்லை. கடமையை எந்நிலையிலிருந்தும் செய்தே ஆகவேண்டும்', என்றனர். அடுத்த நாளும் அதற்கடுத்த நாளும் அந்நிலைய உடம்புடனேயே சொற்பொழி வாற்றினர்! தமிழன்னையின் அன்பும் இறை முருகன் திருவருளும் நிரம்பப் பெற்ற அவர்தம் உடற்கு எவ்வித ஊறும் நேராதென்றே கூற வேண்டும். உடல் தொல்லை மிகப் பல வந்தன; சென்றன; அவர்களின் திண்ணிய மனநிலையை அவை ஒன்றும் செய்தன அல்ல.

"கரவா கியகல் விஉளார் கடைசென்று, இரவா வகை மெய்ப் பொருள்ஈ குவையோ", எனும் திருப்புகழ் முனிவரின் வாக்கால் 'முத்தமிழால் வைதாரையும் வாழ வைக்கும்' முருகனை வேண்ட வேண்டிய தொல்லை அடிகளின் மாணவர்களுக்கு இல்லை.

## அறுபானாண்டு நிறைவு

ஸ்ரீமுக ஆண்டு வைகாசித் திங்கள் மூலநாளுடன் அடிகளின் அறுபானாண்டு நிறைந்தது. அப் பெருநாளைத் திருநாளாகத் தமிழ்நாடு கொண்டாடியது. இருமொழிப் புலவராய் அண்மையில் மணிவிழாக்கொண்ட **பண்டிதமணி கதிரேசன் செட்டியாரவர்கள்** தலைமையில் அடிகளார் மணிவிழா மடாலயத்தில் நடைபெற்றது. தமிழ்ப் புலவர்களும் ஏனைய அன்பர்களும் அறிஞர்களும் ஒன்றுபட்ட நினைவுடன் நாடும் மொழியும் சைவமும் நலமடைய அடிகளார் நீண்ட வாழ்நாள் எய்த வேண்டும் என்று காலத்திற்கு அப்பாற்பட்ட கண்ணுதல் அடிமலரை வணங்கி வாழ்த்தினர்.

## கல்லூரி நிறுவல்

கல்வி ஒன்றே மக்களின் கண்களைக் கூர்ந்து நோக்கச் செய்யும் வன்மையது; உள்ளத்து மயக்கத்தை ஒழிக்கும்

ஒளிக்கடவுள்; ஆணவம் முதலியவைறறை அராவும அரம், என்று சிறப்புற அடிகளுணர்ந்தனர். இந்நாளில் கல்வி பண முடையாருக்கே; ஏழைக்குக் கல்வி நீண்ட தொலைவிலிருக்கின்றது; ஆதலின் ஏழை மாணவர்கள் தம் தாய்மொழிப் பயிற்சியையும் சிறிது ஆங்கிலத்தையும் கணிதத்தையும் பிற வற்றையும் அறிதற்குக் கருவியாகத் தம் மணிவிழா நாளில் ஒரு கலாசாலையைத் திறந்தனர். அதன் செலவிற்கென ரூ. 10,000 ஒதுக்கி வைத்தனர். இந்நாள்வரை அக்கலாசாலைக்குத் தலைமை ஆசிரியராக இருந்து விளங்குபவர் வீர சைவ மரபினராகிய திருவாளர் உருத்திரசாமி ஐயர் என்பவராவர். திருப்பாதிரிப்புலியூரைச் சார்ந்த பழைய வண்டிப்பாளையம், கரையேறவிட்டகுப்பம், புது வண்டிப்பாளையம், முருகேச நகர் முதலிய பல கிராமங்களிலிருந்தும் புலிசை நகரத்திலிருந்தும் அக் கலாசாலையில் நூற்றுக்கணக்கான மாணவர்கள் கற்கின்றனர். அக் கலாசாலை இல்லையேல் அத்துணை நூற்றுக் கணக்கான ஏழை மாணவ மாணவியர் கல்வி இன்றியே நிற்பர் என்பது எண்ணுதற்குரியது. செல்வந்தனுக்கு இட்ட உணவினைப் போலாது மிகப் பசித்த ஏழைக்கு இட்ட அமுதினைப்போல் அக்கழகம் இன்று விளங்குகின்றது.

தமிழ்க் கல்லூரி முதற்றேர்வுக்குத் தகுதியாகிய நுழைவுத்தேர்வுக்குத் தக்கவர்களாக மாணவர்களை ஆக்குவதே அக்கழகத்தின் மேல்வகுப்பின் நோக்கம். முதல் முறையாக அனுப்பப்பட்ட மாணவர்களுள் ஒருவன் நீங்க ஏனையோர் தேர்ந்தனர். அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் திருவையாறு அரசர் கல்லூரியிலும் தொடர்ந்து கற்று வித்துவான் முடிவுத்தேர்தலில் முதல் வகுப்பில் இருவரும் இரண்டாம் வகுப்பில் மூவருமாக வெற்றிபெற்றனர் எனின் மறைத்திரு ஞானியார் கல்விக் கழகத்தின் அடிப்படைக் கல்விச்சிறப்பு எவ்வாறுள்ளது என்பது விளங்கும்.

## பொன்விழா நிகழ்ச்சி

அடுத்துத் தமிழுலகம் அடிகளின் பொன் விழாவில் பொலிந்தது. வாரத்தாள்களும் திங்கள் வெளியீடுகளும் ஆங்கிலத்திலும் தமிழிலும் அடிகளைப் போற்றி எழுதின. அடிகள் பட்டம் எய்தி ஐம்பது ஆண்டுகள் நிறைந்த அந்நாள் பொன்னாள்; நன்னாள். 'அடிகளாரின் வைரவிழாக் கலப்பு எமக்கெல்லாம் யாம் காண அருளவேண்டும்', என்று மன முருகி வேண்டிய தமிழ் நாட்டாரின் வேண்டுகோள் நிறை வேற முருகனடிகளை வணங்குகின்றேன். பொன்விழாவினுக் குத், தலைவராகத் திரு. டி. கே. சிதம்பரநாத முதலியாரவர் கள் பி. ஏ., பி. எல். விளங்க, நாவலர் திரு. வேங்கடசாமி நாட் டார், மாவட்டக் கல்வித்தலைமையாளர் சைவத் திரு. சச்சிதா னந்தம் பிள்ளை பி. ஏ., எல். டி. பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் முதலிய அருந்தமிழ்ப் புலவர்கள் பெருஞ்சொல் விளக்கம் புரிந்தனர்.

## பண்புகள் சில

அடிகளார் தோற்றப் பொலிவு, கண்டோர் கண்களைவிட்டு என்றும் அகலாது. அடிகள் அவையில் பேசுதற்கென முற் படுகின்ற அளவிலேயே அவையிலுள்ளோர் தம் வீண்பேச்சு களைச் சட்டென முடித்துக் கொள்வர். அடிகள் முகத்தையே நோக்கி நிற்பர். திருநீற்றின் ஒளியும், மகர குண்டலங்களின் வனப்பும், பரந்த நெற்றியும், ஆழ்ந்தொளிரும் கண்களும் அவர்கள் அளிக்கும் செவி விருந்தின் முன்னர்க் கண்விருந் தென விளங்கும்.

மற்றவர்கள் பேச்சு நிலைக்கும் அடிகளின் பேச்சு நிலைக்கும் உள்ள பெரிய வேறுபாடு ஒன்றைக் குறிக்காதிருத் தற்கில்லை. பிறர் ஒருநாழிகையளவு பேசுவதற்குள் பால் முதலியவற்றை வேண்டுவர்; அடிகள் 15 நாழிகை (6 மணி

அளவு) யளவிற்குக் குறையாமல் பேசுவர்: அக்காலத்தில் ஒரு வாய் நீரும் அருந்தமாட்டார்கள். இச் சலியா நிலையில் வேறெவரையும் காண்கின்றேனல்லன்.

அடிகள் பேசும் பொருள் யாதாயிருந்தாலும், எடுத்துக் கொண்ட அப்பொருளில் நாடோறும் மக்கள் வாழ்வில் பயன் படுவனவாக உள்ளவற்றைத் தேர்ந்தெடுத்துக் காட்டி அவற்றைச் செயல் முறைக்குக் கொண்டுவரும் நெறியினையே வற்புறுத்துவர். முடிவுரையில் அடிகளின் வழிபடுகடவுளாகிய முருகனைப்பற்றிய வாழ்த்துச் செய்யுள் கூறுவர். செய்யுளை மட்டும் கூறி முடிக்க மாட்டார். அச் செய்யுள் கருத்தினையும் விளக்கமாக எடுத்துக் காட்டி உள்ளத்தில் பதியவைப்பர். 'இல்லறத்தானல்லேன்', என்னும் செய்யுளைக் கூறி 'உயர்ந்த திருப் போரூரா, என்றேநான் ஈடேறுவேன்', என்ற இறுதி யடியில் அமைந்துள்ள வினாவினைக் கூறிக்காட்டுவர். பின்னர் விடையாக, 'திருப்போரூரா என்றே நான், ஈடேறுவேன்', என்று விடையையும் கூறுவார். அக்காலத்தில் கேட்டு நிற்போர், 'ஆ,' என்று தம்மையே மறப்பர். 'உருவாய்', என்று தொடங்கும் அனுபூதிச் செய்யுளை மந்திரமாகக்கொண்டு காட்டிக் கூறுவதை மறப்போரும் உளரோ? ஆகவே, அடிகளின் முடிவுரை, கடவுள் நடமிடும் இடமாக விளங்கும்.

அடிகளோடு அளவளாவிக் கொண்டிருப்போர் பெறும் பயன் பெரும் பயனாகும். அவர்கள் உரையாடுங்கால் அரிய மணிகள் பல சிந்தும். ஆர்வத்துடன் அவற்றைத் தம்மதி யெனும் அணியில் அழுத்திப் பெருமை பெறுவோர் எண்ணில்லாதவர்க ளாவார்கள்.

'என்னை அடிகட்கு நினைவிலிருக்கின்றதோ?' என்று சிலர் வினவுவதைக் கேட்டிருக்கின்றேன். அக்காலத்தில் அடிகள், தங்களை இன்னாருடன் இக்காலத்தில் சந்தித்ததுண்டு; அப்பொழுது இன்னதைப்பற்றிய பேச்சு நடந்

தது என்று முப்பது நாற்பது, ஆம் ஆண்டுகளின் முன்னர் நடந்த நிகழ்ச்சிகளைச் சிறிதும் மறவாது அவ்வாறே எடுத்துக் கூறுவார். சிறந்த நினைவு வன்மை இவர்களுக்குண்டு.

இந்நாளில் மடாதிபதிகள் பலர் தங்கள் மடத்திலிருக்கின்றார்கள்; அவ்வளவில் அவர்கள் சைவத் தொண்டாற்றுகின்றார்கள். அடிகளோ,சைவசமய ஆசாரியர்களைப் போன்று பல இடங்களுக்கும் சென்று தொண்டு ஆற்றுகின்றார்கள். இவர்களைப் போன்றார் தமிழ்நாட்டிற் பலர் திகழ்தல் வேண்டும்.

வைதிக அளவில் மட்டும் அடிகளைக் காண்பதற்கில்லை. 'பழமையே வேண்டும்' என்று விடாப்பிடியாகக் கொள்ளும் கொள்கை அடிகளாரிடத்தில்லை. இவர்கள் மரபொடு முரண்படாச் சீர்திருத்தப் போக்கினைக் கைக்கொண்டவர்களாவார்.

வீரசைவ மரபினராகிய அடிகள் சைவத்திற்குத் தொண்டு ஆற்றுவதிலிருந்தே அடிகளின் சமரச மனப்பான்மை விளங்கும். வைணவம் முதலிய பிற வைதிக மதத்தினரும், கிறித்துவம் முதலிய புறமதத்தினரும் அடிகளை ஞான குருவாக ஏற்று வழிபடுகின்றார்கள் என்றால், அடிகளின் சமரச மனப்பான்மை எவ்வளவு நன்றாக விளங்கலுறுகின்றது!

இவை சில; கடலினை ஆய்வார் எவரே முடிவுறக் கண்டார்! அருட் கடலாக விளங்கும் அடிகளின் இயல்புகளை எவரே முடிவுவரை எடுத்தியம்ப முடியும்?

## நின்று நிலவுக!

சோழநாட்டில், திருநாகேசுரத்தில் அண்ணாமலை ஐயருக்கும் பார்வதி அம்மையாருக்கும் ஸ்ரீமுக ஆண்டில் பிறந்தருளிய அடிகள் தெலுங்கு, தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகியவற்றைச் செவ்வனே பயின்று பதினாறாண்டில் திருக்

கையிலாய பரம்பரை திருக்கோவலூராதீனம் ஐந்தாம் பட்டத்து அமர்ந்து வாணி விலாச சபை, சைவ சித்தாந்த மகா சமாசம் முதலிய மாபெருங் கழகங்களைத் தோற்றுவித்துச் சைவம் வளர்த்துத் தமிழ்மொழியைப்பேணிச்சொற்பொழிவு மணியாய் ஒளிர்ந்து நல்லாசிரியராய்ச் சிறந்து மணிவிழாவில் மகிழ்ந்து கல்விக் கழகம் நிறுவிப் பொன்விழாவில் பொலிந்து ஞானகுருவாய் எண்ணற்ற பண்புகளுடன் திகழும் அடிகள் என்றும் நின்று நிலவுமாறு என்றும் விளங்கும் இறை முருக னடிகளைச் சென்னி சேர்ப்பாம்.

தந்தைதாய் ஆவானும் சார்கதிஇங்(கு) ஆவானும்
அந்தம்இலா இன்பம்நமக்(கு) ஆவானும்—எந்தமுயிர்
தானாகு வானும் சரணாகு வானும் அருள்
கோனாகு வானும் குரு.

சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்
திருவடி வாழ்க.

உ

வேலுமயிலுந்துணை

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

---

# ஞானியாரடிகள் கந்தர்சட்டிச் சொற்பொழிவுகள்

---

## க. தோற்றம்

### காலாதீதன்

மெய்யன்பர்களே!

கிடைத்தற்கு அரிய மனிதப் பிறவியை எடுத்துள்ள நாம் காலத்துட் பட்டிருக்கின்ரேம். காலம் என்பது ஒரு தத்துவம். சிவாகமங்களில் கூறியாங்கு அது, மாயையில்—அசுத்த மாயையில்-தோன்றுகின்றது. தத்துவங்கள் மூவகையின. அவை, ஆத்தும தத்துவம், வித்தியா தத்துவம், சிவ தத்துவம் எனப்படும். அவை முறையே 24ம், 7ம், 5ம் ஆம். மூன்றும் முப்பத்தாறு என்க. இம் முப்பத்தாறு தத்துவங்களுக்கும் மக்களாகிய நாம் அடங்கிக் கிடக்கின்ரேம். இவற்றைக் கடந்து நிற்பவன் கடவுள். இத் தத்துவங்கள் அறிவற்றன. நாம் அற்ப அறிவினை யுடையோம்; ஆதலின் இவற்றிற்குக் கட்டுப்பட்டு வாழ்கின்ரேம். முற்றறிவினணுகிய முழுமுதற்கடவுள் பொதுவாக முப்பத்தாறு தத்துவங்களுக்கும் சிறப்பாகக் காலத்திற்கும் அப்பால் இருக்கின்ருன். அவன் பெயர்களில் ஒன்று, **காலகாலன்** என்பது. அத் தொடருக்கு இருவகைப் பொருள்கள் உள; சாத்திர விற்பத்தி (சாத்திர அருத்தம்), சரித்திர விற்பத்தி (சரித்திர அருத்தம்) என. முன்னதின்படி காலம் என்ற தத்துவத்தைக் கடந்தவன் என்க; பின்னதின்படி எமனுக்குப் பகைவன் என்க. இக் கருத்தினை வலியுறுத்தும் மற்ருெரு பெயர், ‘காலாதீதன்’ என்பது.

நாம் செய்ய வேண்டுவது காலத்தை யொட்டிக் காலத்தை வெல்வதே. கண்ணுடைய வள்ளலாரால் இயற்றப்பட்ட ஒழிவிலொடுக்கத்தில், தத்துவக் கழற்றி என்பது ஒரு பகுதி. அதன் பொருள் தத்துவத்தைக் கழற்றித் தள்ளுதல் வேண்டும் என்பதே. பிரபுலிங்க லீலையிலும் சிவப்பிரகாசர், மயக்குவதையே இயற்கையாகப் பெற்ற தத்துவங்களை யெல்லாம் நீக்க வேண்டும் என்பார்—"தத்துவம் முற்றும் மயக்குவ தள்ளி" என்றனர்.

இக்காலத்தை நாம் வெல்வதெப்படி? இறைவன் தயவு இயையின் நாம் வெல்லுதல் கூடும். "என்னை இப் பவத்தில் சேராவகை எடுத்து" என்பது அருணந்தி சிவாசாரியாரது சிவஞான சித்தியார்.

## ஐப்பசி நோன்பு

இறைவன் தயவைப் பெறுதற்கும் பெற்றுக் காலத்தை வெல்லுதற்கும் நாம் செய்யவேண்டியதென்ன? நம்மினும் அறிவால் சிறந்த பெரியோர் தம் அனுபவத்தால் அறிந்து கூறியவற்றைக் காலந்தோறும் இடைவிடாது செய்து வருதல் வேண்டும்.

இது என்ன காலம்? இம் மாதத்தின் பெயர் ஐப்பசி என்பது யாவரும் அறிந்ததே. இதன்பொருள் என்ன? இந் நாளில் அசுவனி முதலாக நாள்களை எண்ணுகின்றோம். பழங்காலத்தில் கிருத்திகை முதலாக எண்ணினர். இந் நியாயத்தைச் சோதிட நூலில் நன்கு அறியலாம். ஐப்பசி என்பது தமிழ்ப் பெயர். அது அசுவனியைக் குறிக்கும். பௌர்ணமி+நாள்=மாதத்தின் பெயர். இம்மாதப் பௌர்ணமி அசுவனியில் வருகின்றதால், இம்மாதம் ஐப்பசி எனப்பட்டது.

இம்மாதத்தில் யாது செயல் வேண்டும்? இம்மாதம் பெயரளவிலும் சிறந்தது. எதனால்? முதல்நாளுடன் (அசுவனியுடன்) கூடும் இயல்பு இதற்கு இருத்தலினால். இம்மாதத்தில் பூர்வம், அபரம் எனும் வளர்பிறை தேய்பிறை நாட்களில் இன்ன செய்தல் வேண்டும் என்று நம் பெரியோர் விதித்துள்ளனர். அவர்கள் தேய்பிறையில் செய்தலினும் வளர்பிறையில் செய்தலையே வற்புறுத்தி

ணர்கள்; தாமும் கைக்கொண்டனர். தேய்பிறையில் சிறந்த நாட்கள் துவாதசி, திரியோதசி, சதுர்த்தசி, அமாவாசை என்பன. வளர்பிறையில், பிரதமை, துதியை, திருதியை, சதுர்த்தி, பஞ்சமி, சட்டி என்பன. நமக்கு முக்கிய நாட்கள் பின் ஆறு நாட்களே. இவ்வாறு நாட்களில் சிறப்புக்கள் மிகுந்த விழவுக்களியாட்டத்தைப் பல இடங்களில் என் இளமைக் காலத்தில் கண்டுளேன். இக்காலத்தில் அது மிகக் குறைந்து காணப்படுகின்றது. இவ்வாண்டில் திதியின் நாழிகை குறைந்து வருதலால் ஆறு நாள்களின்றி ஐந்து நாள்களிலேயே முடிவுபெறுகின்றது.

இந்நாட்களில் எவ்வாறு இருக்கவேண்டும் என்று நம் பெரியோர்கள் கூறினர்? அவர்தம் கூற்றை மூன்றுவகையாக்கலாம். அவர்கள் நம்மை, நல்ல மனத்துடன், நல்ல வாக்குடன், நல்ல உடம்புடன் இருக்குமாறு கட்டளை இட்டனர். தெளிவாகக் கூறல் வேண்டுமென்றால் நல்ல எண்ணங்களை எண்ணுதல், நல்ல சொற்களைச் சொல்லுதல், நல்ல செயல்களைச் செய்தல் என்னலாம். இவற்றைக் கைக்கொளின் அழியும் இவ்வுலக வாழ்வில் ஈடுபடுவோர் அழியாப் பேரின்ப வாழ்வை எய்துவர் என்று அவர் எண்ணினர். அவ்வாறு நடப்பின் இவ்வுலக இன்பம், சுவர்க்க இன்பம், வீட்டின்பம் என்பவற்றை முறையே எய்தித் துய்ப்போம் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை.

## பயம் பக்தி

இம்மூவகை முயற்சியும் எவற்றைப் பற்றுக்கோடாகக் கொண்டு செய்தல் வேண்டும்? உயிராகிய தான், உலகம், கடவுள் என்ற மூன்றையுமே. இவற்றுள் தலைசிறந்த கடவுணர்வே வேண்டற்பாலதாம். உயிர்களுக்கு நல்ல குணங்கள் இரண்டுண்டு. இவ்விரண்டும் இயைந்திருத்தல் வேண்டும். அவையே **பயம்**, **பக்தி** என்பன. பயம் மட்டும் இருப்பின் **அவனை** அறிவுக் குறைவுள்ளவன் என்றே கொள்ள வேண்டும். 'அச்சமே கீழ்களது ஆசாரம்' என்றார் **வள்ளுவர்**. பயத்தை உண்டாக்கியோர் அசுரர். அவர் தீய வழியில் சென்று சுரர்க்கு அச்சத்தை உண்டாக்கித் தண்டனையை அடைந்தனர். பக்தியைக் கைக்கொண்டோர் தேவர். இவர் அசுரருக்குப் பயந்து பரமனை அடுத்து

நன்மை யடைந்தனர். பய பக்தியுடைய அமரர் இன்பம் எய்தியதும், பயப்படுத்திய அசுரர் பயமின்றி அழிந்தொழிந்ததும் இந்த ஆறு நாட்களிலேதான்.

ஆதலின் இவ் வாறு நாட்களும் சிறந்தன. இவை எல்லாரும் கைக்கொளற் குரியன. தேசம், மதம், காலம், நிலைமை முதலிய வேறுபாடுகளைக் கருதவேண்டுவதில்லை. வான்மீகி தம் இராமாயணத்தில், பாலகாண்டத்தில், விசுவாமித்திரர் வாயிலாக, "எவரா யிருப்பினும் கார்த்திகேயனிடத்தில் பக்தி பண்ணுபவர் புதல்வன் முதலிய பல பேறுகளைப் பெறுவர்" என்று சொல்லியிருப்பது கவனித்தற்குரியது.

## தோற்றம்

கூறிவந்த யாவும் தோன்றுதற்குரியனவாதலின் 'தோற்றம்' என்று தலைப்புக் கொண்டோம். சொற்கள் பிறந்தவாறே பொருளுணர்த்திச் செல்லவில்லை. அவற்றிற்கும் பொருள்வளர்ச்சியுண்டு. பிறந்த குழந்தை ஐவகைப் பூதங்களால் பல்வகை வளர்ச்சியை அடைவதேபோல் சொற்களும் புலவர்களால் பல பொருளுடையனவாக ஆக்கப்படுகின்றன. முதலில் தோன்று + அம் = தோற்றம்; தோன்றுதல் என்ற பொருளில் இருந்தது. பின்னர்ப் 'பிறப்பு' என்ற பொருள்கிட்டிற்று. 'ஓங்கு புகழ்' என வெகுதொலைவி லுள்ளாரும் அறியுமாறு நிறையும் சிறப்பினைப் பின்னருணர்த்திற்று. அடியேன் எண்ணம், தோன்றுமையையுடைய உள்பொருள் தோன்றுவது என்பதாகும். எந்தப் பொருள் தோன்றும்? உள்பொருளே தோன்றும்; தோன்றினும் மீளவும் மறையும் ஆற்றல் அதற்குண்டு. ஆதலின், முக்காலத்திலும் உள்ள பொருள், தோன்றும் இயல்பினை யுடையது எனக் கண்டோம்.

உள் பொருள்கள் மூன்று. அவற்றுள் நாம் கொள்ளும் பொருள் எது? உலகம் என்பது ஒன்று. என்றும் உள்ள பொருள் எனும் இலக்கணம் இதற்குண்டு. ஆனல், அறிவற்றது; தானே இயங்காதது. இதனை இயங்கச் செய்ய ஒரு தலைவன் வேண்டும். இத்தகைய பொருளுக்குத் தானே தோன்றும் ஆற்றலில்லையாதலின், இதனை விடுப்போம்.

அடுத்தது, என்றும் உள்ளது. ஆனல், தானே தோன்றும் இயல்பு இல்லாதது. பிறர் தோற்றுவிக்கத் தோன்றத்

தக்கது. அது எது? அப்பொருள் உயிர்களாகிய நாம் ஆவோம். நமக்குத் தோற்றம் நம்மாலில்லை. ஆகவே கூர்ந்து நோக்கின், முன்னதையே நாமும் ஒத்துள்ளோம்.

மூன்றாவதாக உள்ள உள்பொருள் தானே தோன்றக் கூடியது. பிறர் அதனைத் தோற்றுவிக்கவில்லை. தானே தோன்றும்; தானே மறையும். அது நம்மால் போற்றப்படுவது; பேசப்படுவது; வணங்கப்படுவது.

நாம் இதுவரைக் கருதிய யாவை? சிறந்த உள்பொருள் கடவுள். அதனிலக்கணம் எண்ணில. நாம் ஈண்டு மேற்கொள்வது ஒன்றே. பிறருக்குத் தான் அடங்காது பிற எல்லாவற்றையும் தன் கீழ் அடக்குவது என்பதாம். அத்தகைய பொருளின்-தோற்றமே ஈண்டு பேசுதற்குரியதாம்.

அதன் நிலை இரண்டு என முன்னர்க் கண்டோம். ஆனால், மூவகை நிலைகள் உள்ளன. மண்ணில் விதையினை நாம் இட்டால், மறைவுநிலை, காணும் காணா நிலையாகிய முளைத்து வரும் நிலை, நன்றாக வெளிப்பட்டுத் தெரியும் நிலை என மூன்று நிலைகள் இருக்கின்றன. அவ்வாறே ஆண்டவன் வெளிப்பாட்டிலும் மூன்று நிலைகளுள்ளன. அவற்றைச் சாத்திரத்தில், அரூபம், ரூபாரூபம், ரூபம் என்பர். அருவம், அருவுருவம், உருவம் என்பனவும் அவையே. உள்பொருளின் இத்தகைய தோற்றமே நம் பேச்சு. பெரியோர் வழி நின்று அத் தோற்றத்தைக் காண்போம்.

மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினால் அளக்கொ ணாமல்
நிறைவுடன் யாண்டு மாகி நின்றிடும் நிமல மூர்த்தி
அறுமுக உருவாய்த் தோன்றி அருளொடு சரவ ணத்தில்
வெறிகமழ் கமலப் போதில் வீற்றிருந் தருளி னானே.

## நிமல மூர்த்தி

நிமலமூர்த்தி தோன்றி வீற்றிருந் தருளினன் என்று முடிபு காண்க. தோன்றிய பொருள் யாது? ஒரு பொருளைப்பற்றி ஆராயப் புகின் மூவகையில் அடக்கலாம். கண் முதலியவற்றால் கண்டு துணிதல், அறிவால் ஆய்தல், நம்மினும் மேம்பட்டார் அறிவால் அறிந்துகோடல் என. இம் மூன்றும் சாத்திர வார்த்தைகளில், பிரத்தியட்சம், அநுமானம், ஆகமம் எனப்படும். நாம் எடுத்துக்கொண்ட

பொருள் இவ்வகையுள் அடங்காது. "சோதனையுள் அகப் படாச் சோதி உன்னைச் சோதிக்கத் துணிந்தே னந்தோ" என் றனர் திருவிளையாடற் புராணத்தில் பரஞ்சோதி முனிவர். ஆதலின் நிமலமூர்த்தி என்றார்; மலம் எனின், மக்கள் அறி வால் அறியப்படல், கண்ணால் காணப்படல், மனத்தால் சிந் திக்கப்படல் என்னும் அழுக்கு ஆகும். அளக்கப்படும் பொருள், அளவுகோல், அளத்தற்றொழில், அளக்கும் தலை வன் என அளவை நான்கு தகுதிகளில் அடங்கும். வடமொழி யில் இவற்றைப் பிரமேயம், பிரமாணம், பிரமிதி, பிரமாதா என்பர். ஆண்டவனைக் காணல் எவருக்கும் ஆகாததொன்று என்றறிவிக்கவே நிமல மூர்த்தி என்றார்.

## நிறைவுடன்

பொருள்களின் கலப்பு நிலையில் பல வகைகளுண்டு. கருங்கல்லை நீரிலிடின் தண்ணீர் அதன் மேற்பகுதியிலும் மற் றைப் பகுதிகளிலும் பொருந்த இருக்குமேயன்றி அதன் உள் ளெல்லாம் பாய்ந்திருக்காது. பஞ்சினாலாய பந்தொன்றை நீரில் வீழ்க்கின் யாண்டும் நீர் நிறைந்து நிற்கும். இந் நிலையில், நீக்கமற யாங்கும் இறை எழுந்தருள்கின்றனன் என்ற உண்மையைப் புலப்படுத்தவே நிறைவுடன் என்றார்.

## யாண்டுமாகி

ஆகாயம் எங்கும் நிறைந்திருக்கின்றது என்கின்றோம். கற் சுவரிடைக் காற்றிருத்த லில்லை. ஆகவே, சொல்லிய இத் தொடர் போன்று அல்லாமல், குறுக்கும் மறுக்குமாக இறை நிறைந்து நிற்பதுபோல (ஓதப் பிரமோத நியாயம் என்பர் வடமொழியில்) "குறுக்குமறுக்கு நியாயம்" நிறைகின்றனன் இறையோன் என்று அறிவிக்கவே யாண்டுமாகி என்றார்.

## நின்றிடும்

மரம் நிற்கின்றது; அவன் நிற்கின்றான் எனும் தொடர் களில் நிற்கின்றது, நிற்கின்றான் எனும் சொற்கள் நிற்ற லாகிய தொழிலை யுணர்த்துகின்றன. அங்ஙனமின்றி இருத் தல் எனும் அளவே அறிவிப்பதாக 'நின்றிடும்' என்ற வினை இருக்கின்றது.

## ஆறுமுக உரு

எவ்வாறு தோன்றினன்? 'அறுமுக உருவாய்த் தோன்றி'—உரு என்ற சொல், முன்னிலைமையாகிய அருவத்தினையும் அருஉருவத்தினையும் ஞாபகப்படுத்துகின்றது. ஆறு முகமுடைய பொருளாகத் தோன்றினன். 'ஆறுமுக உரு' என்றால் என்ன? ஆறுமுகம் எனற்கு எங்கும் உள்ளவன் என்பதே பொருள். இன்று இத்தொடர்ப்பொருளைச் சுருங்கக் கூறுகின்றேன். பெருந் திக்குகள், கிழக்கு, மேற்கு, வடக்கு,தெற்கு என்று நான்கே உள்ளன. அவற்றுடன், மேல் கீழ் என்ற இரு இடங்களும் காணக் கிடக்கின்றன. ஆதலின், இவ் வாறிடங்களிலும் நிறைந்தவன் ஆறுமுகன் என்க. நம் வடிவம்போன்றதன்று அவனுருவம். நாம் இருக்க இடம் விரும்புகின்றோம். அவனுக்கு அங்ஙனம் இடம் வேண்டியது இல்லை. "ஐந்து முகத்தோ டதோமுகமும் தந்து" என்றதனைக் காண்க. ஆறுவதாகிய முகம், கீழ் நோக்கிய முகம்; அதோமுகம் எனப்படும். அம் முகத்தை அறிந்தோர் நல்ல ஞானிகளே. எளிய மக்கள் ஐந்துமுகம் என்பார். என்முன் இருக்கும் இப் பெட்டிக்கு எத்துணைப் பக்கப் பலகைகள் இருக்கின்றன என்றால், அடிப் பக்கம் இருக்கும் பலகையை எண்ணாதோரும் அறியாதோரும் ஐந்து என்பர். அறிந்தோர் ஆறென்பர். அவ்வாறே ஆறுவது முகம் அறிஞராயோரால் சிந்திக்கப்படும் சிறப்புடையது. "அறிஞராயோர் சிந்திக்கும் தனது தொல்லைத் திருமுகம் ஆறும் கொண்டான்" என்றார் கச்சியப்ப சிவாசாரியார். ஆதலாலேதான் குருவாகவும் சீடனாகவும் ஆதற்குரிய சிறப்பு முருகனுக்கு வாய்ந்தது. 'ஆறும்' என்பது முற்றும்மை. ஏழாவது முகம் ஒன்றில்லை என்றறிக.

சர்வத்திர பரிபூர்ணன் எனும் அவன் பெயரைக் காண்க. இது வடமொழிப் பெயர். தமிழில் 'நிறைவுடன் யாண்டுமாகி' என்பது அத்தொடர்க் கருத்தை உட்கொண்டிருக்கின்றது.

சர்வத்திர=யாண்டுமாகி
பரிபூர்ண =நிறைவுடன்

காலம், தேசம், வத்து : (காலம், இடம், பொருள்) என்ற பாகுபாடு நமக்குண்டு. ஒரு காலத்தில், ஓர் இடத்

தில், ஒரு பொருளுடனேதான் நாம் இருக்க முடியும். கடவுள் இவற்றைக் கடந்தவனுதலால், எக்காலத்திலும், எவ்விடத்தும், எப்பொருளுடனும் இயைந்து நிற்கும் இயல்பு உண்டு. இம் மூன்றையும், 'பரிச்சேதத் திரயம்' என்பர். நீ எங்கிருக்கின்றாய்? என்ற வினவிற்கு விடையாக, கடவுள், "செல்லுழற் குழலீர், தேயமோ பரதேயம்" என்றனன். ஆகையினுலேதான், எல்லாவற்றிற்கும் அதீதனுகிய அவனை 'அறுமுக உருவாய்த் தோன்றி' என்றார். மேலும், எல்லாவற்றிற்கும் அப்பாலாயவன் என்பதை அறிவிக்க எழுந்த வேதம்—"விசுவாதீதன்" என்றது. அவ் வேதக் கருத்தே சிவஞந்துவ விவேகத்தில்,

> " விச்சுவா திகனும் விசுவசே வியனும் விமலனீ யேஎன மறைகள்
> நிச்சய மாக முழங்கவும் "

என்று கூறப்பட்டுள்ளது.

உருவாய்த் தோன்றிய பொருள் முன் எவ்வாறு இருந்தது? விளக்கினைக் காணுங்கள். இது பார்க்க முடிவது; பகுக்கக்கூடாதது. இதுவே அருஉருவம் எனப்படுவது. இதற்கு முற்பட்ட நிலை அருவம் என்பதாகும்.

## அருளொடு

தோன்றுதற்குக் காரணம் யாது? அருளொடு என்றார். இச் சொல்லில் காணப்படும் 'ஒடு' ஊசியொடு குயின்ற தூசும் பட்டும், என்றாற் போல, 'ஆல்' என்னும் கருவிப் பொருளில் வந்துளது. ஆகவே 'அருளால்' என்க.

## மறைகளின் முடிவால்

உபநிடதம் என்பது வேதத்தோ டியைபுடையது. பல உபநிடத்துக்கள் ஒவ்வொரு வேதத்துடனும் ஒட்டிக் காணப்படுகின்றன. இக்காலத்து வேதம் நான்கென்பர். இந்நான்கென்னும் தொகையை யொட்டியே நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பாயிர உரையில் வேறு வகையாகக் கூறினர். உள் நுழைந்து கவனிப்பின் 'வேதம்' எண்ணில்லாதன என்பர். அச்சொல்லின் பொருள் 'முடிந்த அறிவு' என்பதாகும். ஆதலின், வேதங்கள் என்றுமுண்டு. முற்காலத்துச் சிலர் அவற்றை வெளிப்படுத்தினர், எதிர்காலத்

திலும் அவ்வாறு வெளிப்படலாம். எல்லா மொழிகளிலும் எல்லா இடங்களிலும் அவை தோன்றியு மிருக்கலாம்: தோன்றுதலும் கூடும். இத்தகைய வேத முடிபுகளாகிய உபநிடத்துக்களுக்கும் கடவுள் அப்பாற்பட்டவன். இவ்வுண்மையைப் பல சான்றுகள் கூறி நிலைநிறுவலாம்; ஆயினும் ஒன்று கூறுகின்றேன். நண்பர் புகழ்ச்சியினும் பகைவர் புகழ்ச்சியே கருதற்குரியது. குற்றமே காணும் பகைவர் ஒரு குணத்தை எடுத்தியம்பின் அஃதுண்மையன்றிப் பொய்யாகாது. சிங்கன்—“வேதக் காட்சிக்கும் உபநிடத்துச்சியில் விரிந்த, போதக் காட்சிக்கும் காணலன்”—என்கின்றனன். ஆதலின் வேதமுடிவாகிய உபநிடத்துக்களுக்கு அப்பாற்பட்டவன் என்பதை “**மறைகளின் முடிவால்......** அளக்கொணுமல்” என்றியம்பினர். **தைத்திரீய உபநிடதம்**—“வாக்குகள் அடையாது எங்கிருந்து மனத்துடன் திரும்பினவோ அவ்விடம் கடவுள்” என்றது. தமிழில், **மணிவாசகனுர்** அழகாக இக் கருத்தை, “மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே” என்ருர். இதனை யொட்டிய புராண கதையும் ஒன்றுண்டு, அக்கினி உருவமாய் இறைவன் இடை நின்ருன். பிரமனும் திருமாலும் உச்சியையும் கீழ்ப் பகுதியையும் காணுது திகைத்தனர். தாழம்பூ மேலிருந்து விழும் நிலையிலே பல்லாண்டைக் கழித்ததாகக் கூறுகின்றது. இதன்கண் சுட்டப்படும் வேறு கருத்தும் உண்டு. தாழை=மனம்; பிரமன்=வாக்கு. இரண்டும் கடவுளைக் காணமுடியாது திரும்பின. இது குறிப்புவமை என்க.

## வாக்கால் மனத்திஞல்

இங்ஙனம், “**வாக்கால் மனத்திஞல்** அளக்கொணுமல்” எனற்குப் பொருள் காண்க. இதற்கு வேறுபொருளும் உண்டு. வேதத்தை **சைமினி**, **வியாசர்** என்ற இருவரும் படித்தனர். படிப்போரில் பலவகை உண்டு. தங்கள் கருத்திற்கு அரண் செய்கின்றவற்றையே சிலர் கைக்கொள்வர். மற்றவற்றையும் அங்ஙனம் ஆக்கிக் கொள்ள முயல்வர். பலர், பிரபுலிங்கலீலையை முற்பகுதிவரை வாசிப்பர்; பிற்பகுதியைப் படியார். முதலில் தாழ்பொருளையும் பின் உயர்பொருளையும் நிறுவுவர் பெரியோர். சாத்திரமும் அங்ஙனமே. சைமினி “ஒருவன் மனத்திற்குச் சரி என்று தோன்றியதைச் செய்க. நியன

என்றறிந்தவற்றை விலக்குக" எனும் பொருள் அமைந்த கரும காண்டத்தைப் படித்தார். அத்துடன் நிறுத்திக் கொண்டு தம் கருத்தை 48,000 சீடர்களுக்குப் போதிக்க ஆரம்பித்தனர். இக்கருத்தைச் சுருக்கமாக விளக்கப் **பூர்வமீமாம்சை** எனும் நூலொன்றை எழுதினர். வியாசர் முழுவதையும் படித்துப் பிற்பகுதி உயர்ந்தது என்ருர். "கரும்புத் தோட்டத்தில் யானையும் ஆடும் புகுகின்றன. இன்சுவை மிக்க கரும்பினை யானை உண்டு மகிழ்கின்றது. எங்கும் உண்ணும் இலையையே ஆடு மெல்லுகின்றது. அவ்வாறே சிறந்த பொருளைக் கைக்கொண்டும் அதனுயர்வைக் கண்டு அநுபவிக்கும் சிறப்பு, சிறந்த அறிஞர்க்கே உண்டு" என்று **சிவப்பிரகாசர்** விளக்கினர்.

"எறும்பி காண்குறின் இன்கரும் பேகொளும்
செறிந்த ஆடிலை தின்ப என்பவே"

—பிரபுலிங்.

அங்ஙனமே, பிற்பாகமாகிய ஞான காண்டத்தில் தம் நாட்டத்தைச் செலுத்தி அதுவே உயர்ந்ததென அறிந்து அக்கருத்துக்களை ஐந்நூற்றுக்குச் சிறிது மேலாகிய எண்ணொடு கூடிய சூத்திரத் தொகையில் **உத்தர மீமாம்சை** என்ற நூலாக எழுதினர். இவ்விரண்டும் வாக்கு எனப்படும். சைமினி, வியாசர் என்ற இருபெரு மக்களின் உத்தர பூர்வ மீமாம்சைகளாகிய வேதத்தின் கர்ம ஞான காண்டங்களின் உட் பொருள்களாகிய வாக்குக்களினுலும் அளக்கொணுதவன் இறைவன் என்க. ஈதெம் கருத்தன்று. இங்ஙனம் **சிவஞான சுவாமிகள் சித்தியார் உரையில்** எழுதினர். ஆகவே, கருமத்தாலும், ஞானத்தாலும் (உணர்ந்தார்க் குணர்வரியோன்; உலகெலா முணர்ந்தோதற் கரியவன்;) அறியமுடியாதவன் இறைவன் என்க.

மனம், நினைத்தற்குக் கருவியாயுள்ளது. சில சுவடிகள் ஸ்மிருதிகள் என்றழைக்கப்படுகின்றன. ஸ்மிருதி என்ற சொல்லிற்கு நினைப்பு என்பது பொருள். நினைப்புணர்ச்சி இல்லாப் பைத்தியக்காரனை விஸ்மிருதி என்றல் வழக்கு. ஆகவே ஸ்மிருதிகளுக்கும் அப்பாற்பட்டவன் ஆண்டவன் என்பதைக் குறிக்க, "**மனத்தினல்**" என்ருர்.

## உருவாய்த் தோன்றி

கருமத்தைப்பற்றிப் பேசுவோர் பல வகையினர். தாங்க முடியாத பெருந் துன்பம் வந்த காலத்தில், "இது என் கருமம்" எனக், கருமத்தைக் கண்டிப்போனும் கூறுகின்றன். கருமம் என்றால் செயல் என்பது பொருள். நாம் பிறத்தற்குக் காரணம் கருமம்; அதனாலேயே நாம் பிறந்தோம். "வினையினால் வந்தது வினைக்கு விளைவாவது" என உடலைச் சுட்டினார் கூலவாணிகன் சாத்தனார்.

> "வினைப்போகமே ஒரு தேகம் கண்டாய் வினைதான் ஒழிந்தால்
> தினைப்போ தளவும் நில்லாது"
>
> —பட்டினத்தடிகள்

ஆனால், கடவுளின் தேகம் வினையால் வந்ததன்று.

> "காயமோ மாயை யன்று
> காண்பது சத்தி தன்னால்"
>
> —சித்தியார்

கடந்த அப்பொருள், நம்பால் வைத்த கருணையால் நம்மைப் போல் உருவம் தொழில் கொண்டு நாம் வாழும் இடத்தை அடைந்தது. குழந்தை அழமுடியாத நிலையில் மிகுந்த துன்பத்தை அடைகின்றது. அழும் நிலையில் அதன் துன்பம் குறைகின்றது. அவ்வாறே மக்களாகிய நமக்கு அவத்தைகள் பல உண்டு. மேலாலவத்தை கீழாலவத்தை நின்மலாவத்தை, சாக்கிரம் முதலிய ஐந்து, எனப் பலபடக் கூறுவர். அவற்றை அங்ஙனம் எடுத்துக் கூறும் நூற்களும் பல. அநுபவத்திற்கும் அவை ஒத்து வருகின்றன. குழந்தை அழும்போது, தாய் தந்தையர், தம்மிடத்தில் வரட்டும் என்கிறார். அன்பைக் குறைவாகவும் ஆசையை மிகுதியாகவும் கொண்ட இவரே விரைந்தெழுந்து ஓடிக் குழந்தையைத் தூக்கி அதன் அழுகையை நீக்க முயல்வர் என்றால், அன்புருவமாய் அதன்முதிர்வாகிய அருளுருவமாய் விளங்கும் கடவுளைப் பற்றிப் புகல்வதெவ்வாறு? ஆதலின், இக்கருத்தை விளக்குதற்கே—அருளொடு என்றார்.

## சரவணத்தில்

இடம் பொருள் உருவம் முதலியவற்றில் நம்மையொத்துத் தோன்றும் அக் கடவுள் செயலில் நம்மினும்

வேறுபாடுடையவனுகவே காணப்படுகின்றான். ஒரு சிறிய தாமரையில் ஆறுமுகங்களுடன் ஒரு குழந்தை எழுந்தருளி யிருத்தல் இயல்பன்று. கங்கையோரம் - ஒரு குளம் - நாணற் காடு—அதன் நடுவில் செந்தாமரை மலர் ஒன்று—அதன் மேல் எழுந்தருளி யிருக்கின்றான் என, சரவணத்தை இடையில் நினைவிற்குக் கொண்டுவருகின்றார் ஆசிரியர். காட்டிடையில் தனித்திருத்தல் மக்கட் குழந்தைக் கியல்பன்று. சர+வனம்=சரவணம்; என்றாயிற்று. வீதியில் செல்வோர் தமக்காகாதோரைக் காணின் நாணிக் கோணி முகம் கவிழ்வர். அவ்வாறே தம்முடன் பொருந்தா எழுத்துக்களைச் சில எழுத்துக்கள் காணின் அவை தம் பண்டை உருவிழந்து நிற்கும். சர—என்பதிலுள்ள ரகரத்தைக் கண்ட வனம் என்ற சொல்லிலுள்ள நகரம் ணகரமாகத் திரிந்தது. உத்தர+அயனம்=உத்தராயணம்; இராம + அயனம் = இராமாயணம்; எனும் அவற்றையும் ஒப்பிட்டுக் காண்க.

## வெறிகமழ் கமலப்போதில்

நறு நாற்றம் எம்மலரினும் சில நாழிகையே இருக்கும். பின்னர் நீங்கும். கடவுள் இருப்பினைப் பெற்றமையின் இத் தாமரை என்ஞான்றும் நறுமணம் கமழ்கின்றது. அவ் வுண்மையை அறிவிக்கவே கமழ்+கமலம் என வினைத்தொகை இலக்கணத்தில் முக்காலத்திலும் வீசும் இயல்பினது என்று வைத்தனர். **பட்டினத்தடிகள் திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில்** 'தெய்வத்தாமரை செவ்விதின் மலர்ந்து' என்று பெருமான் அடிகளைக் கூறினார். சூரியனால் மலர்ந்து சந்திரனால் கூம்பி அழியாது என்றும் நிலைத்துச் சிறக்கும் சிறப்பினது இம்மலர் என்ற உண்மை காண்க. கமலப்போது என்ற தொடரை மேலும் காண்க. கமலம் என்றால் நீர் என்ற பொருளும் உண்டு. போது=மலர்; 'சலிலம் கமலம் சலம்' என்ற வடமொழி நிகண்டு நீர் எனும் பொருளில் கமலம் வரும் என்பதைக் காட்டுகின்றது. ஆகவே, நீரில் முளைக்கும் மலர் என்று பொதுவாகக் கூறினும், நீரில் அலரும் அல்லி முதலிய பல மலர்கள் இருந்தாலும், **பங்கய நியாயம்** பற்றிப் போது என்பது ஈண்டுத் தாமரையையே குறிக்கின்றது.

## வீற்றிருந்தருளினன்

'உட்காருங்கள்,' என்று பேச்சு வழக்கிலிருக்கும் சொற்குப் பொருளும் ஆட்சியும் இல்லை. இச்சொல் எங்ஙனம் மொழியுள் புகுந்ததோ அறியக்கூடவில்லை. 'அறியக் கோருகின்றேன்' என்பதிலுள்ள, கோருகிறேன், தமிழன்று. நிற்றல் இருத்தல்: இவையே தமிழிற் காணப்படுகின்றன. நச்சினார்க்கினியர், 'வீறு' எனற்கு 'வேறிடத்தில் காணப்படாததோர் விளக்கம்' என்றனர். ஆதலின், சிறந்த விளக்கத்துடன் எழுந்தருளி இருந்தான் என்க. "திரு வீற்றிருந்த தீது நீர் நியமத்து" எனும் திருமுருகாற்றுப்படையில் "வீற்றிருந்த" என்னும் சொல்லை எண்ணுக. உலக வழக்கிலும், 'அரசன் கொலுவீற்றிருக்கின்றான்' என்பதிலும் பொருந்தி நிற்கும் வீற்றிருத்தல் என்பதை நோக்குக.

முருகன் பல திருப்பதிகட்குச் சென்றனன். திருச்செந்தூரில் இருந்தான் என்ற இடத்தில், "கருணை வெள்ளம் எனத் தவிசில் வீற்றிருந்து" என்றனர் குமரகுருபரர். அங்கு எழுந்தருள் உருவத்தில் இன்றும் காணற்குரிய நிலைமையில் கருணை நிறைந்து ஆண்டவன் காணப்படுகின்றான். காரணம் என்ன? பகைவர்களாகிய அசுரர்களை அழித்தற்கென முற்பட்டு வந்தும், அவ்வாறே சிவபிரான் கட்டளை இருந்தும், பகைவன்பால் கருணை வைத்துச் சிந்திக்கின்றார். "ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டுச் சதுர்யுகம் அரசுபுரிந்தவன் அசுரனல்லவா? அவனுக்கு நல்லறிவுச் சுடர் கொளுத்துவோம். நல்வழியில் இனி நிற்பின் இத்துடன் விடுப்போம். இல்லையேல் அழிப்போம்" என்று எண்ணினார். 'எப்பொழுது மகேந்திரம் செல்வோம்? என்று அரக்கனை அழிப்போம்?' என்ற எண்ணங்களே நிறைந்துநிற்கும் தேவர்களைக் கருணை நிறைந்த திருமுகத்துடன் காண்கின்றான் முருகன். அவ்வளவில் அவர்கள் வேகமும் குறைவுறுகின்றது. அவர்களிடத்திலும் அக் குணம் தலையெடுக்கின்றது. "தூதனுப்ப எண்ணுகின்றேன். யாரை அனுப்புவது?" என்று அறிவின் மிகுந்த ஆண்டவன், கிழோருடனும் உசாவுதல் வேண்டும் என்ற முறையில் வினவ, அவன் உள்ளத்த தாம் எண்ணத்தையே தாமும் வெளிப்படுத்தினர். ஆதலின், வாகு தூது சென்றனன் என்க. இங்ஙனம், அருட்குணத்திற்

கிருப்பிடமா யிருந்தமைபற்றி அவ்விடத்தைக் கருணைக் கடல் (கிருபா சமுத்திரம்) என்பர்.

பேசிவந்த இவ்வளவும் தோற்றம். இனி, இரண்டொன்று சரித்திரத்தில் காட்டுவோம்.

## சரித்திரம் சாத்திரம்

பிரமன் முதலியோர் சூரபத்மன் முதலிய அரக்கரால் பெருந்துயருழந்தார்கள். கைலை சார்ந்து கண்ணுதலைக் கண்டு வணங்கித் தம் குறைவினை நீக்கிக்கொள்ள எண்ணினர். கைலை சார்ந்தனர். வேத்திரக் கோலேந்தி நிற்கும் நந்தியின்பால் தம் துன்பத்தைக் கூறிப் பிரானைக் காண வேண்டும் என்றனர். பிரானிடம் முன்சென்று தேவர் உள்ளே வருதற்கு உத்திரவு பெற்று யாவரையும் உள்ளே அனுப்பினுர். உள் சென்ற தேவர் வாழ்த்தினர். சிவபிரான், அவர்கள் வாழ்த்திற்கே மகிழ்பவனல்லன். ஆனுல், அவர்கள் இனிக் கூறும் கருத்திற்காக அவர்கள் வாழ்த்துரையைச் செவிமடுத்தனன். “உங்கள் வழிபாட்டுரை போதும். உங்கள் முகத்தில் வாட்டத்தைக் காண்கின்றேன். அதற்குக் காரணம் யாது? சொல்லுக” என்றனன்.

தேவர், “எம்மைத் துன்புறுத்தும் அசுரனை அழிக்க நின்பால் நின்னை நிகர்க்க இப்போது ஒரு குமரனை அருளல் வேண்டும்” என்றனர்.

தேவர், மக்களினும் சிறிது உயர்வுடையார் என்னலாம். நமக்குள்ளனபோல் பிறப்பு, இறப்பு, காமம், நோய், பசி ஆம் துன்பங்கள் அவர்களுக்குமுண்டு. நம்மினும் குறைந்த எண்ணமுடையார் என்றும் கூறலாம். ஏன்? வீட்டெண்ணம் அவர்களுக்கில்லை. வெறும் போகிகளாகக் காலத்தைக் கழித்து அழிகிருர்களே அன்றி ஞானம் கைவரப்பெற வேண்டும் எனும் எண்ணம் அறவே இல்லாதவர்கள். ஆதலாலேதான், அருகே அம்மை இருக்கின்ருள்; அவளுடைய கருப்பத்தில் பத்து மாதங்களும் ஆண்டவன் கருவில் இரண்டு மாதங்களும் இருந்து வெளிவரல் வேண்டிய ஒரு குழந்தையை, ‘நின்பால் நின்னையே நிகர்க்க இப்போது நீ தரல் வேண்டும்’ என்கின்றனர். அவர் மதிக்குறைவை என்னென்பது! சிவனே, “குறித்ததொன் ருகமாட்டாக் குறைவிலன்”; (சித்தியார்), ஆதலினுலே, தேவர் எண்ணத்தை முற்றுவிக்க

எண்ணுகின்ருன். ஆகவே, ஆறுமுகத்தோடெழுந்தருளு கின்ருன். அன்பர்கள் சிறிது கூர்ந்து கவனிக்க. சிவபிரான் எண்ணுகின்ருன். வெளிவரும் ஆண்டவன் யாரும் அறிய முடியாத நிலையில் இருக்கின்ருன். எங்கு? சிவபிரானுள்ளத் தில். இது அருவநிலை என்க. வெளிப்படும்போது ஆறு திரு விழிகளினின்றும் ஆறு பொறிகளாக வெளிவருகின்ருன். அடுத்து அவன் நெருப்புப் பொறிகளாகக் காணப்படு கின்ருன். இந் நெருப்புப் பொறி நாம் காண்கின்ற நெருப்பினை யொத்ததன்று. இது, திரி, எண்ணெய், அகல் முதலியவற்றை ஆதாரமாகக் கொண்டெழுந்ததன்று. இதற் குச் சுட்டுக் கொல்லும் கொடுங்குணமுமின்று. ஆதலின், இதனைச் சுயம் ஜோதி, பரம் ஜோதி என்க. எங்கிருந்து வெளிவந்தன? கண்ணிலிருந்து. இவர் பெயர் குமாரர். இவர் கருப்பத்திலிருந்தனரா? வயா முதலிய துன்பம் தாய்க்குத் தோன்ற வெளிப்பட்டனரா? பிற குழந்தைகளின் பிறப் பிற்கும் இக் குமாரக் குழந்தையின் தோற்றத்திற்கும் எவ்வி தத்தானும் ஒற்றுமை உண்டா? ஒன்றும் இல்லை.

மெய்யன்பர்களே! சரித்திரத்தோடு தத்துவங்களையும் உற்றுணர்தல் வேண்டும். தோன்றிய பொறிகள் ஆகாயம் எங்கணும் பரந்தன. 'சுடும்' எனத் தேவர் அஞ்சிச் சிவனை அடைந்து அரற்றினர். 'நன்று' என்று சிவபிரான் கூறி, அச் சித் (அறிவு மயமாய) பரஞ்சோதியை 'வா' என் ருர். வந்து அடக்கமாக நின்றது. வெறும் நெருப்புப் பொறியாயின் இங்ஙனம் கட்டுப்பாட் டுணர்ச்சியைப் பெற் றிருக்குமா? அடக்கமுள்ள பிள்ளைகளைத் தந்தைமார் அழைத்தால் உடனே அவரைச் சார்ந்து, 'ஏன் அழைத்தீர் கள்' என்று கேட்பது உயர்ந்தது என்று சிலர் கருதுகின் றனர். என் கருத்து சென்று நிற்றல்வேண்டும் என்பதே. அங்ஙனமே, பொறிகள் நின்றன. வாயுவை நோக்கி, 'வாயு, இவற்றைச் சுமந்து செல்' என்ருர் பெருமானுர். அவன் அவற்றைச் சுமக்கும் ஆற்றல் தனக்குண்டோ? இல்லையோ? என்று ஐயமுற்றுத் தூக்கினுன். தன்னுல் முடியாத காலத் தில் அக்கினியின்பால் ஒப்புவித்தான். இவனும் முன்ன வனைப் போலே ஐய உணர்ச்சி மிகுதியு முடையவனுதலால் கங்கையாற்றி விட்டனன். அது நாணற்காடு நிறைந்ததோர்

தடாகத்தில் தள்ள, அங்கே ஒரு தாமரையின்மேல் தோன்றி நின்றுன்.

அருவமும் உருவு மாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்ருய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருவணகூர் முகங்க ளாறும் கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலகம் உய்ய.

சரித்திரத்திற்கும் சாத்திரத்திற்கும் மிக்க ஒற்றுமை உண்டு. முதலில் அருவமாய்ப் பின் அருஉருவமாய்ப் பின்னர் உருவமாகி விளங்கும் அவன் நிலையைக் காணுங்கள். இங்கே ஓர் ஐயம் உண்டாகலாம். அவன் சிவன் உள்ளத்தில் அருவமாய் இருந்தபோதும், பொறியாகி ஆகாயத்தில் இருந்த போதும், வாயுவுடன் கூடியபோதும், அக்கினியுடன் கலந்தபோதும், கங்கையிலிருந்தபோதும், தாமரையாகிய பூவில் (மண்ணில்) வீற்றிருந்தபோதும், ஓரிடத்திலேதானே அவனிருந்தான்; மற்ற இடங்களில் அவனில்லையே என்று கருதலாம்; வினவலாம். அறிவுடைய கேள்வி வரவேற் றற்குரியதே. அவன் முழுத்தன்மையில் குறைவின்றியே ஒவ்வோரிடத்து மிருந்தனன் என்க. அஃது எதனுல் பெறப்படுகின்றது? ‘வந்தாங்கு’ என்பதனைக் காண்க. ‘வந் ததைப் போல’ என்பது அதன் பொருள். நம் காட்சிக்குத் தோற்றமே யொழிய அவனுக்கு உண்மையில் இஃதன்று என்க.

## பலவாய், ஒன்ருய்

ஒன்ருய் என்பது கூட்டிப் பார்க்கும் காலத்தில்; பல வாய் என்பது பிரித்துப் பார்க்கும் காலத்தில். உயிரில், அணு அணுவாய் இருக்கும் நிலையில் பல என்க. அங்ஙனமன்றி விஸ்வரூபத்தில் ஒன்ருயுளன். அப்போது உலகமே அவன் வடிவம். நின்ற திருத்தாண்டகத்தில் “இரு நிலனய்த் தீயாகி நீருமாகி” என்று பிரித்துக் காணும் ‘பலவாய்’ என்பதை நோக்குக.

## கருணைகூர் முகங்களாறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே

கருணை என்பதைப்பற்றிப் பேசி நிறுத்துவோம். “முங்நான்காகும் விழிகளினருளும்” தாருகன் கண்டனன்.

கொடிய பகைஞனையும் கருணையுடன் அவ்விழிகள் நோக்கின எனில், அவ் விழியின் கருணைக் கெல்லையுண்டோ? அவ்வுண்மையை தாலீபுலாகமாக ஒன்று கூறுவோம். ஆகாயத்தில் முனிவரர் சிலர், மண்ணில் வாழ்நரை நேரே சென்று தாக்காதவண்ணம் சூரியனின் கொடுங் கதிர்களைத் தாங்கி நிற்கின்றனர். அத்தகைய முனிவர்களுக்குத் தொல்லை நேராவண்ணம் ஒரு முகத்தோ டியைந்த கரங்களுள் ஒன்று, "விண்செலல் மரபின் ஐயர்க் கேந்திய தொருகை" எனின், முகக் கருணையினை முடியக் கூறுவார் எவர்? முகம்போலவே கைகளும் கருணை நிரம்பியன. 'கருணைகூர் கரங்கள்' என்று கூட்டிக் காண்க.

## முருகன்

இச் சொல்லுக்குப் பொருள் 'தெய்வம்' என்பது. வடமொழியில் கூறினுற்றான் நம் மக்கள் அறிகின்றனர். நம் தாய் மொழியாகிய தமிழ் மொழியை நாம் அறிகின்றோமில்லை. "லாயத்தில் குதிரை" என்கின்றோம். 'லாயம்' தமிழ்ச்சொல் அன்று; வெவ்வேறு அரசியலிருந்த காலங்களில் வெவ்வேறு மொழிகள் தமிழ்நாட்டினுள் நுழைந்தன. ஆங்கிலப் பள்ளியையும் அறியாது வீட்டினுள் அடங்கிக் கிடக்கும் பெண்களும், 'டயத்துக்கு வரலையே' என்கின்றார்கள். இங்ஙனம் வேற்றுச் சொல் வேகமாக நம் தமிழ் மொழியில் புகுகின்றன. யாவரும் இதைக் கவனித்தல் வேண்டும். வடசொல்லுடன் தமிழ்ச்சொல்லை இயைத்துத் தமிழ்ச் சொல்லை விளக்கிச் செல்லும் நெறியை நாவரசர் பால் "அடவிகாடே" எனுமிடத்துக் காண்க.

இன்று, முருகன் தோன்றினான் என்றோம். எதனால்? அருளால். எதைப்போல? சூரியனுதயமானான் என்றாற் போல முருகன் தோன்றினான் என்க.

## முடிவுரை

இதுவரை அடியேனைப் பேசுவித்து உங்களைக் கேட்கும் வண்ணம் செய்த அவனைத் தோத்திரித்தலால், நன்றியறிவைப் புலப்படுத்தியோராவோம்.

அருவமும் உருவு மாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்க ளாறும் கரங்கள்பன் னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலகம் உய்ய.

# உ. வேல்

மெய்யன்பர்களே !

இன்று என் வேலை, வேலைப்பற்றிப் பேசுவது. சைவ எல்லப்ப நாவலர் அவர்கள் செவ்வந்திப் புராணத்தில்,

ஓசையாற் றிரைமுன் னுளில் உழக்குமா வினையும் வாட்டும்
ஏகவேவ் வரையின் எல்லை பிடித்திடும் இமையோர் போற்றத்
தோகைமேல் உலவும் கந்தன் சுடர்க்கரத் திருக்கும் வெற்றி
வாகையே சுமக்கும் வேலை வணங்குவ தெமக்கு வேலை.

என்றனர். இச்செய்யுளில் நம் மனத்தை உருக்கும் பகுதி வேலை வணங்குவது எமக்கு வேலை என்பதாம். எனக்கு என்று தம்மைத் தனியாக மற்றவர்களிடமிருந்து நீக்கி நாவலரவர்கள் கூறவில்லை; எமக்கு என்கின்றார். தம்மைப் போன்று தீமையினின்றும் விலகி நன்மையை அடையும் மக்களது வேலை என்பதைச் சுட்டவே பன்மையில் கூறினர். இரு வேலைகளுள் முன்னது, இரண்டாம் வேற்றுமை உருபேற்ற வேலென்னும் சொல். இரண்டாவது சொல் செயலைக் குறிப்பது. வேல் என்றவுடன் யாருடையது? என்றெழும் வினாவிற்குத் "தோகைமயில் மேலுலவும் கந்தன் சுடர்க்கரத் திருக்கும் வெற்றிவாகையே சுமக்கும் வேல்" என்பது விடை ஆகும். இதுதான் நாம் விசாரிக்க முன்னிற்கின்றது.

## மக்களிடத்து உள்ளனவும் இல்லனவும்

மக்களாய்ப் பிறந்த நாம் எவற்றைப் பெற்றிருக்கின்றோம்; எவற்றைப் பெற்றிருக்கவில்லை; என்பவற்றைக் கவனித்தல் வேண்டும். பழநியம்பதியில் எழுந்தருள் முருகனைத் தோத்திரிக்கும் அருணகிரிநாதர்,

மூல மந்திரம் ஓதல் இங்கிலை
ஈவ திங்கிலை நேயம் இங்கிலை
மோனம் இங்கிலை ஞானம் இங்கிலை

என்றுரைத்தார். அவரே உள்ளவற்றையும் எடுத்துக்காட்டுகின்றார்.

மோக முண்டேஅதி தாப முண்டேஅப
சார முண்டேஅப ராத முண்டிடே
மூக னென்றொரு பேரு முண்டே

இப் புகழ் நமக்கு என்ன போதிக்கின்றது? நம்பால் உள்ளன வற்றையும் இல்லனவற்றையும நாம் எண்ண வேண்டும் என்பதை நன்ருக ஞாபகப்படுத்துகிறது. ஒரு காலத்தன்றி ஒரு நாளிலன்றி ஒரு பொழுதிலன்றி எக்காலத்தும் எந்நாளி லும் எப்பொழுதிலும் இச் சிந்தனை நமக்கு மிகல்வேண்டும். நாம் காண்கின்ற நம்பாலிருப்பன, நம்மிடத்திலேயே இருத் தல் வேண்டுமா? அன்றிப் போக வேண்டுமா? போக வேண்டும் எனின் எதன் துணை கொண்டு போக்குதல் வேண் டும்? துணை தக்கதுதானு; நாம் போக்க வேண்டுமென்று எண்ணுமவற்றை நாம் துணையாகக் கொள்ள விரும்புவது போக்கியிருக்கின்றதா? என்பன போன்றவற்றைக் கவனித் தல்வேண்டும்.

## அஞ்ஞானம்

போக்குதற்குரிய நிலையில் நம்பால் பல உண்டு. எல்லா வற்றையும் எடுத்தாராய இப்போது முற்படவில்லை; ஒன்றை மட்டும் கவனிப்போம். அது என்ன? அதுவே பகையாம். நம்மிடத்தில் பகை உண்டு என்றறிக. வெளிப்பகை, உட் பகை எனப் பகையை இருவகைப் படுத்தலாம். வெளிப் பகையையும் இருவகையாகப் பகுக்கலாம். பகைவர் என் றறிய நடந்து கொள்பவர் ஒரு சாரார். ஆனுல் நண்பனைப் போன்று நகைமுகங் காட்டி இன்சொற் கூறி நெஞ்சகத்தில் கொஞ்சமும் நல்லெண்ணமின்றிப் பகையெண்ணமே மிகுந்த வர் மற்றொரு சாரார். முன்னவரினும் பின்னவர் மிகக் கொடிய பகைவராவர். ஏன் எனின்? முன்னவர் 'நாம் உமக் குப் பகைவர்' என வெளிப்படையாகக் கூறிச் சாக்கிரதைப் படுத்துகின்ருர். பின்னவரோ நண்பரைப்போல நடித்து அற்றம் நோக்கி அழிக்க முற்படுகின்றனர். இவ்விரு வெளிப் பகைவரினும் நம் உள்ளிருக்கும் பகையே மிகக் கொடியதாம். இப் பகைவனே நாள்தோறும் எண்ணுதற் குரியவன். அவ்வாறும் ஒரு பகைவனுண்டோ? என்று சிலர் ஐயுறலாம். பகைவனுடைய செயல் என்ன? துன்பம் செய்தல். இவ்வுலகில் வாழும் எம் மகன் தனக்குத் துன்ப மில்லை என்று சொல்லுவான்? துன்பம் உண்டென்பானே

யன்றி இல்லை என மாட்டான். அத் துன்பம் தோன்றுதற்குக் காரணம் யார் என்று அதுபற்றி விசாரிப்பின் அத் துன்பத் திற்குத் தலைவன் நம்பாலே உளன் என்ற முடிவுக்கு வருவோம். அவன் யாவன்? தமிழில் அறியாமை என்றும், வடமொழியில் அஞ்ஞானம் என்றும் அவன் சொல்லப் படுவான். அவன் நம்முள் இருக்கின்றான். நம்முள் எனும் பொழுது உடம்பைக் குறிக்கின்றேனல்லன். உடம்பானது நமக்கு ஒரு நண்பனைப் போன்றது. ஆனால் நம்மோடு தொடர்புடையதன்று. இவ்வுடம்பு நமக்குப் பெருங் கெடுதிகளைச் செய்யாது. நூறாண்டுகளுக்குமேல் மக்கள் வாழ்தலில்லை. ஆதலின் உடம்பாலாகும் துன்பமும் அவ் வாண்டுக் கணக்கின் மேற்படாது. ஆண்டுக் கணக்கி லகப்படாத மா பெரும் பகைஞன் அஞ்ஞானம். இவன் நம்மை எப்போது அடைந்தான்? இவன் நம்முடன் இடைக் காலத்து வந்து சேர்ந்தவனல்லன். நாம் என்றோ அன்றே அவனும். நம்முடன் பழகி நமக்கு எஞ்ஞான்றும் துன்பத் தையே விளைத்துத் தன்னையும் அறிவிக்காது மற்றொருவரால் நமக்குத் துன்பம் வருவதாக நம்மை நம்ப வைத்துக் கொண் டிருக்கும் இயல்பினை உடைய இவன், உண்டான நாள் ஒன்று இன்று. நெல்லுக்குத் தவிடும், உமியும், முளைக்கும் சக்தி யும் எக்காலத் துண்டாயின? நெல்லென்றோ அன்றே; செம் புக்குக் களிம்பு இன்ன காலத்துண்டாயிற்றென்று சொல்லு பவர் எவர்? அவ்வாறே உயிர் என்றோ அன்றே அஞ்ஞான மும். செம்பிலுள்ள களிம்பு நீக்கப்படும் தகுதியுடையது. செம்புடன் ரசகுளிகையைச் சேர்த்தால் களிம்பு போகும். பலமுறை உரலில் இட்டுக் குத்தினால் - பழங்கால வழக்கப் படி - நெல்லுடன் காணப்படுகின்ற தவிடு, உமி, முளைக்கும் சக்தி ஆகியவை விலகும். அவ்வாறே உயிருடன் கலந்து நிற்கும் அஞ்ஞானத்தையும் நீக்க முடியும். அதற்கு என்ன செய்தல் வேண்டும்?

## அஞ்ஞானத்தின் கொடுமை

நமக்குக் கண்கள் இருக்கின்றன. அவை இருள், ஒளி இவ் விரண்டுடனும் பழகுகின்றன. பகலில் ஒளியைக் கண்டு பழகும் கண்கள் இரவில் இருளுடனும் இயையும். அது நீங்கி ஒளியுடனும் பழகும் இயல்பு அதற்குண்டு. அவ்வாறே உயிர், ஞானமாகிய ஒளியுடனும் பழகும். இருளுடன் பழகுங்

காலத்தில் தான் பெற்ற செல்வம், தன் மனைவி, மக்கள், உற வினர், உற்றார், இனியர், நண்பினர் ஆகியோரையும் அறிய முடியாது திகைக்கின்றது. அஞ்ஞானமாகிய இருள் இவ் வாறே நமக்கு இன்பந்தரும் பொருளுடன் நம்மைப் பழக ஒட்டாது தடுக்கின்றது. ஞானத்தை அறியாத காலத்தில் இன்பத்தையே அறியாது வருந்துகின்றோம். கண்ணுக்கு இருளினால் பலகோடி துன்பங்கள் உள்ளன. உயிருக்கும் அஞ்ஞான சம்பந்தத்தால் அளவிறந்த துன்பமுண்டு. ஏன்? இருள் தன்னைக் காட்டும். மக்களே! நான் வருகிறேன். மேடு பள்ளங்களை உங்களுக்குக் காண்பிக்கமாட்டேன். எப்பொருளையும் நீங்கள் காண இயலாது என்று கூறுவதே போல் தன் வருகையையும் இருத்தலையும் நமக்கறிவிக்கின் றது. நம்முடன் வாழும் அஞ்ஞானமோ தன்னைத் தெரிவிக் காது. ஆகவே இவ்வறியாமை மிகக் கொடியதொன்றும். சாத்திரத்திலே, பெரியார் வாக்கிலே இதன் கொடுமையைப் பலபடக் காணலாம்.

## கருவில் குழவியின் எண்ணம்

சூரியனால் இருள் நீங்கும். அறையினுள் படுக்கையி லிருந்தாலும் தன் கிரணத்தை நீட்டி இருளை ஒழித்துத் தூக் கத்தையும் நீக்கி விழிக்கச் செய்வான். அங்ஙனமே, கட வுட் சூரியன் ஞான கிரணத்தால் தாயின் கருப்பை ஆகிய அறையில் கிடந்தாலும் உயிர் என்ற கண்ணில் சேர்ந்து அறிவை உண்டாக்குகின்றான். கருப்பையில் கிடக்கும் குழ விக் கருவிற்கு ஒன்பது மாதம்வரை அறிவு விளக்கம் இல்லை. மலர்ந்த காலத்தில் மலரினின்றும் வெளியாகும் நறுநாற்றம் அது அரும்பாக இருக்கும் காலத்தில் அதனுள் அடங்கிக் கிடக்கின்றது. அவ்வாறே ஒன்பது மாதம்வரை அக் குழவிக் கருவில் அறிவு அடங்கிக் கிடக்கின்றது. பத்தாவது மாதத் தில், மலர்ந்த அலரில் தோன்றும் மணம்போல, கருவுக்கும் அறிவு தோன்றுகின்றது. தன்னைச் சுற்றிலும் உள்ள பொரு ளில் அக் கரு கருத்தைச் செலுத்துகின்றது. ‘நீர்ப்பை மலப் பை யருகில் கருப்பையில் அடைந்துளோம் நாம். துன்பம் மிக்க இடத்திலல்லவோ வசிக்கின்றோம். இக் கருப்ப வாழ்வு கொடிய வாழ்வு’ என்று அறிகின்றது. ‘நறுநாற்ற மின்றி நல் லிடமும் இன்றி இருக்கும் இவ்விடத்தில் வாழ்தலினும் வாழா திருத்தலே நன்று; எவ்வாறேனும் இத்தகைய

வாழ்வு வாராதிருக்குமாறு விலக்கவேண்டும். இனி, எக் காலத்தும் இத்தகைய இடத்திற்கு வரலாகாது' என்ற முடிவிற்கு வருகின்றது.

தாய்கருவில் வாழுமுயிர் தாமெல்லாம் வேண்டுவது
தூயபிற வாமை ஒன்றே.

இச் செய்யுளில் காணப்படுவது செய்யுட்குறியணி. பிறவாமை என்பதற்குள்ள அடையை நோக்குக. 'தூய' என்பது அது. அவ்வடை, 'அபிப்பிராயத்தோடு கூடிய விசேடணம்' எனப்படும். தூய்மை அறவே இல்லாப் பிறவி என்பதைப் புலப்படுத்தலை அறிக. அடுத்து 'ஒன்றே' என்ற சொல்லைக் கவனிக்க. ஒன்று + ஏ ; இஃதொன்றைத் தவிர வேறு ஒன்றை விரும்பவில்லை என்ற தேற்றத்தைத் தருதலின் தேற்றேகாரம் எனப்படும்.

## குழவியின் எண்ணச் சிதைவு

மெய்யன்பர்களே ! நாம் எப்படி இருக்கின்றோம் என்பதைக் கவனிக்க வேண்டும். இவ்வொன்றைத் தவிர மற்றெல்லாவற்றையும் வேண்டுவோம். திருநாவுக்கரசர் கடலினின்றும் கரை ஏறிப் பாடல நாதனைப் பாடிய பாட்டுக்களுள் கடைச் செய்யுளில் இக் கருத்தையே வலியுறுத்தி,

" அடியேன் இனிப்பிற வாமல்வந் தேன்றுகொள்ளே. "

என்றனர். முடிவாகிய விருப்பம் அதுவாயிற்று. நாடோறும் நாம் கைக் கொண்டுள்ள வாழ்க்கையில், காலையில் எழல், உண்ணல், உடுத்தல், பொருள் தேடல், இன்பம் எனச் சிலவற்றை எண்ணி, நுகரல், உறங்கல் முதலிய சொந்த வியாபாரம் நடக்கின்றதேயன்றிக் கருப்பத்தில் தோன்றிய எண்ணம் மறைந்தொழிந்தது. கருவில் தோன்றிய நினைவு மறைந்ததேன்? பெரிய மலைமேல் ஒருவன் நிற்கின்றான். அக்காலத்துப் பெருங் காற்றொன்று அடிக்கின்றது. மலையிலேயே இருக்கவேண்டும் என்பது அவன் எண்ணமாயினும் அங்ஙனம் இருக்கச் செய்யாது அவனைத் தலைகீழாகத் தள்ளுகின்றது. காற்று வேகத்தால் தலைகீழாக அவன் வருகின்றான். அக்காலத்தில் மலைமேல் கவலையின்றி அவனிருந்தபோது அவனுக்குண்டாகிய எண்ணம் நிலைத்திருக்குமா? எவ்வாற்றானும் இல்லாதொழியும். அவ்வாறே, பிரசூதவாயு என்னும் காற்று வேகமாக நம்மைக் கருவி

லிருந்து தள்ளும்போது, நம் எண்ணம் கரைந்தது. அம்மட்டோ? அடுத்து ஆலையிலகப்பட்ட கரும்புபோல் துன்புற்ருன். அதனுல், மிகுந்திருந்த அறிவும் மறைந்தொழிந்தது. அவ்வளவிலும் நிற்கவில்லை. உலகத்தில் பிறந்தவுடன் உலகமாயை என்ற சடம் மூடுகின்றது. மூடவந்த சடத்தைக் கோபித்து ஒழித்தமையாலன்ருே நம்மாழ்வார் சடகோபர் எனப்பட்டார். நாம் அப்படிச் செய்தோமா? இல்லையே. சிறிது எஞ்சியிருந்த கருஅறிவும் அறவே சடத்தாலழிய உணர்வற்றுப்பிறக்கின்ருன்.பூமியில் படுதலாலேதான் சடம் மூடுகின்றது; இல்லையே லில்லை. இவ்வுண்மையைப் பொழுது போக்குக்காகப் படிக்கப்படும் தலையும் காலும் இல்லாக் கதைக் கூட்டங்கள் அடங்கிய 12 மந்திரி என்ற கதையில் 11–வது மந்திரி கதையில், "பிறந்த குழந்தையைப் பொற்றட்டில் தாங்கினர்" என்றதைக் காண்க. கதையில் நம் கருத்து வேண்டா. அதன்கண் உள்ளீடாக இருக்கும் கருத்தைமட்டும் கொள்க. ஜோசிய நூலாரும் பூஸ்பரிசம் இலக்கினம் என்றனர். நான்கு யுகத்திற்கும் நான்கு வகை இலக்கினக் கணிதம் என்க.

## கடவுள் ஞானம்

இவ்வாறு நம்மை மூடிக்கிடக்கும் சடமாயை என்னும் அஞ்ஞானம் அகலவேண்டும். இதனை யொழிப்பது கடவுள் ஞானமே. அந்த ஞானம் வரின், நம் கண்கள் விழிப்படையும். அக்காலத்தில், உலகம், நாம், கடவுள் எனும் முப்பொருள்களையும் காணலாம்.

## படை

நம் பகைவனு யுள்ளிருப்போனை வெல்லுதலே நாம் செய்யக்கூடியது. எது கொண்டு வெல்லலாம்? படையால். படை இருவகைப்படும். (1) வீரன் கையிலிருக்கும் ஆயுதம். (2) சேனைக் கூட்டம். அதன் பொருள் படுப்பது அல்லது அழிப்பது என்க. படு+ஐ=படை. எதிரியை அழிப்பது படையாகும். நம் பகை அஞ்ஞானம். இவ் வஞ்ஞானத்தை அழிக்கும் படை எது?

ஒரொருகால் நம்படையே நம்மைக் கொல்லும். வீரன் ஒருவன் பகைவன் கையிலிருந்த சக்கரத்தை அழித்தற்காகத் தன் கையிலிருந்த நீண்ட தண்டினுல் தாக்கினுன். சக்கரத்தில்

அத் தண்டு பட்ட விசையால் மீண்டும் அவன்மேல் வந்து அவனையே அழித்தது.

> நீண்ட தண்டினுல் ஆழியை நெடுந்தகை அடித்தான்
> மீண்டு சென்றவன் சென்னியை வீழ்த்தியது விசையால்
> மாண்டு போகும்ஊழ் உற்றதேல் மருவலர் படைகள்
> வேண்டு மோதன தடுபடை யடாதுகொல் விரைவில்.
>
> — சீகாளத்திப்புராணம்

## படைப் பண்பு

ஆதலால், நாம் கைக்கொள்ளும் படை நம்மைத் துன் புறுத்தா திருக்கக் கவனிக்கவேண்டும். அன்றியும் அங்ஙிய ராகிய பகைவரை அல்ல; பகையை அழிக்கும் படையே சிறந்தது. பகைவ ரழிதலால் பயன் இன்று; பகைமை யொழிய வேண்டும்; அதுவே உயர்ந்தது. பகைமைக் குணம் உள்ள வரையில் பகைவர் ஒழிந்தார் என்றல் பொருந்தாது. அவ்வாறு அறவே அழிக்கும் வன்மையை யுடையதே வெற் றிக்குரிய படை என வேண்டப்படும். பரஞ்சோதியார்— "உறை நிறுத்திய வாளினுல் பகை இருள் ஒதுக்கி" என்றனர். அஞ்ஞானம் பகை; முன்னம் பகைவன் என்றேம், 'அழுக்கா றெனை ஒருபாவி', 'மிடி என்றொரு பாவி' என்றாற்போலக் குணத்தைக் குணியாகக் கூறினேம். இது கவிமரபு என்க.

## வேல்

வெல்லும் ஆயுதம் எது? தமிழில் பொதுவாக வெல்லு தலைச் செய்வது வேல் என்பர். வெல் என்பது வினைப்பகுதி. தொழிலை யுணர்த்தும் பெயராகிய தொழிற் பெயர் வகை யில் முதனிலை நீண்டு 'வேல்' என்றாயிற்று. இதனை முத னிலை நீண்ட தொழிற்பெயர் என்பர். வெல்லுகின்றது எதுவோ அது வேல் ஆகும். ஆகவே, உடையானுக்குப் படை வெற்றி தரும்.

பொதுப்பெயர், சிறப்புப்பெயர், சிறப்பில் சிறப்பு எனப் பெயர்ச்சொற்கள் மூவகைப்படும். வேல் என்பது பொதுப்பெயர். எமன் கையில் பகைவரை வெல்லும் படை யாக அமைந்த சூலம் சிறப்புப்பெயர். சிவன் கையிலும் வேலுண்டு. சிவன் கையகத்து வேல், பொதுப்படை. ஏன்? வேலே யன்றிப் பரசு, மான், மழு முதலிய பல அவனிட

முள்ளன. சம்மார கருத்தா என்பதை மட்டும் காட்ட இவை அமைந்துள்ளன. இக்கருத்தைப் **பிரபுலிங்கலீலையில் சிவப்பிரகாசர்** நன்கனம் விளக்கியுள்ளார். வசவர் மாளிகைப் படியில் வைத்துள்ள கதவுகள் என்றும் மூடப்படவில்லை. பெயரளவில் கதவுகளாக இருந்தன. அது எதைப்போல் எனின் சிவபிரான் கையில் படைகளிருக்கின்றனவே பொறிய அவை எஞ்ஞான்றும் உபயோகப்படுத்தப்படவில்லை யாதல் போல என்க. இச் சிவபெருமான் முருகனை வழிபட்டுநின்ற நெறியைக் காண்க.

> நாதா குமரா நமவென் றரனார்
> ஓதா யெனவோ தியதெப் பொருள்தான்.

சில தந்தைமார் தம் மக்கள் நடக்கை ஒழுங்கினைக் கொள்ளாத காலத்தில் 'அப்பா உனக்கொரு வணக்கம்' என்பர். அவ்வாறே நம் இறைவன் முருகனை நோக்கி, "நாதா குமரா நம" என்றனர்; இல்லை. அறிந்துள்ள, 'ஓதாய்' என்ற வினையைக் கவனிக்க. ஓதுதல், என்பது அன்பால் கூறுதல். 'காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி ஓதுவார்' எனுமிடத்து ஓதுதல் என்ற வினைத் திண்மையைக் காண்க.

'குமராய நம:' என்று விளிக்கின்றான் இறைவன். கு= அஞ்ஞானத்தை; மாராய=அழிப்பவனுக்கு (மிரு. to die) நம=நமஸ்காரம். மெய்ஞ்ஞானமே தன் உருவமாகத் திகழும் சிவபெருமான், 'அஞ்ஞானத்தை நீக்குபவனே உன்னை வணங்குகின்றேன்' எனத் தன்பாலுள்ள அஞ்ஞானத்தை ஒழிக்கவேண்டுவான்போல் வேண்டியதேன்? பிணி நோயுற்றால் மருந்தைத் தாயுண்பது போன்று மக்களின் அஞ்ஞான அவத்தையை ஒழித்தற்கும், மக்கள் முருகப் பெருமான் அடிகளை வணங்கி பயன்பெற வேண்டுமென்று அறிவுறுத்துவதற்கும் தானே நடந்து காட்டுகின்றான் என்க. இறைவன் கையிலுள்ள வேலினும் இறைக்கிறைமையுடைய முருகன் கையிலுள்ள வேல், சிறப்பில் சிறப்புடையது என்க. இக் கருத்து யாண்டுப் பெறப்படுகின்றது?—சிந்தாமணி என்ற சைன காவியத்தில் முத்தி இலம்பகத்தில் வரும் செய்யுளிலுள்ள 'புகழ் வெவேலோய்' என்னும் தொடருக்கு, "மதுகையுடைய முக்கட் கடவுளும் கூற்றும் வந்தி வெற்றி பெறுதற்குச் சிறந்தது என்பது பற்றித் தொல்-பொருள், புறத்-21ல் "பொரும் பகை தாங்கும் வேலினானும்" என்றமையால் உண்டு

வேலினை வியந்து மண்ணு நீராட்டின வெற்றியைக் கண்டோர் புகழ்தலின் 'புகழ் வேல்' ஆயிற்று" என்றனர். எனவே, முருகன் வேல் சிறப்பில் சிறப்பு. ஏனைய இரண்டும் பொதுவாகவும் சிறப்பாகவும் கொள்ளப்படும் என்க.

ஆகவே அவ் வேல் என்பதென்ன? யார் கையில் எது இருந்தால்தான் என்ன? விடை கூறுவோம். இவ் வேல், மரம் முதலியவற்றால் செய்யப்பட்டதன்று. 'The Science of Language' என்னும் சுவடியில், Man=மனிதன், என்ற சொற்குப் பொருள்செய்த விடத்து, 'மரத்தால் ஆயுதமாகிய அம்பினைச் செய்து எறிந்து விலங்குகளைக் கொல்லும் ஆற்றல் பெற்ற காலத்திலே மனிதனுயினுன்' என்றனர்.

முருகன் கை வேல், செய்யப் பட்டதா? ஒருவருக்குக் கொடுக்கப்பட்டதா? பிறகு பதிலைக் காண்க.

## ஞான வேல்

அஞ்ஞானப் பகையை வெல்ல வேலினும் ஒன்றில்லை. இது மாலை வேலையாதலால் முன்பின் முரண்பட்டு ஏதோ கூறுகின்றேன் என்று எண்ணற்க. வேலும், ஞானமும் பெயரால் வேறுபடலாமே யொழிய பொருளால் ஒன்றே. வடமொழியில் ஞானம் என்பதே தமிழில் வேல் என்பதாம். 'சக்தி' என்று வடமொழியில் கூறினால், 'வெல்லுவதையே தன் சுபாவமாக, உடையானுக்கின்பம் செய்வதையே தன் சுபாவமாக உடையது' என்பது பொருள். மந்திர சாந்திரத்தில், **தியான ஸ்லோகத்தில்** 'சக்திம்வச்ரம்' என்றார். சக்தி என்றுதானே காணப்படுகின்றது. வேல் எனக் குறிக்கப்படவில்லையே என்று வினவலாம். மற்றொரு சுலோகத்தில்—சக்தி என்ற சொல்லுக்குப் பொருள் கூறுவதுபோல, "ஞான சக்திம்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகவே, ஞானமாகிய சக்தி; இருபெயரொட்டுப் பண்புத்தொகை என்க. ஆதலின், ஒருவரால், ஒரு காலத்தில், ஒன்றினுதவியால் செய்யப்பட்டதன்று வேல். இதற்கு வடமொழி மேற்கோள்கள் இரண்டு காட்டினேம். தமிழ் மக்களும் இவ்வாறு எண்ணினரா? எண்ணினர். அவ்வாறு எண்ணியோர், பாட்டைக் கட்டும் கவிஞர் அல்லர். ஈசனை எண்ணி அநுபவித்து அடங்கியோராவர். பால் நிறைந்த குடத்தில் மீண்டும் ஊற்றும் பால் வழிந்தொழுகுவதைப்போல் இறையன்பு

தம்பால் நிறைய மேலும் வழிதரும் நிலையில் செய்யுள்கள் வெளிவருகின்றன. அச் செய்யுட்களை அநுபூதிப் பாட்டுகள் என்ப.

'கந்தரநுபூதி பெற்றவர்' எனத் தாயுமானவரால் புகழ்ந்து கூறப்பட்டவர் அருணகிரிநாதர். அவர் பழநித் திருப்புகழில், 'ஆலகாலம்' என்ற தொடக்கமுடைய புகழில்

நாளிகேரம் வருக்கை பழுத்ததிர்
சோலைசூழ் பழநிப் பதியிற்றிரு
ஞான பூரண சக்தி தரித்தருள் பெருமாளே.

என்றனர். எல்லாச் சக்தியும் உண்டென்பார் பூரண சக்தி என்றனர். இச்சா, கிரியா எனப் பல சக்திகளுண்டாதலான், அவற்றினை நீக்குவதற்காக 'ஞான சக்தி' என்றனர். காலஞ் சென்ற சண்முகம் பிள்ளையவர்களின் தந்தையாராகிய சுப்பிரமணிய பிள்ளை யென்பார் அச்சிட்ட திருப்புகழ்ப் புத்தகத்தில் 152-ம் செய்யுள் முன்னது.

நம்மவருள் ஒரு வழக்கம் உண்டு. பெரும்பாலும் அன்பர்களிடம் இல்லாம லிருக்கலாம். சொன்னவற்றைச் சொன்னவாறே ஏற்றுக்கொள்ளாமல் வினுதல் என்ற குணம் பலரிடம் இருக்கக் காண்கின்ரும். அவர்கள், 'வேல்' என்று கூறப்படவில்லையே என்று கேட்கலாம். அடுத்த 167-வது செய்யுளில், 'ஒருவரை ஒருவர்' என்று தொடங்கும் புகழில்,

சுரர்பதி அயனும் மாலும் முறையிட
அசுரர் கோடி திகைளழ விடும்
மெய்ஞ்ஞான அயிலோனே.

என்றது காண்க. இத் தூணை ஒழுங்குறச் செய்த தூண் வேலைக்காரனை, நல்ல சிறப ஞானமுடையவன் என்கின்ரும்; மிருதங்கம் அடிக்கும் ஒருவனை நல்ல ஞானம் உடையவன் என்று சொல்லுகின்ரும். இவையெல்லாம் பொய்ஞ்ஞானம்; அழியும் ஞானம். ஆதலால் ஞானம் என்று கூருது, மெய்ஞ்ஞானம் என்ருர். மண்டல புருடோத்தமர் என்ற அயல் மதத்தினர் தம் 11-ம் நிகண்டில், 'அயிலென்ப வேலே கூர்மை' என்றனர். ஆகவே ஞானம் என்பது வேலாயிற்று.

## தனிவேல்

இவ் வேல் தனிச் சிறப்புடையது. தனித்த இலக்கண முடையது. மற்றைய படைகளைப் போல் உடம்பை அழிக்காமல், உயிருள் கலந்து உயிரையும் மயக்கும் பெரும் பகையாகிய அஞ்ஞானத்தை அழிக்கும். ஆதலால், இதனைத் தனி என்ற அடை கொடுத்து வழங்குவர்.

1. முருகன் தனிவேல் முனிநங் குருவென்
 றருள்கொண் டறியார் அறியும் தரமோ

2. சாடும் தனிவேல் முருகன் சரணம்
 சூடும் படிதந் ததுசொல் லுமதோ

3. கூகா எனஎன் கிளைகூ டியழப்
 போகா வகைமெய்ப் பொருள்பே சியவா
 நாகா சலவே லவநா லுகவித்
 தியாகா சுரலோ கசிகா மணியே.

இவ்வடிகளைக் காண்க. இது ஞான ஆயுதம் என்க. பிற எல்லாவற்றினும் இது உயர்ந்தது. வழக்கில், 'வேலாயுதம்' எனக் காண்க. "இருவகை வழக்கிலும் நிலைபெற் றன்றே" என்ற குமரகுருபர அடிகளின் வாக்கிற்கிசைய வேல், இரு வழக்கிற்கும் இயைந்து பொருள் தருகின்றது.

## ஞானத்தின் இயல்

ஞானம் ஒவ்வொருவருக்கும் மிக வேண்டியதொன்றும். இல்லையேல் ஆணவ இருட்குழம்பில் அவதியே படல் வேண்டும். திருவன்னியூர்த் தேவாரத்தில், திருநாவுக்கரசர்,

"ஞானம் காட்டுவர் நன்னெறி காட்டுவர்
தானம் காட்டுவர் தம்மடைந் தோர்க்கெலாம்"

என்றனர்.

ஞான வருகையும் அஞ்ஞான ஒழிவும் ஒரே காலத்தில் நடக்கின்றன. இருள் ஒழிந்த தெப்போது? ஒளி வந்த தெப்போது? இவ்வினாக்களுக்கு விடை கூறுதலும், ஞான வருகை, அஞ்ஞான நீக்கம்: என்பவற்றை விளக்கிக் கூறலும் ஒன்று என்க.

இதனைச் சிவஞான சித்தியார் சுபக்கம் 8-ம் சூத். 27-ம் பாட்டில் பின் வருமாறு காண்க.

அஞ்ஞானத்தால்
உறுவதுதான் பந்தம் உயர் மெய்ஞ்ஞானத்தால்
ஆனத்தா லதுபோவது அலர்கதிர்முன் னிருள்போல்
அஞ்ஞான மறப்பந்தம் அறும்முத்தி யாகும்
ஈனத்தார் ஞானங்கள் அல்லா ஞானம்
இறைவனடி ஞானமே ஞானம் என்பர்.

## முருகனும் வேலும்

இவ் 'வேல்' ஆகும் 'ஞானம்' முருகன் கையிலுள்ளது. முருகனுக்குப் பெயரும் உருவமும் இல்லையாயினும் அன்பர்க்காக அமைந்தன பல. அவ்வாறு சிறந்தனவாகக் கூறப்படுவன 10,000. இவ்வளவையும் சொல்லற்கு அவகாசம் இல்லை எனச் சிலர் எண்ணலாம். ஒரு நாளில் ஒருமுறை இவ்வளவையும் சொல்ல முடியாதே என்றும் கவலையுறலாம். அவர்கள் கைக்கொள்ள (சகஸ்ரநாமம்) 1000 முக்கியம் என்றனர். ஆயிரமும் பேரெண் என்னின் பெரியோர் 300 உண்டு என்றனர். இது (திரிசதி) எனப்படும். இவற்றையும் சொல்ல முடியாது என்றால், "நன்று இதோ 108. கைக்கொள்" என்றனர் அவர். இப்பெயர்களையும் கூற முடியாதுபோலிருக்கின்றது என்று ஐயுறுவோரைநோக்கி, நோய் நீங்க மருந்து தரும் மருத்துவரைப்போல, 16 பெயர்களைக் கூறி 'இவற்றைச் சொல்லுங்கள்' என்றார்.

இவ்வாறு கண்ட பதினாறு நாமங்களுள் ஒன்று **ஞான சக்திதராய நம:** என்பது. 108-ல் ஒன்று, **சக்திதராய நம:** 300-ல் ஒன்று **சக்திபாணி நம:** 1000-ல் ஒன்று **சக்திதராய நம:** ஆகவே, பெருந்தொகைப் பெயர்களிலும் குறுந்தொகைப் பெயர்களிலும் வேலேந்திய நாதன் என்னும் **புகழ்ப்** பெயர் அமைந்திருத்தல் காணற்குரியது. தோத்திர **நூலில்** **'மகா சக்தி யுக்தம்'** என்றனர்.

அறிவு துணை செய்யும் காலம் இது. தமிழர் தமிழிலேயே கொள்ள வேண்டுமென்ற பற்றுடன் விளங்குகின்றனர். **பற்றுடையார் போன்று நடிக்கும் சிலர் போலி நடிப்பை நான் அறவே வெறுக்கின்றேன்.** தமிழ்ப் புத்தகங்களை நன்குகப் படிக்க வேண்டும், அவற்றில் பழகல் வேண்டும். அவ்வறிவைப் பெறுதல் வேண்டும். இல்லையேல் தமிழரென்று வெளிக்குக் கூறிக் கொள்வோருக்கு வெட்கமில்லையென்றே நான் கூறுவேன். தப்பை அறியாதார்போலப்

பழகுவதா நாகரிகம்? இதுவோ உயர்ந்த பழக்கம்? சமய நூல் அறிவு வேண்டும். திருப்புகழில் தோய்ந்து படிக்க வேண்டும். திருப்புகழ் படிப்போருக்குச் சிந்தைவன்மை உண்டு. "திருப்புகழ் படிக்குமவர் சிந்தைவலு வாலே" என்றதைக் காண்க. பழங்காலத்தில் திண்ணைப் பள்ளிக்கூடத்தின் படிப்பு முடிந்தது என்றால் திருப்புகழ் நன்றாகப் படிக்கக் கற்றுக் கொண்டானென்று எண்ண வேண்டும். அவ்வாறு திருப்புகழ் ஓர் எல்லையானமைக்குக் காரணம் அதன்கண் சந்தக் கடினம் இருத்தலே. இரண்டொரு புகழை இப்போது நினைவிற்குக் கொண்டுவருவோம்.

"சக்தி கைத்தலம் நித்தம் பெற்றுக்
கச்சியில் நிற்கும் பெருமாளே"

—திருப்புகழ்

"இலகு அருட் சக்தியே சக்தியா
எடுத்த ஞானச் செல்வா!'

—போரூர் சந்நிதிமுறை வருகைப்பருவம்

## வேல் வழிபாடு

தெய்வமே வேல். வேல் வேறு தெய்வம் வேறு என்று காணற்க. சிலர் என்னை நெருங்கி முருகனைப் பூசிக்கலாமா? என்று கேட்கின்றனர். ஏறக்குறைய 45 ஆண்டுகளாக வெளியில் சென்று பலருடன் பழகும் பழக்கம் எனக்கு உண்டு; இவ்வாண்டுகளில் ஒருவரேனும் என்னை நெருங்கி எங்கள் வீட்டில் பணமிருக்கலாமா? என்று கேட்பார்களா என்று எதிர்பார்க்கின்றேன். இதுவரை ஒருவரும் கேட்டாரில்லை. வேலினை ஏந்தும் ஏந்தலாகிய முருகனைப் பூசிக்கலாமா? வேலினைப் பூசிக்கலாமா? என்ற வினாக்கள் மட்டும் எழுவதேன்? வேலின் பெருமையை அறியாமையினாலன்றோ இவ்வினாக்கள் எழுகின்றன.

ஞானம் வேண்டுமா என்றால் வேண்டியதில்லை என்று எவர் மறுப்பர்? ஆணுக்கும் பெண்ணுக்கும் மிகுதியும் வேண்டியதே. பணம் இரும்புப் பெட்டியில் இருத்தலினும் கையிலிருத்தல் நன்றென்று சாதாரண அறிவுடையவனும் கருதுகின்றானல்லவா? அவ்வாறே வேல் கோயிலில், வீட்டில், பூசை அறையில் இருத்தலினும் உடம்பிலிருத்தல் உயர்ந்தது.

பணம் தானடைந்த இடத்திற்கேற்ப பகை துன்பம் முதலியவற்றை உண்டாக்குகின்றது, "அற்பரானவர்தமக்குச் செல்வமல்லது பகை வேறுண்டாமோ" **பரஞ்சோதியார் திருவிளையாடல்.** குழந்தையின் கையில் கூரிய கத்தி தரப்படுமாயின் அது தன்னையும் துன்புறுத்திக்கொண்டு தன்னையொத்த பிற குழந்தைகட்கும் ஊறு உண்டாக்கும். அவ்வாறே பணம் பல்வகை இன்னலையே விளைத்து நிற்கும். இன்பமே தந்து துன்பத்தை என்றுந் தாராத ஞானச் செல்வமாகிய வேல் கையில் இருந்தால் பேரின்பத்தை விளைக்குமென்பது சொல்லாமலே அமைகின்றது.

இப்பொழுது உங்களுக்கு, கோயிலில் எனக்குக் கிடைத்துள்ள அநுபவங்களில் ஒன்றிரண்டைக் கூற விரும்புகிறேன். உடையணிதலில் ஒரு குறைவுமின்றி விளங்கும் ஒருவர் வேலுடன் விளங்கும் கடவுளைக் காட்டி 'இது என்ன' சாமி? என்று கேட்கின்றார். மற்றொருவர் பெருவயிற்றுடன் விளங்கும் சாமியைக் காட்டி 'இது என்ன சாமி? என்று வினவுகின்றார். இவர்தம் அறியாமையை என்னென்பது. வேலுடன் விளங்கும் வேந்தனைக் கண்ட அவர் வேலைக் கண்டதனாலேயே முருகன் என்று தெளிவுற அறியவில்லையேல், அவருக்குச் சமய அறிவு எங்கே இருக்கிறது? தொப்பையைக் கண்டவுடன் விநாயகரென்றறிதல் அவசியமல்லவா? சூலபாணி என்பது சிவபெருமான் பெயர்களுள் ஒன்று. ஆனால் அவன் சூலமின்றியும் இருப்பன். வேலில்லா முருகனில்லை. இளமைக் கால உருவமாயின், இல்லாதிருத்தலில் குற்றம் இல்லை.

## வேலும் சரித்திரமும்

வேல் ஞானமென்று இதுவரை கூறிவந்தோம். அதனைச் சரித்திரத்தில் சம்பந்தப்படுத்திக் காண்போம். சூரபன்மன் நடுக்கடலில் மாமர உருவில் நின்று உலகத்தைத் துன்புறுத்தினான். முருகன் வேலினை நோக்கி அசுரனைத் தடிந்து வருமாறு ஏவினர். வேல் சென்றது. மாமர உருவில் அரக்கனைத் தடிந்தது. அசுரனுடன் இயைந்தமையால் உண்டாய குற்றம் நீங்கக் கங்கையில் நீராடி மீண்டு முருகனை நோக்கி வந்தது. வேலுக்கும் ஆறுமுகங்கள் உண்டு. காஞ்சிக் குமர கோட்டத்தில் அவ்வா றமைந்த வேல் இன்றும் உளது. வேலைத் தொடர்ந்து சூரன் தன் வடிவில் பின் வந்தான்.

முருகனை நோக்கிய முகத்துடனிருந்த வேல் மற்றைய படைகளைப் போன்றதாயின் பின்வருமவனை அறிய முடியுமோ? ஞானத்தையே தன் உருவமாகப் பெற்றது வேல்; ஆதலின், பின்வரும் அசுரனை அறிந்தது. முருகன் கையை அடையவில்லை. மீண்டும் அசுரனைத் தாக்குமாறு முருகன் கட்டளை இடவுமில்லை. அறிவு நிறைந்த அது திரும்பியது. அசுரன் மார்பில் மோதியது. எவ்வாறு? அசுரன் இரண்டு உயிர் ஓருடம்பு கொண்டவன். “இருபே ருருவின் ஒருபேரி யாக்கை” யென்றார் நக்கீரர். இரண்டுயிர்க்கும் எவ்வித கெடுதியும் இன்றி மோதி அவனை இரண்டாகப் பிளந்தது. உயிர்களுக்குக் கெடுதியின்றிப் பிளந்த அவ்வுயிர்வினை நோக்குக! இச்செயல் அறிவிலார்க் காகுவதுண்டோ?

## ஞானமும் வேலும்

ஞானமயம் வேல் என்பதற்கு மேலும் இரண்டொன்று சொல்லுகின்றேன். சிவன் முருகனை நோக்கிச் சூரனை அழிக்கும்படி சொல்லுகின்றார். சொல்லும்போது சூரனை அழித்தற்குக் காரணமும் உடன் கூறுகின்றார்.

பாரினை அலைத்துப் பல்லுயிர் தமக்கும் பருவரல் செய்துபண் ணவர்தம்
ஊரினை முருக்கித் தீமையே இயற்றி உலப்புறு வன்மைகொண் டுற்ற
சூரனை அவுணர்க் குழுவொடும் கடிந்து சுருதியின் நெறிநிறீஇ மகவான்
பேரரசளித்துச் சுரர்துயர்அகற்றிப்பெயர்தியென்றனன் எந்தைபெருமான்,

உலகத்தைத் துன்புறுத்துதலும், உயிர்களுக்குக் கேடு சூழ்தலும், நல்லார்க்குக் கெடுதலைச் செய்தலும், தீய காரியங்களைப் புரிதலும் ஆணவத்தின் செய்கைகளாம்; அஞ்ஞானத்தால் நிகழ்வனவும் இவையே. இவற்றைக் கூறி இவற்றைப் போக்குவதற்கு வேலினைக் கையில் ஈந்தனன் என்றால், அசுரனையே யன்றி மாயா காரியங்களையும் அழிக்கும் வன்மையது அது என்பது தாமே பெறப்படுதல் காண்க.

## நாயக வேல்

அடுத்துக் காண்போம். மேலும் இறைவன் கூறுகின்றான்.

ஆயதன் பின்ன ரேவின்மூ தண்டத் தைம்பெரும் பூதமும் அழிவுறா
ஏயபல் லுயிரும் ஒருதலை முடிப்பது ஏவர்மேல் விடுக்கினு மவர்தம்
மாயிருந் திறலும் வரங்களும் சிந்தி மன்னுயி ருண்பதெப் படைக்கும்
நாயக மாவ தொருதனிச் சுடர்வேல் நல்கியே மதலைகைக் கொடுத்தான்.

இங்கே காணற்குரிய பகுதி எப் படைக்கும் நாயக மாவது ஒரு தனிச் சுடர் வேல் என்பது. நாயகம் எனும் சொல் பெயரளவில் நில்லாது (நடத்துவது) என அந்வர்த் தகமாகப் (பொருளொடு கூடியதாக) பொய்சொல்லா வேதத்தைச் சொன்ன வாயால் சக்தி உருவனுகிய கடவுள் கூறுகின்ருன்.

## சிவன் தந்த வேல்

முருகனுக்கு வேலை எவர் கொடுத்தனர்? சிவபெருமான். உலக வழக்கத்தில், அம்பிகை கையிலிருந்து வேலை வாங் குவது மரபா யிருக்கின்றது. இது தவருே? எனின், அங்கே சொற்ப உண்மை காணப்படுகின்றது. பொய் மிகுந்திருக் கிறது. மக்களுக்கு முழு உண்மையில் கருத்திருத்தல் குறைவே. வேலினைச் சிவனே தந்தனன்; அம்பிகை அல் லள்.

## செவ்வேள் செவ்வேல்

முருகன் அசுரனை அழிக்குமாறு வேலினை ஏவுகின்ருன். அப்போது வேல் சென்றது எனும் இடத்தது இச்செய்யுள்.

வயிர்த்திடு நிலைமை சான்ற வன்கனுன் உயிரை வௌவச்
செயிர்த்திடும் தெய்வச் செவ்வேல் திணிநில வரைப்பில் அண்ட
மயிர்த்தொகை யாக ஏனைப் பூதமும் அழிய அங்கண்
உயிர்த்தொகை முருக்கத் தோன்றும் ஒருவனிற் சென்ற தன்றே.

இச் செய்யுளில் செவ்வேல் என்னுந் தொடரைக் காண்க. செம்மை, கருமை, வெண்மை ஆகிய பல நிறங்களின் இயைபு முருகனுக்கில்லை. சிவன் உருவில் கருமை, வெண்மை, செம்மை கலப்புண்டு. விநாயகர் கருமை, செம்மை, வெண்மை, மஞ்சள் என்னும் நிறங் களில் காணப்படுகின்றனர். ஆனுல் முருகனுக்குச் செந் நிறம் தவிர வேறு நிறமில்லை. முருகனைப் பற்றிய அட் டோத்திரத்தில் 'குங்கும வர்ணய நம:' என்று அவன் விளிக் கப்படுகின்ருன். செவ்வானம் முருகன் நிறம் என்று பேசப் படுகின்றது. பகல் போன்ற வெண்மை நிறத்தைச் சிவனது என்றும், இரவு போன்ற கருமை நிறத்தை அம்பிகையினது என்றும், இடைக்காலமாகிய சந்திக் காலத்தின் செந்நிறத்தை முருகன் நிறமென்றும் அறிஞர் விதந்து கூறுவர். சிவப்பிர காசப் பெருந்தகையார் மாலைக்காலமே முருகன் நிற மென்ப தைத் 'தங்கம் தனங்க ளடைய' என்ற ஆரம்பத்தினை உடைய

செந்தில் நிரோட்டக யமக அந்தாதிப் பாட்டில் கூறினர். செந்நிறத்தினுடன் விளங்கும் முருகனைச் செவ்வேளென்றல் மரபு. ஆனால் கருநிற மன்மதனைக் கருவேள் என்பாரைக் காண்கிலேம். உலக மக்கள் செந்நிற அழகுடன் விளங்கும் ஒருவனை மன்மதன்போல் அழகாக இருக்கின்முன் என்கிமுர் கள். அத் தவறினைக் காண்க. முருகன் நிறமும் செம்மை; அவன் வேலின் நிறமும் செம்மை. ஆதலால் செவ்வேல் என்முர். செவ்வேள் ஏந்தும் வேல் செவ்வேல் என்க.

## வேலே கடவுள்

விடம்பிடித்து அமலன் செங்கண் வெங்கனல் உறுத்திப் பாணி
இடம்பிடித் திட்ட தீயில் தோய்த்துமுன் னியற்றி யன்ன
உடம்பிடித் தெய்வம் இவ்வாறு உருகெழ செலவின் ஏகி
மடம்பிடித் திட்ட வெஞ்சூர் மாமுதல் தடிந்த தன்றே.

உடம்பிடி என்பது வேலுக்குத் தமிழ்ப் பெயர். அதனைத் தெய்வம் என்றதனை நோக்குக.

அதனுலன்றே,

விண்ணவர் படைகள் தம்மில் யாதினை இதற்கு மேலா விளம்புவது.

என்றனர்.

இதனைத் தெய்வம் என்று கண்ட மாட்சிமையினுலே, ஊருள் வாழ்வோர் ஊர் வெளியில் வேலினை நட்டு வணங்கி னர். திருச்சிக்கு அடுத்து வயலூர் என்ற முருகன் க்ஷேத்திரம் ஒன்றுண்டு. அக்கோயிலுக்கு வெளியில் பல வேல்கள் நாட் டப்பட்டிருக்கின்றன. முற்காலத்து நம் மூதாதையர் வேலின் சிறப்பை அறிந்து நமக்கு அறிவிக்க முயன்ற அருமையை அறிக. வேற்கோட்டமெனத் தனியே வேலுக்குக் கோயில் வைத்துப் பூசித்த சிறப்பும் அறிதற்பாலது.

## ஆணவத்தை அடக்கும் வேல்

வீரவாகு, பானுகோபனுடன் சண்டை செய்கின்முர். அவன் அவரையும், பிறரையும் மாயையாகிய அம்பினுல் கட்டி ஏழ் கடலுக்கப்பாலுள்ள நன்னீர்க் கடலில் போடும்படி செய்தனன். (பிம்பப் பிரதி பிம்பமாக, உயிர்கள் மாயா உலகத்தில் துன்புறுவதையும் எண்ணுக.) இந் நிகழ்ச்சியை அறிந்த நாரதர் முருகனிடம் சென்று கூறுகிமுர். (குரு உயிர்க்காகக் கடவுளைப் பிரார்த்தித்தல்) முருகன் வேலை ஏவுகின்முன். (ஆண்டவன் ஞானம் தருகின்முன்) வேல் வந் தது. இதன் வருகையைக் கண்ட மாயை அகன்றது. கட்டுப்

பட்டிருந்த வாகு முதலாயோர் உணர்ச்சி பெற்று எழுகின்றனர். வேல் நல்லுணர்ச்சி தருகின்றது. வாகு வேலினைப் பார்த்துப் பின் வருமாறு கூறுகின்றார்.

'அந்தமில் ஒளியின் சீரால் அறுமுகம் படைத்த பண்பால்
எந்தைக ணின்றும் வந்த இயற்கையால் சத்தி யாம்பேர்
தந்திடும் பனுவல் பெற்ற தன்மையால் தனிவேற் பெம்மான்
கந்தனே ! என்ன நின்னைக் கண்டுளக் கவலை நீத்தேம் !

கந்தனே என்பதன் ஏகாரம் தேற்றம். கவலை என்பது ஆணவத்தின் காரியம். கவலை தீர்ந்தோம் என்பதும் ஒன்றே. 'ஒரு மொழி ஒழிதன் இனங்கொளற் குரித்து' என்ற விதிப்படி கருமமும் மாயையும் நீங்கிற்றென்று கொள்க. வேலால் இம் மூன்றும் அழியும். வேல், தெய்வம், ஞானம் என்பன ஒரு பொருட் குறித்த பல சொற்கள். இதுவே வேலினை உடம்பிலும் கொள்ளல் வேண்டும் என்று யான் கூறுதற்குக் காரணம் என்க.

## வேலை உடம்பிலும் அணிக

வேலைக் கோயில் முதலிய இடங்களில் வைத்துப் பூசித்தலோடு உடலிலும் அணிந்துகொள்ளல் வேண்டும். நண்பர்களுக்குள் நடந்த நிகழ்ச்சி ஒன்று ஞாபகத்திற்கு வருகிறது. இருவர் மிக நெருங்கிய உணர்வுடன் பழகினர். ஒருவர் எழுந்து வெளியில் சென்றனர். அடுத்தவரும் அவரைத் தொடர்ந்தனர். முன்னவர் பின்னவருக்குத் தெரியாது ஒன்றைச் செய்யவே தனித்துச் சென்றனர். அவர் ஒரு சிறு புகைப் படத்தை எடுத்துத் தனித்துக் கண்டு மகிழ்வதைப் பின்னவர் கண்டு காணுதவர்போல நீங்கினர். இவ்வாறு தாம் விரும்பும் ஒரு பொருளைத் தம்முடன் வைத்திருந்து காணும் இயல்பு பலர்பால் காணப்படுகின்றது. இவ்வுண்மையில் உங்களுக்கு ஐயம் வரினும் வரலாம், அடுத்து யான் சொல்ல முற்படுவதை ஐயமின்றி யாவரும் ஒத்துக்கொள்வர். ஒரு இந்திரியமாகிய மூக்குக்குச் சுறுசுறுப்புத் தருதற்காக மரத்தினுலோ, வெள்ளியினுலோ, பொன்னினுலோ தத்தம் தகுதிக் கேற்பச் செய்யப்பட்ட ஒரு சிறு பெட்டியில் பொடியினை அடைத்து உடம்பிலேயே வைத்துக்கொண் டிருக்கின்றனர்.இப் பொடிக்கு இவ்வளவு பெருமை என்றால், உயிருக்கே பேரின்பத்தை நல்க வல்ல

வேற்பெருமானை உடம்பில் ஏன் கொள்ளக்கூடாது? என்று கேட்கின்றேன். செம்பினாலேனும் வெள்ளியினாலேனும் தங்கத்தினாலேனும் உயரிய மணிகளால் இழைத்தேனும் வேலை ஒவ்வொருவரும் உடம்பில் அணிவதே வேலையாகும். உங்களில் சிலர்; 'தோணிக்குப் பிறரைக் கரையேற்றும் இயல்புதான் உண்டு, தான் கரையேறாது; அவ்வாறு கூறும் நீங்கள் உடன் வைத்திருக்கின்றீர்களா?' என்று வினவலாம். 40 ஆண்டுகளுக்கு முன்னர்க் குப்புசாமிப் பத்தர் என்ற ஓர் அன்பர் தங்கப் பட்டைகளுடன் கூடிய இவ்வேலை எமக்குச் செய்து தந்தனர். இதனை யாம் எப்போதும் எம்முடன்வைத்துக்கொண்டிருக்கின்றோம். இதனைக் காண்க. எதற்காக யான் இதனை இவ்வாறு வற்புறுத்திக் கூறுகிறேன்? இராமன் பம்பை என்ற ஆற்றை அடைகிறான். அதன்கண் கொடிப் பாசியும், நீலோற்பலமும், தாமரையும், செங்கெட்டியும் செறிந்து வளர்ந்திருக்கின்றன. கொடிப்பாசி சீதையின் தலைமயிரையும், நீலோற்பலம் அவள் கண்களையும், தாமரை அவள் முகத்தையும், செங்கெட்டி அவள் இதழ்களையும் நினைவுபடுத்துகின்றன. கூறுகின்றவர் வால்மீகியாதலினாலே 'ஓ என்றழுதனன் இராமன்' என்கிறார். நாவரசர் திருக்காளத்தியைக் கண்டார். அது தென் கைலை எனப் படும். அதனைக் கண்ட அவருக்கு வட கைலாய ஞாபகம் இயல்பாக வந்தது. இவ்வாறே நம்முடனுடன் என்றும் இருக்கும் வேலினை நாம் காண்போமானால் நமக்கு நம்முடனிருக்கும் பகைவனாகிய அஞ்ஞானத்தின் ஞாபகமும் அவனை அழிக்கும் வன்மை வேலுக்கு உண்டென்னும் ஞாபகமும் வருமல்லவா?

இவற்றையெல்லாம் யார் கண்டார்கள்? இவ்வுலகத்து மக்களை வாட்டுந் துன்பங்களைப் போக்குமா இவ் வேல்? என்று சிலர் எண்ணுதல் கூடும்.

## கலக்கத்தை ஒழிக்கும் வேல்

போரூர் சிதம்பர சுவாமிகள் இயற்றியருளிய திருப் போரூர்ச் சந்நிதி முறைப் பிள்ளைத் தமிழில் தாலப் பருவம் 2-வது செய்யுளில்,

"இலங்கு மமரர் கலங்காமல் எழில்வா னுலகம் குடியேறத்
தலைமைச் சுடர்நெட் டிலைவேல் தடக்கை எடுத்தோய்
தாலேலோ.

என்றனர், அமரர் கலக்கத்தை அறவே ஒழித்து அவர்தமக் குரிய ஊரினை அவருக்குக் கொடுக்குஞ் சிறப்பினைப் பெற் றது வேல் என்றால், எளிய நம்போல்வார் அல்லலை அழித்துக் கலக்கத்தை நீக்குமென்பதும் சொல்லல் வேண்டுமோ?

## துன்பத்தை நீக்கும் வேல்

பழுத்தமுது தமிழ்ப்பலகை இருக்துமொரு கவிப்புலவ
னிசைக்குருகி வரைக்குகையை இடித்து வழிகாணும்'

ஒருவரன்றி ஆயிரவர் துன்பத்தை ஒரே காலத்தில் போக் கிய சிறப்பு வேலுக்கு உண்டு என்பதை இவ்வடிகள் விளக் குதலைக் காண்க.

'பணைக்கைமுக படக்கரட மதத்தவள கசக்கடவுள்
பதத்திடு நிகளத்துமுனை தெறிக்க அரமாகும்'

தேவர் தலைவன் விலங்கை ஒழித்து விடுவித்து இன்பந் தந் தது எனின், பிறர் துன்பங் களைதல் சொல்லாமல் அமை கிறது.

'கொடுமைத்திறம் அறவிட்டவர் கொட்டுக சப்பாணி'

கொடுமைகள் ஒழிய வேலை ஏவினன் முருகன் எனவே கொடுமைகளை ஒழிக்கும் அதன் திறம் தெற்றென விளங்கும்.

## இன்பந் தரவல்லது வேல்

பூமேவு நாபனு நான்முகத் தோனும் புரந்தரனுந்
தாமேவு வாழ்வும் அதிகார மும்பெறத் தார்புனைந்த
கோமேவு வேல்கொண் டவுணரை மாய்த்த குமரனெங்கோன்
றாமேவு தாண்மலர் போருரி லென்முடி சூட்டினனே.

சிறையுளழுந்திய குறைகளொ
ழிந்து செயங்கொடு—தேவேந்திரர் சேணுண்டனர்
திரிபுவனங்க ளொருபய
மின்றி வளங்கெழு—சீர்பூண்டற நேர்பூண்டன.

காத்தற் கடவு ளெனப்படும் திருமாலும், போகவுருவின ளுகிய இந்திரனும் பெருமானது உறுதுணையால் இன்பத்தை எய்தினர். மக்களாகிய நமக்குமட்டும் அவ்வின்பம் எவ்வாறு கிட்டாது போகும்?

## பசி நீக்கும் வேல்

பசித்தலகை முசித்தழுது முறைப்படுதே லொழித்தவுண
ருரத்ததிர நிணத்தசைகள் புசிக்கவரு ணேரும்.

இழிந்த பேய்க் கூட்டத்தின் பசியையும் போக்கிய உயர்வு வேலுக் குண்டு. ஆதலின் வழிபடு மக்களின் பசி தானே அகலுமென்க.

## வழித் துணையாகும் வேல்

தனித்துவழி நடக்குமென திடத்தும் ஒருவலத்து
மிருபுறத்தும் அருகடுத்து இரவுபகல் துணையதாகும்.

தனிவழி நடக்கும் அன்பர்களுக்கு வலப்புறத்தும், இடப் புறத்தும் முன்னும் பின்னும் எங்குமாகி இரவு பகலில் துணையாக வேல் விளங்குமென்க.

## எம பயம் அகற்றும் வேல்

1. தருக்கிநமன் முறுக்கிவரின் எருக்குமதி தரித்தமுடி
படைத்தவிறல் படைத்தஇறை கழற்குநிக ராகும்.

2. பட்டிக் கடாவில் வருமந்த காலனைப் பாரறிய
வெட்டிப் புறங்கண் டலாதுவி டேன்வெய்ய சூரனைப்போல்
முட்டிப் பொருதசெவ் வேற்பெரு மாள்திரு முன்புநின்றேன்
கட்டிப் புறப்பட டாசக்தி வாளென்றன் கையதுவே.

3. தண்டா யுதமுந் திரிசூல மும்விழத் தாக்கிஉன்னைத்
திண்டாட வெட்டி விழவிடு வேன்செந்தில் வேலனுக்குத்
தொண்டா கியஎன் அவிரோத ஞானச் சுடர்வடிவாள்
கண்டா யடாஅந்த காவந்து பார்சற்றென் கைக்கெட்டவே.

உலக வாழ்வைக் காட்டினும் இறுதியில் நேரும் இயமன் தொந்தரவையே பெரிதென எண்ணுவோரும் உண்டு. அத் துன்பத்தை அறவே அகற்றும் பெருமை வேலுக்கு உண்டு. இறுதிச் செய்யுளை ஓர்க. அது பாட்டாகக் காணப்பட வில்லை. சண்டையில் கோபமோடு பேசும் பேச்சாகவே அமைந்திருக்கின்றது. முதலில் குறித்த வண்ணத்தின் உயர் வையும் சிந்திக்க வேண்டும். எமன்வருங் காலத்து இறை கழலுக்குச் சமமாக வேல் மாறும் என்கின்றது அது. திரு வடி 'யான் எனது என்று அற்ற இடமே திருவடியா' என்ற னர் குமரகுருபரர். ஆதலின் ஞானமே உருவாகிய வேல்,

அகங்கார மமகாரமற்ற இடமாகிய ஞானமெனும் திருவடியாக மாறும் என்பதில் வியப்பொன்று மில்லை.

## அச்சம் அகற்றும் வேல்

ஒரு சிறு குறிப்பு. உணவு, உடை, அச்சம் இம்மூன்றும் உயிர்களுக்கு இயல்பு. "ஊணுடை *அச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல" என்பது குறள். கொடிய அச்சத்தை வேலகற்றும்.

'அச்சமகற்றும் அயில் வேலும்' குமரகுருபரர்.

## ஒப்பற்ற துணையாகும் வேல்

"சூலம் பிடித்தெம பாசம் சுழற்றித் தொடர்ந்துவரும்
காலன் தனக்கொரு காலுமஞ் சேன்கடல் மீதெழுந்த
ஆலங் குடித்த பெருமான் குமார னறுமுகவன்
வேலுந் திருக்கையு முண்டே நமக்கொரு மெய்த்துணையே"

ஒப்பற்ற துணை மனைவி, மக்கள், உற்றார், உறவினரல்லர். இவ்வாறே பலரைச் சொல்லிக்கொண்டு செல்லலாம். முடிவாகக் கூறும் ஒப்பற்ற துணை முருகன் வேலும் அதனை ஏந்திய கையுமாகும்.

## அடங்காப் பெருமையது வேல்

வேலைப்பற்றிப் பல பேசலாம். அது ஒரு கடல் போன்றது. அடியேன் வினையைப் போக்கும். 'வினையோட விடுங் கதிர் வேல் மறவேன்' (அநுபூதி). அடியேனை நீதியில் நடத்தும். இங்ஙனம் பல செய்யும் சீர்மையுடையது இவ்வேல் என்க. மண்வெட்டி, கத்தி, கோடரி எனப் பெயர் உடையோர் எவரையும் காண்கிலேம். வேலினை ஒட்டிப் பல பெயரினை மக்கள் வைத்துக்கொண் டிருத்தலைப் பார்க்கின்றோம். வேல் என்று தனித்தும், வேலாயுதம் என அது ஒரு படை என்பதை ஞாபகப்படுத்தியும், கதிர்வேல் என அது ஞான ஒளி நிறைந்தது என்று அறிவித்தும், வடிவேல் என என்றும் மடியாத கூர்மையுடன் விளங்குவது என்பதைத் தெரிவித்தும்; தங்கவேல், மாணிக்கவேல், வயிரவேல், வச்சிரவேல் என உலோகங்களோடும், நல்ல மணிகளோடும் இயைத்துக் கூறியும், வெற்றிவேல் என வெற்றியுடையதென்று

*எச்சம். (பா - வே.)

உணர்த்தியும், குழந்தைவேல் எனக் குழந்தையாம் முருகன் ஏந்திய வேல் என அறிவுறுத்தியும் கூறும் பெயர்கள் எண்ணில. இவ்வாறே இருபது பெயர்களுக்கு மேலும் கூறலாம்.

## முடிவுரை

வெல்லுவது வேலென்றும், அது ஞான மயமானதென்றும், நமக்கு வேண்டியது என்றும், நம் பகையை ஒழிப்பதென்றும், நாம் வழிபட வேண்டியதென்றும், அதன் உருவ ஞாபகத்தை உடம்பிலும் இருத்துதல் வேண்டுமென்றும், பயத்தைப் பசியைத் துன்பத்தைப் போக்குவதென்றும், இன்பத்தை நிறைவிக்கும் என்றும், மாயை, கர்மம் முதலியவற்றை அழிக்குமென்றும், எமனை நீக்குமென்றும், முத்தியெனும் வீட்டில் புகவிடுமென்றும் இதுவரை கூறினோம். வேலால் முதன்மையாக ஊர்ப் பெயரும் உண்டென்பதை '**வேலுடையான் பட்டு**' எனுமிடத்தால் காண்கின்ற நாம், முருகனுக்கு வேலால் ஒரு தனி உயர்வு உண்டென்று கொள்ளவேண்டியவர்களாயிருக்கின்றோம்.

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற இராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகும் செவ்வேள் மலரடி போற்றி அன்னான்
சேவலும் மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

இச்செய்யுளில் ஆறுமுகங்களுக்கு ஒரு போற்றியையும், ஆறு கருணைகளுக்கு ஒரு போற்றியையும், பன்னிரு தோள்களுக்கு ஒரு போற்றியையும், இரு திருவடிகளுக்கு ஒரு போற்றியையும் கூறிவந்த ஆசிரியர் வேலுக்கு இரண்டு போற்றியைக் கூறியது கவனிக்கத்தக்கது.

நமதாண்டவன் கலியுக வரதன்; சஷ்டியில் திருவிளையாடல் செய்து யாவருக்கும் இன்பந் தந்த அவன் வேலை அவனருளால் பேசினோம். அவனை வணங்கி நிறுத்துவோம்.

அந்திப்போது அழகுறவே நடித்தருளும் வழித்துணைவர் அருளும் சேயை
வந்திப்போர் நினைத்தபடி மயில்ஏறி அயிலெடுத்து வரும்செவ் வேளைச்
சிந்திப்போம் புகழ்ந்திடுவோம் மலரணிவோம் அவர்கமலத் தாளும்
தோளும்
சிந்திப்போம் ஆதலினால் நமதுபழ வினைகளெல்லாம் சிந்திப் போமே.

—திருவிரிஞ்சைப் புராணம்

## ௩. தாரகன்

மெய்யன்பர்களே !

இச் சொல்லைக் கேட்கும்போது, இவன் மரியாதையைப் பெறாதவன் என்ற எண்ணம் வரும். ஏதனால்? அவன் ஒருமை யெண்ணில் பேசப்படுதலால். கடவுள் வகையில் ஒருமை யாகக் கூறுவது உயர்வாகும். ஏனையோருக்கு அது சிறுமை யைப் பயக்கும். எவ்வாறு? கடவுளை ஒருவன் என்று கூறு வது நூலிலும் உலகிலும் காணப்படும் வழக்காகும். சிவன் என ஒருமை எண்ணாகக் கூறுவாரே யன்றிச் சிவர் எனப் பன்மையாகக் கூறமாட்டார். கடவுள் ஒருவன் ஆதலின் பன்மையாகப் பேசுதற்கு வழியில்லை.

தாரகன் ஓர் உயிர். உயிர்கள் பல. ஆகவே பன்மை யில் அவனை அழைத்தல் நியாயமும் ஒழுங்குமாம். அவ்வா றன்றி ஒருமை யெண்ணில் நாம் கூறுகின்றோமாதலினாலே பெருமைக் குரியவனல்லன் என்பது பெறப்படும்.

## கேள்விச் செல்வம்

நாம் பெற்றுள்ள செல்வங்கள் பல. அவற்றுள் சிறந் தது காதால் கேட்டு அநுபவிப்பதாகும். மற்றைய நன்மை தரல் இல்லை. சிலர் தகுதி பாராது எதனையும் கேட்டுவிட லாம் என்பர். அவ்வாறு கேட்குங்கால் நன்மை தரும் சொற்களே யன்றித் தீமை தருமவற்றையும் கேட்க வேண்டி வரும். கதவு இல்லா வீட்டில் நுழையாப் பொருளின்று. காதும் அங்ஙனமே. கண், வாய் இவற்றிற்குக் கதவுகள் உள்ளன.

பார்க்கக் கூடாதவற்றைப் பார்க்க நேரின் இமைகள் என்னும் கதவுகளால் கண்ணை மூடிக்கொள்ளலாம். உண்ணத் தகாத உணவை வேண்டாம் என்று மறுத்து வாயை மூடிக் கொள்ளலாம். இவ்வாறு வேண்டுதல் வேண்டாமைகளை அறிந்து கொள்ளவும் விலக்கவும் கதவுகள் இல்லாத நிலை யில் காது இருக்கின்றது. ஆகவே காதினை அடக்கி யாளும்

அறிவு வேண்டும். இவ்வுண்மையை நாயனர் "எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும், ஆன்ற பெருமை தரும்" என்றார். பரிமேலழகர் எனைத்தானும் என்ற சொற்குக் 'காலத்தாலும், பொருளாலும் குறைந்த அளவு உள்ளவாயினும்' என்னுங் கருத்தில் உரை கூறினர். ஆகவே குறைந்த காலத்தில் சிறிய பொருளையேனும் கேட்டல் வேண்டும் என்பது பெறப்பட்டது. அடுத்து நல்லவை என்ற சொல்லில் நம் நாட்டம் செல்லுதல் வேண்டும். பல என்பதும் நல்லன என்பதும் அச்சொல்லால் கிடைக்கின்றன. இக்காலத்தில் ஒருவனை ஒருவன் திட்டுகின்றான் எனின், அவ்விடத்திலே பெருங் கூட்டம் கூடுகிறது. ஆனால் புகழ்ச் சொல் நிறைந்த இடத்தில் மக்கட் கூட்டமில்லை.

## கேட்கும் பொருள்

நாம் நல்லன என்று எவற்றைக் கேட்கவேண்டும்? பலவாயினும் ஒன்று கூறுகின்றேன். நம்மைப்போல் மக்களுள் ஒருவன் இருந்து தவம் செய்து நல்லன பெற்றுப் பின் மறந்து தீய வழியில் நடந்து துன்புற்று நன்மை யடைந்தானெனின், அவனைப் பற்றிக் கேட்டல் வேண்டும். புதுவது புனைந்தகதைகள் பல வெளிவருகின்றன. அவற்றைக் கேட்டலால் பயனொன்றும் இல்லை. நடவாதனவாகிய அவையும் ஒருவாறு அறிவையும் வளர்க்கலாம். அறிவு வளர்ச்சி நன்மையையே பயக்காது. அறிவு ஒழுக்கத்திற் குரியதாக வளர வேண்டும். இன்றேல், பிறருக்குத் தீமை பயக்கும்; உடையானுக்கு அற்ப நன்மையைத் தரும்.

தாரகனென்போன் ஆண்டவனை வேண்டித் தவம் செய்தவன். நல்ல குணமுடையோன். நல்ல ஒழுக்கம் பெற்றவன். பின்னர்த் தீமை செய்தான். கேடடைந்தான். முன் செய்த தவம் உதவ ஆண்டவனைக் கண்டு நன்று பெற்றான். ஆதலின் அவன் சரித்திர நிகழ்ச்சி கேட்டற் குரியது. தீய சொல், தீய எண்ணம், தீய செயல் இவை நம்மனோர்க்குச் சொத்துக்களாக இருக்கின்றன. அன்பர்கள் வருந்தற்க. பிறரை நாம் நல்ல எண்ணம் முதலியவற்றைப் பெற்றிருக்கின்றோம் என்று நம்பவைக்கலாம். அது பயனுடையதன்று. தனித்து ஓரிடத்திலிருந்து தம்மைப்பற்றி எண்ணிப் பார்த்தல் வேண்டும்.

" வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும் "

என்றனர் வள்ளுவனார். பிறருக்கென நடத்தல் இழிந்த தாகும். நமக்கு நாமே நடப்பது உயர்ந்தது.

## இரு காரணங்கள்

இனித் தாரகனைப் பற்றிப் பேசுதற்கு இரு காரணங்கள் உள்ளன. நம் மனம் முதலியன நல்லதாதற்குக் காரணமாய்த் தாரகன் இருப்பதால் அவனைப் பற்றிப் பேசல் தகும். சிறந்த காரணம் முருகனே. அவ்வரக்கன் முருகன் சம்பந்தம் பெற்றமையாலன்றோ நம்மால் பேசப்படுகிறான். இன்றைய வுலகத்தில் செல்வம் மல்கிய சிறியோர்பால் அல்லல் தரும் நல்குரவினர் சென்று தம் இழிநிலையை எடுத்துக் காட்டி அவரைப் புகழ்ந்து நிற்கின்றனர். நம் மூதாதையர் இவ் வழக்கத்திற்குப் பெரிதும் முரண்பட்டவர். கல்வி மட்டும் சிறந்தாரை அவர் கருதிலர். அவ்வாறே செல்வம், பிறப்பு முதலிய சிறப்பினை உடையவராயினும் இறைவன் தொடர்பு இல்லையேல், சீ, சீ என வெறுத் தொதுக்கினர்.

பிறப்புடையர் கற்றோர் பெருஞ்செல்வர் மற்றும்
சிறப்புடையர் ஆனாலும் சீசீ—இறப்பில்
கடியார் பூஞ்சோலை காளத்தி யாள்வார்
அடியாரைப் பேணா தவர்.

என்று நக்கீரர் கைலைபாதி காளத்திபாதி அந்தாதியில் கூறியுள்ளார். அப் பரம்பரையின் வழியில் நாம் பிறந்திருக்கின்றோம்.

கடவுள்பால் அன்புடையவன் ஏழையாயினும், எளியோனாயினும், இழிந்தோனாயினும், தரித்திரனாயினும் அவன் வழி நாம் நிற்க வேண்டும். அவனே நமக்கு உற்ற துணைவன்.

குளிர்ந்த காற்று வேகமாக வீசினால் போர்வையால் உடம்பு முழுவதையும் மூடுகிறோம். அவ்வாறே காலம் என்ற ஒன்று நம்மைத் தீய காரியங்களில் நுழைவிக்க முயன்றாலும் அதினின்றும் நீங்கும் அறிவினையே நாம் கொள்ள வேண்டும்.

தாரகன் முருகன் சம்பந்தம் பெற்றவன். ஆகவே பேசுதற்குரிய பொருளாக அமைந்தான். பாரசீகக் கதை, அராபிக் கதை, நாலுமந்திரிக் கதை, பன்னிரண்டு மந்திரிக் கதை, முப்பத்திரண்டு பதுமைக் கதை முதலியவற்றைப் போலச்

கடவுள் சம்பந்தம் இல்லாதிருந்தால் தாரகன் கதையும் பய னற்றதாகவே ஆயிருக்கும்.

## கொடியினை ஒத்தனன் கொடியோன்

தாழ்ந்த கொடி ஒன்று; அது மலை மூங்கிலை அடுத்தது. மலை மூங்கில் மிகப் பெரியதான அடியைப் பெற்று மிகநீண்டு வளரும். அதன் அடிப்பகுதி அளவு கோலாகிய மரக்காலாகப் பயன்படுகிறது. அத்தகைய மூங்கிலை அடுத்த கொடி, அது சார்வதற் கிடமாக இருந்த மூங்கில் எவ்வளவு தூரம் வரை நீண்டு உயர்ந்ததோ அவ்வளவு தூரம் தானும் போயிற்று. கொடி, மூங்கிலை அடுத்து இராமற்போயிருந்தால் கீழே கிடந்து அடிபடும். கொடி, சார்ந்த இடத்தால் உயர்வினைப் பெற்றது.

முருகுவிரி மலர்க்கொடிகள் மூங்கில்மிசைப் பதிந்துபோய்ப்
பொருவரிய துறக்கத்துள் புகுந்துவளர் கற்பகமாம்
மரம்முழுதும் படர்ந்தலவும் வளர்மதியின் மேலாய
பெரியவரை அடைந்தோழகப் பெறில்துறக்கம் புகலரிதோ.

—ஸ்ரீகாளத்திப் புராணம்.

என்றனர் கருணைப் பிரகாசர். இனி உவமையைப் பொருளில் பொருந்திக் காண்போம். மலைமூங்கிலைப் போல் முருகனிருக்கிறான். கொடியாகத் தாரகன் உளன். கொடிக்குப் பெருமை மூங்கிலால். அவ்வாறே நம்மால் பேசப்படுதலும் எண்ணப்படுதலும் போன்ற இத்தகைய மாபெரும் சிறப்புக்களெல்லாம் முருகனால் தாரகனுக்கு உண்டாயின. தாரகன் நேற்றுப் பேசப்பட்டான். இன்றும் பேசப்படுகிறான். நாளையும் பேசப்படுவான். ஆகவே முக்காலத்திலும் அவனுக்குச் சிறப்புண்டு. இச் சட்டி நாட்களில் எங்கும் பேசப்படுவான். முருகனொடு இயைந்த இயைபன்றோ இம் மா பெரும் சிறப்புக்களை அவனுக்குத் தந்தது. நாமும் இங்ஙனம் கடவுட் சம்பந்தம் பெற்றோரிடத்தில் எண்ணத்தைச் செலுத்தல் வேண்டும்.

## இறை இயைபின் ஏற்றம்

எதுவாயினும் அது இறை சம்பந்தம் பெற்றால் அதைக் கொள்ளுதல் வேண்டும். மரமாயினும் செடியாயினும் அது கடவுட் சம்பந்தம் ஏற்றால் நம்மால் வணங்கப்படுவதாகும். துளசி என்ற ஒரு செடியை நடுவீட்டில் துளசிமாடம் என்ற ஒரு சிறுகட்டிடத்தில் வைத்து வளர்க்கின்றோமல்லவா?

பகுத்தறிவு மிகுந்த இக்காலத்தினர் பாம்பின் விடத்தை அச் செடி ஒழிக்கின்றது என்பர். வில்வம், கடம்பு முதலிய மரங்களையும் அவ்வாறே வளர்த்தனர்.

புதப்பூங் கடம்பும். முருகாற்றுப்படை.

இவைபோன்ற உதாரணங்கள் வேண்டியதில்லை. நாம் பாம்புபோல் உருவத்தினைச் செய்து வழிபடுகின்றோம். சிவ லிங்கத்தின்மேல் விரிந்த தலையுடன் அது அமைந்திருக்கின்றது. நம்மைக் கொல்லுமதனை நாம் வணங்குவது என்னை? மேற்குச் சமுத்திரத்திற்கருகில் உடுப்பி என்ற ஓர் இடமுண்டு. அங்குச் சுப்பிரமணியம் என்ற ஒரு திருக்கோயில் உண்டு. இதனை உடுப்பிச் சுப்பிரமணியம் என்றும் வழங்குவர். அங்குப் புற்றுருவில் முருகன் வழிபடப்படுகிறான். படையும் பயப்படும் பாம்பும் இறையொடு கூடினமையால் வழிபாடு எய்துகின்றது எனின், நாமும் அவ் விறையின் கூட்டுறவை அடைய வேண்டியதில்லையா?

ஒரு சிங்கம் பசித்தது. குகையைவிட்டு வெளிவந்தது. யானை மத்தகத்தைப் பிளந்து ஆங்கிருக்கும் தசைப் பகுதியையே உண்ணும் விருப்பம் மிக்கது அது. உணவு கிடையாதொழியத் தன் குகையை நோக்கி வருகின்றது. ஆங்கு ஓர் தேரையைக் காண்கிறது. அதனைக் கொன்று உண்பதற்கு அச் சிங்கம் முற்படுமோ? 'புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது' என்பது தமிழ்ப் பழமொழி. நாம் பிறவித்துன்பத்தை நீக்க முற்படுகின்றோம். கடவுளையேனும் அவனருள் பெற்றோரையேனும் அறிதல் நன்று. மூன்று செயல்கள் விசேடமாகப் பேசப்பட்டிருக்கின்றன. அவையெல்லாம் ஈசன் செயல்களே.

ஒன்றை நினைக்கி னதுஒழிந்திட் டொன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்.

இவ்வழி நின்று நம்மைப் போன்ற ஒருவன் தெய்வ சம்பந்தம் பெற்று நன்மை யடைந்ததை எண்ணுகின்ற நாமும் நன்மை அடைவோம்.

தாரகன் என்பவன் யார்? அவன் தகுதி என்ன? முருகனுடன் அவனுக்குரிய சம்பந்தம் யாது? அவனடைந்த நன்மை யாது? என்பவற்றைப் பற்றிக் கவனிப்போம்.

**அசுரர் வரலாறு**

பிரம்மாவுக்குப் பிள்ளைகள் பலருண்டு. அவருள் காசிபர் என்பவர் ஒருவர். அவர் சிறந்த தவம் செய்துகொண்டிருந்தார். அசுரகுருவாகிய சுக்கிரன் இதனை அறிந்தனன். அசுரகுலத்தை ஓங்கச் செய்ய வேண்டுமென்ற எண்ணம் அவனுக்குண்டு. செல்வம், கல்வி, அன்பு, அறிவு இவற்றை வளர்த்து, தம்மைச் சார்ந்தோரைச் சான்றோராக்குதல் குருவின் கடமையாகும். "தேவர் எக்காலத்தும் நம்மைத் துன்புறுத்துகின்றனர். அவர்கள் ஆற்றலை அடக்கி அசுரகுலத்தை ஓங்கச் செய்வதற்காகச் சிறந்த ஒருவன் வேண்டும்" என்று சுக்கிரன் எண்ணினான். காசிபன் காணும் உலகை மறந்து, தவம் செய்யும் தன்னை மறந்து, தன் குறிக்கோளாகிய இறைவனை எண்ணி, அவனையும் பிறகு அறவே மறந்து, அசைவற்று, உயிர் ஒடுங்க உணர்வு ஒடுங்க மனம் ஒடுங்க நின்றான். இந்நிலையைச் சுக்கிரன் அறிந்தனன். தன்குலத் துநித்த அழகில் மிகுந்த கொடி போல்வாளாகிய மாயை என்பாளை அவன்பாலனுப்பினன். தவத்தைப் புரிவோர் நாழிக்கணக்கில், நாட் கணக்கில், ஆண்டுக்கணக்கில் கண் விழியாதிருப்பர். அங்ஙனம் காசிபர் கண் விழிக்கும் காலத்தை எதிர்நோக்கி மாயை நின்றாள். முனிவர் கண் விழித்தனர். மாயையைக் கண்டனர். மாயையும் கண்டாள். இருவரும் கண்ணால் கலந்தனர். உடலால் கலக்கவும் கருதினர். இறைவன் எண்ணமும் அதற்குத் துணை செய்தது. கலந்தனர். மூன்று ஆண் குழந்தைகளையும், ஒரு பெண் குழந்தையையும் பெற்றெடுத்தனர். மூவரும் முறையே, சூரபன்மன், சிங்கமுகன், தாரகன் எனப்படுவார். நாலாமவள் அசமுகி என்னும் பெயரினள்.

பிள்ளைகள் மூவரும் அவர்தம் குருவாகிய சுக்கிரனை அடைந்தனர். தாம் செய்ய வேண்டுமவற்றை வினவினார். 'தவம் செய்க, நலம் பெறுக, முதன்மை எய்துக' என்று சுக்கிரன் இயம்பினன். தம்பியரிருவருடன் பதுமன் தவ மியற்றினன். அவன் செய்த தவத்தை என் ஒற்றை நாவினால் இச் சொற்ப காலத்தில் சொல்லமுடியாது. ஒன்று கூறுகிறேன். மூத்தவன் எரி நடுவில் வச்சிரதம்பம் நட்டு அதன்மீதிருந்து இறை வரத் தவமியற்றினான். இறைவன் வரவில்லை. இறைவன் தயவில்லா என்னுடல் எதற்கு என்று கருதினான்.

இதனை வெற்றுக் கதையாக நீங்கள் கருதாதீர்கள். நம் செயல்முறைக்குக் கொண்டு வரல் வேண்டும். அசுரன் எண்ணத்தைக் கவனிக்க. கொண்ட எண்ணம் முற்றுப் பெற்றால் வாழ்தல்; அன்றேல் சாதல்; என்ற முடிபிற்கு வந்தனன்.

## கண்ணுதல் அருளல்

ஆதலின் நெருப்பில் விழுந்து இறக்கத் துணிந்தான். நெருப்பிலும் விழுந்தான். இறந்தான். கடவுள் வெளிப்பட்டனர். அசுரன் தம்பியரிருவரும் நின்றுகொண்டிருக்கின்றனர். வரம் யாது வேண்டும் என்று இறைவன் கேட்கின்றான்.

இக் காலத்தில் சகோதரர் மூவர் இருந்தால் ஒருவனிறந்தால் பங்கு பாதியாகிப் பலனளிக்குமென்று மற்றையர் மகிழ்வர். இக் கொடிய எண்ணம் அசுரர்களிடத்திலும் காணப்படவில்லை. இவர்கள் தம் சகோதர அன்பை என்னென்று கூறுவது! சிந்தாமணியில் 'எம்பியை இங்குப் பெற்றேன் என்னெனக்கு அரிய தென்றான்' என்பதனையும், இராமாயணத்தில் இலக்குவன் கொண்டிருந்த அன்பையும் நோக்குக.

அவர்கள் முதலில் தங்கள் அண்ணன் உயிர் பெற வேண்டும் என்றனர்.

குயவன் ஒரு குடத்தைச் செய்ய வேண்டும் என்றால், மண்ணிருக்கும் இடம் நாடிச் சென்று கொணர்ந்து நீரூற்றிப் பிசைந்து திரட்டிப் பதப்படுத்திச் சக்கரக் குடத்திலிட்டு மனைவியைக் கோல்கொண்டு சுழற்றச் செய்து, கைக் கருவியால் உருவாக்கிக் கத்தியா லறுத்து, உலர வைத்துத், தட்டி இயைத்து, நெருப்பி லிட்டுச், சுட்டு எடுத்தபின் னன்றோ உருவுடன் குடம் விளங்கும்! கடவுளுக்கு இவ்வளவு தொல்லையில்லை. அவன் எண்ணத்தில் எல்லாம் நடக்கும். குயவன் தொழில் காரண நிருட்டி எனப்படும். சிவபெருமான் சங்கல்ப நிருட்டியினன். அளுப்த சக்தி, அநந்த சக்தி (முடிவிலாற்றலுடைமை, குறைவிலாற்றலுடைமை) நிறைந்தவன். சிவன் எண்ணினான். அசுரன் எழுந்தான். ஆண்டவனை வணங்கிய அவன் குரு கூறிய வழியே வரம் விரும்பி நிற்கின்றான். 'ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டுச் சதுர்யுகம் வச்சிர சரீரத்துடன் ஆளவேண்டும். வாள் வேண்டும். தான்

அடக்கப் பிறர் அடங்கவேண்டும். எண்ணிய இடத்தில் கொண்டு சேர்க்கும் வாகனம் வேண்டும்' என்று வேண்டி நின்றனன்.

கடைசி வரத்தைக் காணுங்கள். விஞ்ஞான வளர்ச்சியும், தேர்ச்சியும் இவ்வளவிற்கு இன்னும் வரவில்லை.

"முன்னவனே முன்னின்ருல் முடியாத பொருளுளதோ"

என்றனர் சேக்கிழார். வரங்கள் யாவும் சிவபெருமான் தர அசுரன் பெற்ருன். அவுணன் தவம் மிகச் சிறந்தது. ஊனக் கண்கொண்டு ஞான உருவினனை அசுரர்கள் காண்கின்றனர். ஆதலின் தவத்தினும் உயர்ந்தது ஒன்றுண்டோ?

## தீ நெறி வழி நிற்கும் அரக்கன்

பெற்றவற்றை நல்வழியில் அசுரன் பயன்படுத்திக் கொண்டாஞ? இல்லை. செல்வம் பெற்ருர் செல்வத்தால் தருக்குற்றுப் பிறருக்கு இன்னலிழைத்த லாகாது. அதிகார மடைந்தோர், உயர்ந்தோரைத் தாழ்வாக நடத்துத லாகாது. அப்படி நடத்துவோருக்கு அதிகாரம் தந்தால் குடிசைகளே நிறைந்த.ஓர் ஊரில் குரங்கின் கைக் கொள்ளி கொடுத்தால் என்ன நேருமோ? அதுவே நேரும். குரங்கின் தொழிலை ஏய்ப்ப அசுரன் அறியாமையால் பெற்ற செல்வம், பெற்ற அதிகாரம் முதலியவற்றைப் பெரிதும் எண்ணி, தேவரைத் துன்புறுத்தத் தொடங்கினன். குரங்கின் கையில் கொள்ளியைக் கொடுத்தது கொடுத்தோர் குற்றம்போல, அசுரனுக்கு யாவும் தந்த சிவபெருமான்பாலது குற்றமெனச் சில அன்பர் கருதலாம். குற்றம் சிவனிடத்த தில்லை. தேவர்கள் தக்க யாகத்திற்குச் சென்று ஈசுரத் துரோகம் செய்தனர். அவ்வினையையே அனுபவிக்க நேர்ந்தனர்.

சூரன் பல அக்கிரமங்களைச் செய்தான். தேவர்களை மீன் சுமக்கச் செய்து அவர்களுக்குத் தலைவனுக இந்திரனை நியமித்தான். பிரமாவாகிய பாட்டனை மிகப் பாடு படுத்தினன். அவன் காலையிலெழுந்து, அசுரன் கொலுமண்டபத்திற்கு வந்து பஞ்சாங்கம் படிக்கும்படியாக விதிக்கப்பட்டான். தண்டனைக்குப் பயந்த பிரமா வேறு ஒன்றும் செய்ய முடியாதவனுகி அசுரன் ஆணைவழி நின்றனன். அடுத்து, மிகக் கொடிய பாதகச் செயல்களையும் செய்ய முன் வருகின்ருன்! இந்திரன் மனைவியைத் தன் மனைவியாக ஆக்கக் கருதினன். அவள் தேவலோகத்தில் காணப்படாதுபோகவே

தேவர் பிறரைச் சிறைசெய்துகொண்டு வந்தனன். இவற்றை எல்லாம் அறவே நீக்கவேண்டும் என்ற எண்ணத்தினால் தேவர் சிவனை வேண்ட, சிவபிரான் முருகனை அனுப்பினர்.

## நாரதர் அறிவிப்பு

சேனை புடைசூழ முருகன் மண்ணுலகை நோக்கி வருகின்றான்.

பாருலக மீதிலுமை பாலன்வரு போதில்
தாரக னெனும்பெயர் தரித்ததொரு வெய்யோன்
ஓரரண மானகிர வுஞ்சகிரி கண்டார்
வீரமுறு வேலனயல் மேவிவரு விண்ணோர்.

மதில், அகழ், காடு, மலை என அரண்கள் பல வகைய. கிரௌஞ்சம் என்ற மலையை அரணாகக் கொண்டது மாயாபுரி. அதுவே தாரகன் அரசிருக்கை ஆகும். நாரதரைக் கலகப் பிரியர் என்று பலர் சொல்லுவர். பன்னாடை குணமும், அவ்வாறு கூறுகின்ற அவர்தம் குணமும் வேறன்று என்க. நரம்=மனிதன்; நாரம்=மனித சம்பந்தம்; நாரதன்= மக்களுக்கு ஞான அறிவினைத் தருபவன். அவன் முருகன் பால் நிறைந்த அன்பினன். அன்னவன் முற்பட்டுப் பெருமானை வணங்கி, "நம்முன் தெரிவது மாயாபுரி. இங்கிருப்பவன் தாரகன். அசுரன் தம்பியரில் இளையவன். ஆற்றல் மிக்கவன். இவனை அழித்தல் வேண்டுமென்ற எண்ணத்துடன் திருமால் இவன்பால் ஏவிய அவர்தம் ஆயுதமாகிய சக்கரத்தை மார்பில் பதக்கம்போல் அணிந்து மகிழ்ந்தவன். முதலில் இவனை அழித்தல் வேண்டும்" என்றனன்.

## தாரகன் போர்

முருகன் அருகில் நின்ற தன் தம்பியாகிய வாகுவை நோக்கினான். சேனையை நடத்துமாறு கட்டளையிட்டான். ஒற்றர் மூலம், வரும் படையினைத் தாரகனும் அறிந்தனன். படையுடன் தானும் திரண்டு எதிரே வந்தனன். போர் நடந்தது. வாகுவை வெல்லல் முடியாதென்று அசுரன் முடிவாக எண்ணினான். ஏன்? இரவில் வெள்ளி என்ற கோள் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும். அதனையும் அடக்கி மதி நிற்கும். ஞாயிற்றின்முன் மதியின் ஒளியும் அடங்குமல்லவா? அவ்வாறே முருகன் அருள் பெற்ற வாகு அவர் தம்பியர்

முன்னர், அசுரன் மற வன்மை வலுவின்றி மாய்ந்தது. தனக்கு வெற்றி யில்லை என்பதை உற்று உணர்ந்தான். ஆனால் தோல்வியைத் தன்னால் பொறுக்க முடியாது என்று வருந்துகிறான். ஒன்று செய்து உய்ய முன்னிற்கின்றான். அது என்ன ?

## தாரகன் தீயன செயல்

நல்லனவற்றை அறிவிக்கவே பள்ளிகளும் சுவடிகளும் இருக்கின்றன. தீயன பிறர் அறிவிக்காமலிருக்கத் தாமே வந்து சேர்கின்றன. தீய காரியங்களைச் செய்வதில் மக்கள் வித்துவான்களாக விளங்குகின்றனர். அவர்தம் அறிவையும் ஆற்றலையும் என்னென்பது !

தாரகன்பால் கெட்ட எண்ணம் மிகுந்தது. அவனிடத்திலுள்ள கிரௌஞ்ச மலையின் நினைவு அவனுக்கு வந்தது. அம் மலைவடிவம் அகத்தியரை மயக்கிய ஓர் அசுரனுடையது; மாயை நிறைந்தது; மாயாபுரிக்கு அரணாக விளங்குவது. தன்னுடன் பொருது நின்ற வாகு முதலானோரை அம் மலையுள் கொண்டு சேர்ப்பின் அவர் அங்கே மயங்கிக் கிடப்பர்; அக்காலத்தில் வெற்றி தன்னுடையதாகும் என எண்ணி மகிழ்ந்த அரக்கன் தோற்றவனைப் போல மலை நோக்கி ஓடினான். மற்றவர் பின் சென்றனர்; மலையினுள் சென்றனர்; தம்மை மறந்தனர்; மயங்கிக் கிடந்தனர்.

இவ் வரலாற்றுடன் தொடர்புடைய சாத்திரக் கருத்தையும் அறிதல் வேண்டும். வாகு முதலானோர் முருகன் அருகில் இப்போது இல்லை. தீய எண்ணம் நிறைந்த அரக்கன்முன் இருந்தனர். மாயையே உருவாகிய மலையினுள் அடைந்தனர். ஆதலின் ஈசனிடத்திலிருந்து விலகித் தீயோருடன் சேர்ந்து மாயையி லகப்பட்டோர் தம் அறிவை இழந்துகிடப்பர் என்பது உறுதி.

## முருகன் முன்வரல்

முருகனுக்கு நாரதன் நடந்ததை அறிவித்தனன். முருகன் தானே முன்வருகின்றான். ஏன் ? அடியார் துன்பத்தை ஆண்டவன் பொறான். சண்டை நடக்கிறது. போர்க்களம் என்பது அன்பர்களுக்கு நினைவிலிருக்கும். முருகனை அவுணன் காண்கின்றான். இதுவே பேச விரும்பும் இடம்.

முழுமதி யன்ன வாறு முகங்களும் முன்னுன் காதும்
விழிகளி னருளும் வேலும் வேறுள படையின் சீரும்
அழகிய கரமீ ராறும் அணிமணித் தண்டை யார்க்கும்
செழுமல ரடியுங் கண்டான் அவன்தவம் செப்பற் பாற்றே.

## கண்டான்

இச்சொல்லைப் பன்முறை எழுதியிருக்கலாம். பன்முறை சொல்லியிருக்கலாம். அச் சொற் பொருளையும் ஓர்ந்திருக்கலாம். கண்ணுதலைக் காணலே கண்ணின் சிறந்த தொண்டாகும். கடவுளைப் புறத்தே கண்டு அகத்தே காணல் வேண்டும். ‘இந்தக் கல் தெய்வமாகுமா?’ என்று கேட்பர் சிலர். தெய்வம் எங்குண்டு என்று நாம் வினவின், எங்குமுண்டு என்பர் அவர். இக் கல்லில் இல்லையோ கடவுள் என்றால், அக்காலத்தில் வாய்மூடி நிற்பர். கல்லிலும் உளன் கண்ணுதல் என்ற எண்ணத்தோடே காணுதல் வேண்டும். கல்லுருவத்தில் கருத்தை நிறுத்துதல் ஆகாது. இலிங்க உருவினுள் கடவுளைக் காணல் வேண்டும்.

பலர் கோயிலுக்குச் செல்கின்றனர். காண வேண்டிய கடவுளிடம் கண்ணை அழுத்தாது வேறிடத்து அழுத்துவர். ‘கண் அவனைக் காண்க’ என்றனர் ஐயனாரிதனார். கண்கள் அவனைக் காணுதல் வேண்டும். இரண்டு கைகளும் இருதய இடத்தில் ஒன்று கூட வேண்டும். ‘அவன் ஆண்டவன்; நாம் அடிமை’; என்ற நினைப்பினை வலியுறுத்தும் வணக்கமே அது. முகம்மதியர் வழிபாட்டு முறையில் கூறும் ‘**நமாஸ்**’ எனும் சொல்லும் இச் சொல்லின் பொருட் செறிவுடன் விளங்குதல் காண்க. ஒரே எண்ணம் மிகுதல் வேண்டும்; நம: என்னல் வேண்டும். ‘நான், எனது என்ற இரண்டையும் ஒழித்துத் தலைவனே! என்னை ஏற்றுக் கொள்க’ என்பதே இதன் கருத்து. கண்வழி கருத்துச் செல்லுங்கால் மற்றைய இந்திரியங்கள் அதன்வழி நிற்க வேண்டும்.

என் நண்பரிற் பலர்—செல்வமும், அறிவுடைமையும், பேச்சுவன்மையும் பெற்றோர்—“ஒருவரை ஒருவர் இடித்துத் தள்ளுகின்றார்கள்; ஆதலின் கோயிலுக்குச் செல்வதில் கருத்து வரவில்லை” என்று கூறுகின்றார்கள். அவர்களே சில இந்திரிய அனுபவத்திற்காகப் பல இடிபட்டுத் தம் மனைவி மக்களுடன் துன்புற்றுக் கொட்டகைகளினுள் நுழைகிறார்

கள். ஆண்டவன் சந்நிதியில் ஆகாத ஒன்று அங்கு ஆகும் போலும்! ஆண்டவன் சந்நிதியில் இடிபடுதலால் குறைவு ஒன்றுமில்லை. தேவர்கள் தம் மனைவியருடன் ஆண்டவன் சந்நிதியை அடைந்து நின்று வணங்குகின்றனர். முறையே அவன் சந்நிதியில் நடுவில் மூன்றடி விடுதல் வேண்டும். புறத்தில் நின்றே வணங்கல் வேண்டும்; எதிரே நிற்ற லாகாது. எதிரிலிருப்பவனை எதிரி என்று கூறுதல் வழக்க மல்லவா? பக்கங்களில் நின்று வணங்கல் வேண்டும். தேவர்கள் கூட்டம் அதிகப்படுகின்றது. வழி விட்டு விலகி நிற்கும்படித் தம் கையில் உள்ள பிரம்பினால் நந்தியம் பெரு மான் அடிக்கின்றனர். மனைவியுடன் அடிபடும் தேவர், வேறு எண்ணங்க ளில்லாதவராய், 'முன்னொரு காலத்தில் மணி வாசகருக்காக மண் சுமந்த ஆண்டவனைப் பாண்டியன் அடித் தானே; அவ்வடி எவ்வாறு எம்பிரான்மேல் பட்டதோ?' என்று எண்ணி நைந்து நிற்கின்றனர். அன்பர்கள் இக் கருத்தினை உன்னுக. ஆதலால், எவ்வாற்றானும் இறைவனை வணங்கல் இன்றியமையாதது.

எப்படித் தரிசிக்கவேண்டும்? சண்டேசர் மணலால் செய்யப்பட்ட இலிங்கத்திற்குப் பாலைக் கொட்டி அபிடேகிக் கின்றார். இவர் கருத்து இலிங்கத்திலேயே அமைந்து கிடக் கின்றது. அங்கு வந்த அவர்தம் தந்தையார் பல பேசுகின் றார். அடித்தலையும் செய்கின்றார். சண்டேசர்க்கு எவ்வகை எண்ணக்கலைவும் உண்டாகவில்லை. கிழவனார் காலினால் சிவ லிங்கத்தைச் சிதைக்கின்றார். அப்போதுதான் சண்டேசுரர் அறிந்தனர். காரணமென்ன? பிற இந்திரியங்கள் ஒடுங்கக் கண்மட்டும் தொழிற்பட்டு ஆண்டவனைக் கண்டுகொண் டிருந்தது. காணப்பட்ட பொருளுக்குத் தொல்லை வந்த காலத் திலேதான் அவர் அறிந்தனர். இவ்வாறு கடவுளைக் காணுதல் வேண்டும். இரு குணங்களும் ஒழியச் சத்துவமே மிகல் வேண்டும். சித்தமே தொழிற்படவேண்டும். ஆற்றல் நிறைந்த இருளாயினும் கதிரவன்முன் அழிந்தொழியும்; அவ் வாறே மாயையே உருவமாகிய அரக்கனும் பெருமானைக் காண்கின்றான். கடவுளைத் தண்டாகாரமாய்க் காண லாகாது. அது **நிர்விகற்ப ஞானம்** (ஒன்று பட்டநிலை) எனப்படும். **சவிகற்ப ஞானம்** (வேறுபடு நிலை) வேண்டற் பாலது. அவ்வழியே அசுரன் காண்பதைக் காண்க.

## முழு மதியன்ன ஆறுமுகங்களும்

அசுரன் முதலில் முகத்தைக் காண்கிறான். முகம் எப்படி இருக்கிறது? அழகு நிறைந்து நிற்கின்றது. அறிவு நிறைந்தோர் அழகையும், இளமையையுமே எங்கும் காண்பர். இளையோனும் அழகியோனும் முருகனே. உலகப் பொருளில் மிக்க இன்பத்தைத் தருவது முழுமதியே. தண்ணிய அமிர்த கிரணங்களை உடையவன் அவன். வெகு தூரத்தில் உள்ளார்க்கும் மகிழ்வினை விளைவிப்பவன். வளர் பிறையிலேயே திருவிழா நடத்தலைக் காண்க. ஒரே காலத்தில் ஆறு முழு மதிகளைக் கண்டால் எவ்வளவு மகிழ்வு உண்டாகும்! 'முழு மதியன்ன ஆறு முகங்களும்' கண்டான். பகைவனுகிய அவன் எண்ணம் பகைவன் கையில் உள்ள ஆயுதத்திலல்லவோ செல்லவேண்டும்? அங்ஙனம் அசுரன் எண்ணம் செல்லவில்லை. நெருப்பு என்று ஒருவன் அறியாது மறந்து அதனைத் தொடினும் அது அவனைச் சுட்டே தீரும். அவ்வாறே காண்பவன் பகைவனுயினும் காணப்படுவது கடவுள் ஒளி; ஆதலின் அவனை மெய் மறக்கும்படிச் செய்கிறது. பகைவனே இந்நிலைமை அடைந்தானென்றால் மற்றவரைப் பற்றிப் புகல்வதெவ்வாறு?

முகங்களும் கண்டான்; வேறு சிலவற்றையும் பின்னர்க் காணப் போகின்றான் என்பதை நம் நினைவிற்குக் கொண்டு வருகின்றார்; ஆதலினலே இது எதிரது தழீஇய எச்சவும்மை. 'இனைத்தென் றறிபொருள் உலகி னிலாப்பொருள், வினைப் படுத் துரைப்பின் உம்மை வேண்டும்' என்ற நெறியே உம் இடப்பட்டிருக்கிறது என்றும் கூறுக. இதற்குத் தனியே இலக்கணமென்ற ஒன்றை நாம் காண வேண்டியதில்லை. 'ஏழு நாளும் போனேன்' என்று உலக வழக்கில் கூறக் கேட்கிறோம். வாரத்திற்கு நாட்கள் ஏழே யன்றி ஆறில்லை. இவ்வாறு விளக்கமாக அறிந்த பொருட்கும், உம் கொடுத்துப் பேசுதல் இருவகை வழக்கிலும் காணப்படுகிறது. அன்றியும், ஏழாவது முகமொன்று இல்லை; ஆதலின் முற்றும்மை என்றலும் பொருந்தும்.

கண்டானுக்கு மகிழ்வு தோன்றிற்று? 'முழுமதியன்ன முகம்' என்றனர். எனவே முழு மதியைக் கண்ட கடலே பொங்கி மகிழும் என்றால், அறிவுடைய மக்களைப் பற்றிக்

கூற வேண்டியதில்லை. ஆகவே மகிழ்ச்சி சிறந்து கண்டனன் என்க.

## முந்நான்காகும் விழிகளின் அருளும்

காணத் தகுந்த முகத்தைக் கண்டது உயர்வன்று. உருவத்தைக் கண் காணும். காது அருவ நிலையை உடைய ஒலியையும் கேட்கும். அடுத்து அசுரன் கண்டது யாது? '**முந்நான்காகும் விழிகளின் அருளும்**' கண்டனன். காணக்கூடாததைக் காணல் எளிதன்று. காற்றைக் காண முடியாது; ஆனால் இருக்கின்றது என்பதை அதன் அசைவால் அறிகிறோம். அசுரனால் காணப்படுவது அருள். அஃது எங்கே காணப்படுகிறது? விழிகளில். பெருமானுக்குப் பதினெட்டுக் கண்கள் உண்டு. '**திரிநயனம்**,' என்கின்றது தோத்திர சுலோகம். ஆகவே பதினெண் கண்ணுடையவனைப் பன்னிரண்டு கண்ணுடையவனாகவே பெரும்பான்மையான அன்பர்கள் கூறுவர். காரணம் மற்ற ஆறு கண்களும் மூடப்பட்டுள்ளன. அவை மற்றக் கண்களிலும் மாறாய உருவத்தைப் பெற்றன. மேல் நோக்கியன. '**விருபாக்ஷாய நம:**' '**திரிலோசனாய நம:**' '**சோமசூரியாக்னி லோசனாய நம:**' என்பனவற்றைக் காண்க. வில்வத்தைப் பற்றிப் பேசும் எட்டுச் சுலோகங்களாகிய வில்வாட்டகத்தில் வலது நோக்கிய பகுதி, இடது நோக்கிய பகுதி, மேல் நோக்கிய பகுதி என்று விளங்கும் முப் பகுதியினதாக உள்ள அவ்விலையை மூன்று கண்ணுக்கும் சமமாகக் கூறினர். மூன்றாவது கண் நெருப்புக் கண்; மேலோங்கியது. "அங்கியென்றற் கடுத்துமே லேக்கிய" என்னும் **பிரபுலிங்க லீலையைக் காண்க.**

எதிர்ப்பட்டோர் நிலைக்கேற்ப அக் கண் அருள் செய்யும். மன்மதனை அழித்தது; தேவர்களுக்கு முருகனைத் தந்தது. முன்னது மற அருள். பின்னது அற அருள். கண்ணைப் பார்த்தல் சிறந்தது அன்று; அதிலிருந்து வரும் நிலையைக் கொள்ளுதலே சிறப்பு.

பிற நாட்டார் நம் தாய் மொழியைப் பேசுதலினும் நம் மக்கள் மிகக் கெடுத்துப் பேசுகின்றனர். 'என்னை முழுங்கிவிடுகிறாப் போலப் பார்க்கிறாய்' என்கிறான் ஒருவன். முழுங்குவது அல்ல; விழுங்குவதுதான் சரியான சொல்.

ஆகவே வெறுப்பு, கோபம், ஆசை எல்லாவற்றையும் கண் அறிவிக்கும். அதனுலன்றே வள்ளுவனுர் 'நுண்ணிய மென்பார் அளக்குங்கோல் காணுங்கால், கண்ணல்ல தில்லை பிற' என்றனர். தன்னைச் சார்ந்தோரைத் துன்புறுத்திய அவ்வரக்கனைப் பெருமான் தயவுடனேதான் காண்கின்றுன். ஒரு சிறு கோபமும் அக் கண்களில் இல்லை. கண்கள் தயையே நிறைந்து காணப்படுகின்றன.

## அருளும்

அருளென்று லென்ன? நேற்று, வேல் ஒழிப்பது அஞ்ஞானம் என்றேன். அருளென்ற கத்தியினுலே மோகக் கொடியை அறுக்க முத்தி யென்பது சித்திக்கும். சரீரமாகிய அத்திமரத்தில் மோகம் என்ற கொடி சுற்றிப் படருகின்றது. அருளென்ற கத்தியினுல் அதை அழித்தொழித்தல் வேண்டும். ஆகவே அருள் ஒரு கத்தி. அது காமம், குரோதம், மோகம், மதம், மாற்சரியம் முதலியவற்றை அறவே போக்கும். மோகம் ஒழிந்தால் இன்பம் உண்டு. அருளே அதற்குத் துணை செய்வது. முதலில் முகங்கண்டு பின் கண்களைக் கண்ட அரக்கன் 'வேலும் வேறுள படையின் சீரும் கண்டான்.' நேற்று வேலைப் பற்றிப் பேசினேன். அசுரன் பார்க்கத் தகாத ஞானம் அது. கண்ட அவன் தவத்தை எவ்வாறு புகழ்வது? பின்னர்ப் படை என்று மட்டும் கூற வில்லை; படையின் சீரைக் கண்டான் என்கின்றுர் ஆசிரியர். பத்துக் கைகளில் ஆயுதங்களுடனும், அபயம் வரதம் என்ற இரு கரங்களுடனும் ஆண்டவன் விளங்குகின்றுன். கத்தி முதலிய படைகளுடன் ஒருவன் முன்வரின் அதனை அபசகுன மென்பர். இறைவனுக்கு இது பொருந்தாது. படைகள் பத்துளனின் அபயவரதம் இரண்டென்றுல் காட்சி யளவில் எதனை அதிகம் செய்வான்? படைகளால் தொல்லையைச் செய்யமாட்டான். ஏன்? படைகளெல்லாம் பின்புறத்தே உள்ளவை. அபய வரதம் முன்னே இருப்பவை. அபயம் முன்; வரதம் பின்; ஆயுதங்கள் எதற்காக? அடியார்களின் பகைவர்களை அழித்தற்கே. பகைவரை முன்ன ரழிப்பான். வரங்களைப் பின்பு கொடுப்பான். நம் பகைகளைப் போக்கிக் காப்பாற்றவே அவன் கரங்கள் முற்படுகின்றன. வரம்=ஞானம்; வரம் தரும் கை இடப் பக்கத்தது; ஆதலினுல் அம்பிகை வேலா

யுதத்தைக் கொடுத்தனள் என்ப. இவ் வோர் உண்மையைத் தவிர, அம்பிகை வேல் கொடுத்தாள் என்பதில் வேறொன்றும் காண்கிலேம். உடல் பற்றிய நோய் வியாதி எனப்படும். மனதைப் பற்றிய நோய் ஆதி எனப்படும். உயிரைப் பற்றிய நோய் அஞ்ஞானம் எனப்படும். வியாதி, ஆதி, அஞ்ஞானம் என்ற இம்மூன்றையும் வேல் போக்கும். ஞான வேல் இருந்தால் இம்மூன்றையும் ஒழிக்கலாம். இவையேயன்றித் தூல சூக்கும காரணம் எனப்படும் உயிருக்குள்ள மூன்று உடல்களையும் வேல் அழிக்கும். ஆகவே வேலின் சீரையும் படையின் சீரையும் கண்டனன் என்க.

## அழகிய கரமீராறும் கண்டான்

அழகு எல்லாருக்கும் ஒன்று ஆகாது. கண்டாரால் விரும்பப்படும் தன்மை என்பது அதன் இலக்கணம். காப்பு முதலிய அணிகலங்கள் கரத்திற்கு அழகைத் தரமாட்டா. மிருகங்களுள் யானை, யாளி தவிர பிறவற்றிற்குக் கரமில்லை. அறிவு நிறைந்த மனிதனுக்குக் கரங்கள் தரப்பட்டிருக்கின்றன. எதற்காக? நூல்களைப் படித்தற்கும் கடவுளை அருச்சித்தற்கும் அன்றோ? இவ்விரு செயலுக்கும இடையில் கொடுத்த லென்ற ஒன்றும் கலந்து நிற்கும். கொடுத்தல் இருவகைப் படும். ஒன்று, கைம்மாறு கருதாது காலம் கருதாது கொடுத்தல்; இரண்டு, வரும் பயன் எண்ணிக் கொடுக்கப்படுவோன் தகுதியறிந்து கொடுக்கும் காலத்தை உத்தேசித்துக் கொடுப்பது. முன்னது தரும மெனவும், பின்னது தானம் எனவும் கூறப்படும். முருகனை வாழ்த்திய சங்கராச்சாரியர், 'கரே தான தர்மம்' என்றனர். கொடுத்தலாலாகும் பயன் என்ன? பிறர்க்கு உதவி செய்யும் கையே உயர்ந்த கை என்க. தாம் ஒன்றை ஒருவருக்குக் கொடுக்கும் போது சிலவற்றைக் கூறுதல் வழக்கம். அங்ஙனம் கூற அமைந்தன எவை? 'கொடுக்கின்றேன், என்னுடையவல்ல'; ஆகவே கொடுத்தல் மமகாரத்தை ஒழிக்கின்றது. கொடுக்குங்கால் கடவுளுக்குக் கொடுப்பதாக எண்ணிக் கொடுக்க. ஏற்போர் உயிரினுள் உயிராய் விளங்கும் இறைவனுக்கே கொடுக்கப்படுவது என்ற எண்ணம் மிகல் வேண்டும். ஆதலினாலே அருணகிரி நாதர்,

> 'கெடுவாய் மனனே கதிகேள் கரவாது
> இடுவாய் வடிவே லிறைதாள் நினைவாய்'

என்றனர். கொடுக்கும்போது ஈசுரார்ப்பணம் என்று கொடுக்க.

“கோழிக் கோடியோ னடிபணி யாது குவலயத்தே
வாழக் கருதி மதியிலி காள்உங்கள் வல்வினைநோய்
ஊழிற் பெருவலி யுண்ணவொட் டாதுங்க ளத்தமெல்லாம்
ஆழப் புதைத்துவைத் தால்வரு மோநும் மடிப்பிறகே”

“வையிற் கதிர்வடி வேலோனை வாழ்த்தி வறிஞர்க்கென்றும்
நொய்யிற் பிளவள வேனும் பகிர்மின்கள் நுங்கட்கிங்ஙன்
வெய்யிற் கொதுங்க உதவா வுடம்பின் வெறுநிழல்போற்
கையிற் பொருளு முதவாது காணுங் கடைவழிக்கே”

இவை கொடுத்தலின் உயர்வையும், கொடுக்கும் வழியினையும் புலப்படுத்துமாறு அறிக.

நச்சுமரம் ஒன்றிருக்கிறது. அதனைச் சுற்றிப் பிரப்பங்காடு சூழ்ந்திருக்கின்றது. நச்சு மரத்தை ஒழிக்க வேண்டுமென்ற எண்ணமுடையவன் முதலில் பிரப்பங்காட்டை அழிக்க வேண்டும். அங்ஙனம் செய்யாத காலத்தில் அவன் குறிக்கோள் நிறைவேறாது. அகங்காரமென்ற நச்சு மரம் கொல்லப்படுதல் வேண்டும். அதற்குமுன் அதனைச் சுற்றி நிற்கும் பிரப்பங்காடு போன்ற மமகாரத்தையும் போக்கவேண்டும். கையில் வாராத பணத்தைக் கடவுளுடையது என்று தாராளமான மனத்துடன் எண்ணிக் கிருஷ்ணார்ப்பணம் என்றும், சிவார்ப்பணமென்றும் கூறுகின்றனர். இச்செயல் உயிர்களின் கொடுமையையே புலப்படுத்துகிறது. கொடுக்க அறியா மக்களுக்குக் கொடுத்துக் காட்டி வழிகாட்டியாக வேற்படை நிமலன் விளங்குகின்றான். போகமாகிய தானத்தையும், ஞானமாகிய தர்மத்தையும் உயிர்த்தொகைகளுக்கு அருளுகின்ற அவன் கரம் அழகிய கரமாயிற்று.

## செழுமல ரடியுங் கண்டான்

இது மிக முக்கியமான காட்சி. உம்=எண்ணும்மையோடு கூடிய சிறப்பும்மை. வேதம் தேடிச் சென்று அத்திருவடியைக் காணாது திரும்பியது. தேவர் அலைந்தும் அறியாது விழித்தனர்; போர்க்களத்தில் அசுரன் காண்கின்றான். இதன் இயல்பு என்ன? இத் திருவடி மிக உயர்ந்தது; தலையில் வைத்துக்கொள்ளத்தக்கது. உலகத்தில் இத் தகுதியில் மலர் காணப்படுகின்றது. வாடின மலரையும் நீக்காது சூடி மகிழ்

வர் சிலர். இத் திருவடிமலர் என்றும் வாடாதது, என்பதற்காகச் செழுமலர் என்ருர். முன்னைய பேச்சில் சூரிய சந்திர சம்பந்தம் பெற்றுக் குவிதலும் விரிதலும் இயல்பென வுடைய மலரினும் வேறுபட்டது இது, என்று எடுத்துக் காட்டினேன். இம் மலர்அடியைக் காணுதோரையும் காணுங் கருத்தில்லாதோரையும், காணத் தகுதி இல்லாதோரையும் காணும்படி செய்கிறது. அதனை எவ்வாறு அறியலாம்? நடக்கும்போது நடப்பவர் மகளிர் என்று தனித்து அறிவதற்காகத் தண்டை அணிகின்றனர். தண்டு போன்ற வடிவில் செய்யப்பட்ட அது அழகுக்காகக் கைக்கொள்ளப் படவில்லை; கருத்துடனேயே இருக்கின்றது. தேரில் எழுந்தருளி யிருக்கும் ஆண்டவன் திருவடியில் தண்டை ஒலி செயின் கருத்தில்லோருக்கும் அதன்கண் கருத்துண்டாகும். கற்களுக்குப்பதிலாக மணிகள் உள்ள அத் தண்டை பெருமானடியைச் சார்ந்து அழகு பெறுகின்றது. இங்ஙனம் காதோலை அழகு பெற்றது என்ற சிவப்பிரகாசர் கருத்தை ஓர்க.

'தண்டை ஆர்க்கும் அடி' என்றதில், ஆர்க்கும் என்றது ஒலி உண்டென்பதைக் காட்டுகின்றது. ஒலி என்ன? இவ்வணி குழந்தை யணி போன்ற ஒன்றன்று; மற்றக் குழந்தைகளினும் மாறுபட்ட குழந்தை இக் குழந்தை; சாத்திர அறிஞர்களாகிய சிவஞானமுனிவர் முதலியோர் வேதநூபுரம் என்றனர். ஒலியைக் கேட்கலாம். வேதத்திற்குச் சுருதி என்ற பெயருண்டு. கேட்கத்தக்கது என்பது பொருள். அடியாவது யாது? யானெனது என்னும் செருக்கு அறுபட்ட இடமே அடி என்க. 'யானெனதென்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்' என்றனர் வள்ளுவர். ஞானம் இருவகைப்படும். பரம், அபரம் என. அபர ஞானம் என்பது புத்தக அறிவு. பரஞானமென்பது அனுபவ அறிவு. இவ்விரண்டுமே ஞானங்களாம். இவையே பெருமான் திருவடிகளாம்.

மணி மேற்புறத்திற்கும், உள்ளே பரலெனஇடுதற்கும் கைக்கொள்ளப்பட்டதென்க.

'யான்' இச்சொல் எதனைக் குறிக்குமென்று அறிஞர் தேடினர். உடம்பையோ? உயிரையோ? மற்றென்றையோ? அன்று, அன்று; கடவுளையே இது குறிக்குமென்ப. நீலகண்ட

சிவாச்சாரியர், 'நம: அகம் பதார்த்தாய' என, "'யான்'என்ற சொல்லுக்குப் பொருளானவனே" என்று விளித்தனர். இத் தகைய சிறப்புப் பொருந்திய அம்மாபெரும் பொருளை அரக்கன் கண்டனன். யான் என்னும் செருக்கு வேறு, அச் சொல்லின் பொருளாகும் இறைவன் வேறு.

பெருநெருப்பில் சிறிய ஆணி ஒன்று அகப்படின் அவ் வாணி தன்னுரு இழந்து நெருப்புருப் பெற்றிருத்தல் போல முருகப் பெருமான் ஞான அழற் பிழம்பில் ஈடுபட்ட தாரக னாகிய இரும்பாணி தன்னுருவத்தை இழந்து நின்றது என்க. தாரகன் முழுமதியைக் கண்டான். அருள் மடையெனத் திகழும் கண்களைக் கண்டான். கண்வழி யொழுகும் அருளைக் கண்டான்.

## கடவுள் இவன் கொல்!

"தற்பத முடைய சிந்தைத் தாரக னினைய வாற்றாற்
சிற்பர மூர்த்தி கொண்ட திருவுரு வனைத்து நோக்கி
யற்புத மெய்தி நம்மே லமர்செய வந்தா னென்றாற்
சற்பனை கடந்த வாதிக் கடவுளே இவன்கொ லென்றான்."

இதற்குமுன் காணாததாய் இனியும் காணாததாய்த் தோன்றுவ தெதுவோ அது அற்புதமென்க. இவன்கொல் என்கின்றான். தாரகன் ஓர் உயிர் தானே. ஆண்டவன் அறி வித்தும் உயிர் தன்னிலையில் நின்று முழுவதையும் அறிதல் இயலாததொன்றே. ஆதலின் கடவுளோ என்று ஐயப்படு கின்றான்.

## தாரகன் அழிவு

'நின் தந்தைக்கும் எமக்கும் போரில்லையே மைந்தனே! ஏன் வந்தனை!' என்றான்.

உயிர்கள் யாவும் இறைவனுக்குச் சமமாயினும் ஒழுங்கற்றார்பாலுள்ள தன் சம உணர்வினைத் அவன் திரித் துக்கொள்ளுகிறான். 'செல்சம முருக்கி' என்ற **ஆற்றுப் படையைக்** கவனிக்க.

'எங்களுக்கும் உங்களுக்கும் பகைமை இல்லையாயினும் எம்மடியார் பகைவர் எமக்கும் பகைவரே' என்றனன் இறைவன்.

'பேச்சேன்? சண்டை நடக்கட்டும்' எனப் போர் தொடுத்தனர். துதிக்கைகள் வெட்டுண்டு வீழ்ந்தன. தலையுடன் போர் நடந்தது. இவ்வாறு எதிர்த்துப் போரிட்ட அரக்கனுக்கும் அருள் செய்யப் பெருமான் எண்ணுகிறார். ஞானம் வெல்லுமென்று வரம் தந்த காலத்துச் சிவன் கூறின தலினாலே வேலினை விடுக்க, வேல் வென்றது. அவன்றன் அஞ்ஞான உரு அழிய மெய்ஞ்ஞான வேலனுடன் ஒன்றாயினன்.

## முடிவுரை

இதுவரை பேச அருள்புரிந்த முருகனை வாழ்த்தி முடித்துக்கொள்வோம்.

மாயையின் முதலோ னாகி மால்முத லோரை வென்றே
ஆயிரத் தோரெட் டண்டம் அரசுசெய் திகம்நூற் றெட்டுக்
காயம தழிவின் றாகிக் கடவுளர்க் கலக்கண் செய்த
தீயசூர் முதலைச் செற்ற குமரன்றாள் சென்னி வைப்பாம்.



# ௪. சிங்கமுகன்

மெய்யன்பர்களே !

## பொறிவாயிலைந்தவித்தான்

மக்களை மாக்களி னின்றும் பிரித்து வைப்பது சிறந்த அறிவு ஒன்றே. அவ் வறிவைச் செலுத்தும் வழிகள் இரண்டு. (1) உள்ளே, (2) வெளியே; இவ்விரண்டே அவ் விரு வழிகளாகும். அறிவை உட்செலுத்தும் வழக்கம் மக்களுள் பெரும்பாலார்க் கில்லை என்னலாம். பின்னதோ, யாவராலும் கைக்கொள்ளப்படும் ஒன்று. வெளி முகமாக அறிவைச் செலுத்துங்கால் ஐந்து வழிகள்மூலம் அதனைச் செலுத்துகின்றோம். அவ் வழிகள், கண், மூக்கு, வாய், காது, மெய் என்பன. கடவுள் இவ்வாறு இவ்வைந்தின் வழித் தன் அறிவைச் செலுத்துபவன் அல்லன். ஆகவே, 'அவன் பொறி வாயி லைந்தவித்தான்' என்று புகழப்பட்டான்.

## கண்

ஐந்தனுள் கண்ணே முதன்மை இடத்தைப் பெறுகின்றது. அது அமைந்திருக்கும் இடமே அம் முதன்மையைத் தருதற்குக் காரணமாகின்றது. மேலும், காது முதலிய மற்றப் பொறிகள் தம்பால் வந்தவற்றையே அறியும் ஆற்றலுடையன; ஆனால், கண்கள், தாமே பொருள்களினிடம் சென்று அறியும் வன்மை யுடையன.

## உலகம் உயிர்

கண்கொண்டு நாம் உலகைப் பார்க்கின்றோம். பார்க்கப்படும் பொருள்கள் மூவகைய. (1) அறிவு இல்லா உலகம் (2) சிறிதறிவுடைய நாம். 'நம்மைத் தாழ்த்திக் கூறுகின்றீரே' என்று சில அன்பர்கள் கருதலாம். பிறந்த ஞான்று நாம் ஒன்றையும் அறியாதிருந்தோம். பின்னர்த் தாயினை அறிந்தோம். தாய் சுட்டி அறிவிக்கத் தந்தையை அறிந்தோம். இருவரும் தந்த அறிவால், பெரியோர், வந்தோர், வெளியோர், உபாத்தியாயர், ஞான குரு ஆகியோரை அறிந்தோம். இவர்கள் எல்லோரும் தந்த அறிவாலும் இது

வரை நாம் நிறைந்த அறிவினராகவில்லை. இதனை அறிவுடையோரையே குறித்துக்கொண்டு கூறுகின்றேன். ஏன் எனில், பேதையோர் தாம் பெற்றதையே பெரிதென்று தவறாக எண்ணும் எண்ணத்தினர். பல்லாற்றாலும் பெற்ற அறிவு கொண்டு ஊகிக்கின், காணாப் பொருளொன்றுண்டு என்று உணர வியலும்.

## கடவுள்

மலை வழியே இரண்டு நண்பர்கள் நடந்து செல்கின்றார்கள். தொலைவில் புகை வான்வழியே செல்கின்றது. அவருள் ஒருவன் இதனைக் காண்கின்றான். 'தோழ, அங்கு நெருப்பு இருக்கின்றது' என்கின்றான். கேட்ட மற்றவன் 'என்னுடன் வரும் நீ யானறியாததொன்றை அறிந்தான்போல் கூறுகின்றாயே' என்று கேட்பானோ? கேட்க மாட்டான். ஏன்? புகையுள்ள வழி நெருப்பு இருந்தே தீரும். கண்டது புகை; காணாதது நெருப்பு; ஆயினும் காணாத நெருப்பு கண்ட புகை கொண்டு உறுதி செய்யப்பட்டது.

இருவர் ஆற்று வழி முன்னாள் சென்றனர். அடுத்த நாள் அவ் வழியே செல்கின்றனர். அப்பொழுது செக்கச் செவேரெனச் சிவந்த நீர் ஓடுகின்றது. கண்ட அவர்களுள் ஒருவன் மற்றவனை நோக்கி, 'ஐயா! மேற்கே மழை பெய்திருக்கின்றது' என்கின்றான். அடுத்தவன், 'நீ கூறுவது பொய். காணாததைக் கண்டதேபோல் ஏன் சொல்லுகின்றாய்?' என்பானா? எதிர் மறுத்து ஒன்றும் சொல்லமாட்டான். கண்டது வெள்ளம்; காணாதது மழை; கிழக்கு நோக்கிப் பாயும் அவ்வாற்றின் மேற்கில் மழை பெய்தமையே அவ் வெள்ளத்திற்குக் காரணம் என்பது ஊகிக்கப்படுகின்றது.

காண்பது உடம்பு; காணாதது உயிர்: ஆயினும் உடலின் இயக்கத்தால் உயிர் ஒன்று உண்டென்று உறுதியாக நம்புகின்றோம்.

நான் வழக்கமாகக் கூறும் ஒன்று நினைவிற்கு வருகின்றது; அதனையும் சொல்லுகின்றேன்.

நாட்டுப்புறத்திலுள்ள ஒரு சிறுபள்ளி. மாணவர் பலர் அங்குப் படிக்கின்றனர். பள்ளிக்கூட வருடம் ஆரம்பித்து ஆறு மாதங்களுக்கு மேலாகிவிட்டன. அவ்வூரில் ஒரு பணக்

காரருண்டு. அவர் தம் மகனைப் பள்ளியில் சேர்க்க விழைந்தார் முதல் வகுப்பில் அவன் சேர்க்கப்பட்டான். பிள்ளைக ளெல்லாரும் நெடுங்கணக்கை நன்ருக அறிந்திருந்தனர். அவர்களிடையில் இப் புது மாணவனும் இருந்தான். அவன் வந்து சேர்ந்த மறுநாள் பள்ளிக்கூட பரீட்சாதிகாரி (டிப்புடி இன்ஸ்பெக்டர்) வந்து சேர்ந்தனர். அவர் முதல் வகுப்பினுள் நுழைந்தார். மாணவர்களைப் பரீட்சிக்க எண்ணிய அவர், கரும்பலகையினருகில் செல்லுகின்ருர். வெண்மையாகிய சுண்ணும்புக் கட்டியால் பலகையின்மேலிருந்து கீழ்ப்புறமாக ஒரு கோடிழுத்து அதனை வலப்புறம் நீட்டினர். ட. 'இது என்ன?' என்ற கேள்வியைக் கேட்டார். தெரியாதவர்களே அகப்பட்டுக்கொள்வது இயல்பு. அவ்வாறு புது மாணவனே வினுவப்பட்டான். அவன் 'இது கோடு' என்ருன். யாவரும் சிரித்தனர். பழைய மாணவன் ஒருவனைக் கேட்கின்ருர். அவன் 'ட', என்ற எழுத்து என்று கூறுகின்ருன். 'கோடு' என்றவன் தெரியாதவன். ஆனல் தெரிந்ததும் கண்டதும் கோடுதான். அதனையே இவன் கூறினன். காணுதது ஒலி; அதனை, அறிந்த பழைய மாணவன் கூறினன். அவனையே அறிவுடையவன் என்று யாவரும் மதிக்கின்றனர்.

கண்டது உலகம்: காணுப் பொருள் கடவுள். நாமோ எல்லாம் அறிந்தவர்க ளல்லர்: ஆனல், நமக்கு அறிவுண்டு. உள்ள அறிவால், கண்ட உலகை விசாரித்துச் செல்லின் காணுத கடவுளை அறிவோம். குறைந்த அறிவு காரணமாக நிறைந்த அறிவினையுடைய கடவுள் உண்டென்பது உறுதியாகின்றது.

ஆதலின், மூன்ருவதாக நம்மால் காணப்படும் பொருள் கடவுள் என்பதாம்.

## உயிர்களின் இடைநிலை

இம் முப்பொருள்களுள் உயிர்களாகிய நாம் இடையில் இருக்கின்ருேம். முதலது அறிவற்ற உலகம். மூன்ருவது அறிவே நிறைந்த பரம்பொருள். நாம் என்ன செய்யலாம்? நம்முன் னிற்கும் உலகத்துடனும் நம் பின்னதாகிய கடவுளுடனும் கூடலாம்; இரண்டையும் அநுபவிக்கலாம்.

## மெய்கண்டதேவர்

"இருதிறனறிவுளது இரண்டலா ஆன்மா"

என்றனர்; இதன் பொருள், 'இரண்டையும் அறிந்து அநுபவிக்கும் உயிர், உலகமும் கடவுளும் அன்று' என்பதாம்.

## நல்லிணக்கம்

குறைந்த அறிவினைப் பெற்றிருக்கின்ற நாம் மிகக் குறைந்த அறிவுடையாருடன் பழகுதல் தீமையையே நல்கும். அப் பழக்கத்தால் நாம் பெற்றுள்ள அறிவையும் இழப்போம். ஒரு சிறு உதாரணத்தில் அவ் வுண்மையைக் காண்போம். 'கண்' எனும் பொறி 'பார்த்தல்' என்ற அறிவினை உடையது. இருளுடன் கூடுங்கால் அவ் வறிவை அஃது இழக்கின்றது. சிறு ஒளியுடன் கூடுங்கால் சிறிது தொலைவு காணும் அறிவை அது பெறுகின்றது. பேரொளியாகிய ஞாயிறுடன் இயையும்போது நீண்ட தொலைவு காணும் தகுதி அதற்கு உண்டாகின்றது. உயிரும் கண்ணை ஒத்தது; உலகம் இருளை ஒத்தது; ஞாயிறு கடவுளை ஒத்தது. கண் இருளுடன் கூடிப்பார்க்கும் அறிவை இழந்து பின்னர் ஞாயிறுடன் கூடி வெகுதொலைவு காணுமாறுபோல, உயிரும் உலகுடன் கூடி அறிவை இழந்து, கடவுளுடன் இயைந்தபோது பேரறிவைப் பெறுகின்றது.

பஞ்சு கனமற்ற பொருள்: கருங்கல் கனம் மிகுந்தது. நீரிலிடின் கல் நீருள் அமிழ்ந்துவிடும். இக் கல் தோணியுடன் கூடுகின்ற காலத்தில் அமிழும் தன் பெருந்தன்மையை இழந்து தானும் மிதக்கின்றது. இழிந்ததாகிய மிதக்கும் தன்மை கல்லுக்கு எதனால் வந்தது? மிதத்தலாகிய இழிந்த குணமுடைய தோணியைக் கூடினமையாலன்றோ? ஆகவே, தம்மினும் இழிந்தாரோடு கூடுவது உள்ள உண்மையறிவையும் அழிக்கும் என்பது வெளிப்படையாயிற்று.

தாழ்ந்த அறிவுடையோருடன் கூடுவதால் கேடும், ஒத்த அறிவுடையோருடன் கூடுவதால் நடுநிலையும், மிக்க அறிவுடையோருடன் கூடுவதால் இலாபமும் ஒருவருக்குக் கிட்டுகின்றன. இவற்றை உணர்ந்த அறிஞர், "இணக்கமறிந் திணங்கு" என்றனர். நாம் கொள்ளும் முடிவு என்ன?

நம்மினும் மிக்க அறிவுடையாருடன் கூட வேண்டும் என் பதே.

நம்மினும் அறிவுடையோராக நாம் கொள்ளும் நட்பி னர் பலவகை யாகலாம். படிப்பு, உயர் பிறப்பு, நல்ல அதி காரம் ஆமிவற்றை உடையவர்கள் அத் தகுதியாளராக இருத் தலும் கூடும். அவற்றை நோக்கியே அவருடன் கலத்தலா காது. ஏன்? ஒன்றை எடுத்து ஆராய்வோம்.

படிப்புடையோருடன் கூடுதல் நன்று என்ற முடி பினைக் காண்போம். படிப்பு என்பது வேறு; அறிவு என்பது வேறு. கிணறு இருக்கின்றது. அதன்கண் உள்ள நீர், உயிர் நீங்கும் தறுவாயிலுள்ளாருக்கு உயிரைத் தரும். உயிர்தந்து காப்பாற்றும் அந் நீரே அக் கிணற்றுள் வீழ்வாரைக் கொல்லும். நீர் ஒன்றே வாழவும் சாகவும் செய்யும் நீர்மையை யுடையதாகின்றது. அவ்வாறே படிப்பு என்ற ஒன்றே ஒருவனை உயர்குணமுடையனுகவும் இழிகுண முடையனுகவும் செய்ய வல்லது. அதனைப் பயன்படுத்திக் கொள்ளும் தகுதியில் அதன் குணச் சிறப்பு அமைந்து கிடக் கின்றது. அவ்வாறேதான் உயர் பிறப்பு, நல்ல அதிகாரம் முதலியவைகளும். ஆதலின் இவற்றை உடையாருடன் கூடுதல் நன்மையையே தருவதென்ற முடிவு கொள்ளத்தக்க தன்று.

பின்னர் எவருடன் கூடலாம்? அறிவுடன் தயையுடை யோருடன் கூடுதலே தக்கது. தயை என்பது பிறர் துன்பத் தைக் கண்ட காலத்தில் வெண்ணெய்போல் உருகல். நெருப் பின்மேல் வைக்கப்பட்ட ஒரு பாத்திரத்திலுள்ள வெண் ணெய் சூடு ஏற ஏற உருகித் தன்னுருவத்தையே இழக்கின் றது. அவ்வாறே பிறர் துன்பத்தைக் காணுங் காலத்தில் தம்மை மறந்து பிறர் துன்பத்தில் ஈடுபட்டு அப்படியே உருகி நிற்றல். இச் சிறப்புடைக் குணமே தயை எனப்படுவது. தயையுடையான், தன்னுடல் தன்பொருள் தன்ஆவியைத் தன்னுடையனவாகக் கருதாது பிறர்க்கு ஈயும் இயல் புடையோனுவான்.

தேயம், காலம், சாதி, மதம், நிறம் முதலியன முக்கிய மல்ல. அறிவும் தயையுமே முக்கியம். இவற்றை உடைமை

யாக உடையாரையே தேர்ந்துகொள்ளல் வேண்டும். இத் தகையாருடனேதான் நட்புக் கொள்ளுதல் வேண்டும்.

## நட்பு வகை

உலகில் இருவகை நட்புக்களுள. ஒன்று இயற்கை; மற்றொன்று செயற்கை என்க. மனைவி, உடன் பிறந்தார், சுற்றத்தார் முதலியோர் இயற்கை நட்பினர். அறிவு முத லியன ஒத்தல், ஓரிடத்துப் பழகல் ஆகியவற்றால் உண்டாம் நட்பு, செயற்கை நட்பு எனப்படும். சிவபெருமானும் இரு வகை நட்பினைக் கொண்டனர். ஒருவர், செல்வமுடைய அளகைப் பதியார்; மற்றவர், கல்வியுடைய நாவலூரர். இதனைச் **சிவப்பிரகாச சுவாமிகள்** அழகுடன் கூறினர்.

அறிந்த செல்வ முடையானும் அளகைப் பதியாற் றோழமை கொண்டு
உறழ்ந்த கல்வி யுடையானும் ஒருவன் வேண்டு மெனஇருந்து
துறந்த முனிவர் தொழும்பரவைத் துணைவா நினைத்தோ
ழமைகொண்டான்
சிறந்த அறிவு வடிவமாய்த் திகழும் நுதற்கண் பெருமானே.

—நால்வர் நான்மணிமாலை

## போலி நட்பு

தற்காலத்தில் நாம் கொள்ளும் நண்பரின் இயல்பு என்ன? நம்மைக் காணுங்கால் கண் மலர்வர்; உதடுகளை அசைத்துச் சில சொல்லுவர்; மகிழ்ந்து நிற்பர்; பின்னர்ப் பிரிவர். மேல் காற்றால் வியாதி வரும் என்பர் பெரியோர். மேல் நாட்டு நாகரிகக் காற்று வீசும் இக்காலத்தில் நாம் பெற்றிருக்கும் நட்புநோய் இத்தகைத்தே!

நம் பண்டைப் பெரியோர் இத்தகைய இழிசன நட் பைக் கொள்ளாதே என்று அறிவுறுத்தினர். "நகுதற் பொருட்டன்று நட்டல்" என்ற மெய்ம் மொழியின் உயர் வைக் காணுங்கள். நமக்குத் தம் இன்முகம் காட்டி நன் னயத்துடன் பேசுவோர் நண்பராகார். குற்றம் காட்டு வோரே உயர் நண்பராவர்.

"இகழ்ந்தேனது உளச்செருக் ககற்றிலாய்
புகழ்ந்தனை விழைபுளிங்கறி இட்டுநோய்
மிகுந்தழ வளர்த்தல் போல்"

—பிரபுலிங்கலீலை

நம்பால் உரிமை நண்பு பூண்டார் ஒரு குற்றம் புரிவரேல், கண்டித்துக் கூறித் திருத்துதற்கு முற்படல் வேண்டும். அவ்வாறின்றி அவர் கருத்தே தம் கருத்தும் என்று ஒத்துப் பாடி அவரைத் தவறுன வழியிற் செல்ல விடுவது தகாது. அது, தாடையில் அடிக்கின் வலிக்கும் என்றெண்ணித் தலையை வெட்டுவது போல்வது.

இதுகாறும் கூறிவந்த உண்மையை அறிவிப்பதே 'சிங்கமுகன்' என்ற இச் சொற்பொழி வாகும்.

## சிங்கமுகன் இயல்பு

சிங்கமுகன் யார்? என்பது போன்றவற்றை இனிப் பேசும் முறையில் அவன் சரித்திரத்தில் ஈடுபட்டு நம் வாழ்வையும் திருத்திக்கொள்ள முயல்வோம்.

"பூஎனப் படுவது பொறிவாழ் பூவே" 'பூ' என்று பொதுவாகக் கூறின் அது தாமரை ஒன்றனையே குறிக்கும். அதன்கண் வசிப்போன் பிரமன். அன்னவன் மக்களுள் ஒருவன் காசிபன். அவன் மக்கள் மூவர் அவர் சூரபதுமன், சிங்கமுகன், தாரகன் என்போர். சிங்கமுகன் அவருள் நடுவன்.

மூவருக்கும் நடுவோன் இவன்; நடுநிலையோனும் இவன். சிறந்த சகோதர அன்புடையோன்.

கடுந்தவம் புரிந்தனன் சூரபதுமன். ஆண்டவன் வெளிப்படவில்லை. தீயில் வீழ்ந்து மாண்டனன். அப்பொழுது சிவபெருமான் தோன்றினுன். சிங்கமுகன் சிவபெருமானை வணங்கி நின்றனன். 'நினக்கு வேண்டுவது யாது' என்றனன் சிவன். சிங்கமுகன் கூறியதை அன்பர்கள் கவனிக்க. ஒளவையார், "மாறில் உடன்பிறப்பில்லா உடம்பு பாழ்" என்றனர். 'மாறில்' என்ற அடை அழுந்திய கருத்துடன் அமைக்கப்பட்டிருக்கின்றது. மாறில் உடன் பிறந்தோன் சிங்கமுகனுவன். ஆதலினுல், தன்னுடன் பிறந்த மூத்தவனுடைய வாழ்வையே விரும்பினுன். மூவராக இருந்து பங்கிடுதலில் தொல்லை உண்டாம் என்று இக்காலத்துச் சோதரர் கருதுதல் கூடும். அத்தகைய எண்ணம் சூரனுக்குத் தான்றவில்லை. 'என் அண்ணன் வேண்டும்' என்றனன். துமன் சிவனருளால் உடல்பெற்றுயிர்பெற்றெழுந்தான்.

வரம்பல பெற்ருன். பின்னர்த் துணைவர் சென்று வணங்கினர். வணங்கிய சிங்கமுகனையும் தாருகனையும் நோக்கிய சிவன்,

“ சூர னென்பவன் தோளிணை போலவே
வீர மெய்தி விளங்கிநுற் றெட்டுகம்
சீரில் மேவுதிர் ”

என்றனர்.

‘ சூரனிருதோள் போல் நீவிர் இருக்க ’ என்று வாழ்த்துகின்றனர் வள்ளலார். இவ்வுவமை யழகினையும், ‘ உடுக்கை இழந்தவன் கைபோல ’ என்ற வள்ளுவர் வாக்கின் உவமை யழகையும் ஒன்று சேர்த்துக் காண்க. ‘ தோள் ’ என்பது விரல்கள் வரை என்பது அறிதற்குரியது.

இவ்வாறு வாழ்த்திய பரம்பொருள் அவர்தம் எண்ணம் நல்லெண்ணமன்று என்று அறிந்தவராதலின் மற்றும் கூறுகின்ருர்.

“ தேவர் யாவரும் சென்று தொழப்படு
மூவ ராகி மொழிந்திடு நுங்களைத்
தாவி லாதநஞ் சக்தியொன் றேயலால்
ஏவர் வெல்பவர் என்று விளம்பிமேல் ”

இங்கு ‘ நுங்களை சக்தி ஒன்றே வெல்லும் ’ என்று வெல்லும் பொருளினை விளம்பினர்.

பதுமன் தான் பெற்ற வரங்களையே எண்ணிக்கொண்டிருந்தனன். ஆதலின், இறுதியில் இறைவன் கூறிய உறுதிமொழி அவன் செவியில் நுழைந்து உள்ளத்தில் இடம் பெறவில்லை. சிங்கன் சிந்தை சிவபிரான் செப்பிய ஒவ்வொரு சொல்லிலும் ஆழ்ந்து நின்றது. ஆதலின், ‘ சக்தி வெல்லும் ’ என்று அவர் கூறிய சொற்களை உள்ளத்தில் பதித்துக் கொண்டான்.

தன் அரசியலில் அடங்கிய பெரும் பகுதியைத் தன்னுடன் பிறந்தாருடன் அரசாள முற்பட்டான் பதுமன். வட சமுத்திரத்திலுள்ள ஆசுரபுரியில் சிங்கனை இருத்திய பதுமன் தென்கடல் நடுவிலுள்ள மகேந்திரத்தில் தானிருந்து அரசு செலுத்தினன்.

சிங்கன் தன் நகரத்தில் தீயகுணம் ஒன்றுமின்றி நற்குண சீலனாய் வாழ்ந்து வந்தான். தனக்கு மூத்தோன் செய்த தீய செயல்களை எல்லாம் கேட்டு மனம் உருகினான்.

இக் காலத்திலேதான் பிரமன் முதலிய தேவர் சிவனை வணங்கினர். சிவனருளால் முன்தோன்றிய முருகப்பிரான் திருச்செந்தூர் வந்து தங்கினன்.

'கருணை வெள்ளமெனத் தவிசில் வீற்றிருந்தான்' அறுமுகவன். மிக்கோங்கிய கருணையால் வீரவாகுவைத் தூதாக அனுப்பினான். தீமையே உருவெடுத்த பதுமன் அருளே உருவாகிய வாகுவினிடம் அன்பைப் பெறாது அறியாமையை வெளிப்படுத்தினான். அசுரன் மகனொருவனையும் எண்ணில் வீரரையும் மகேந்திரத்தையும் துகளாக அழித்த பெருமான், செந்தூர் மேவிச் செவ்வேள் அடிவணங்கி, 'அசுரன் போருக்கே முற்படுகின்றான்' என்றியம்பி நின்றனர்.

தனக்கு நேர்ந்த இத் தொல்லைகளை எவ்வாற்றானும் போக்கிக் கொள்ள எண்ணிய பதுமன், ஆலோசனை மண்டபம் அடைந்தான். தன் உறவினர், சேனாதிபதிகள், மந்திரிகள் முதலியோரை அழைத்தனன். ஆசுரபுரியிலிருந்து சிங்கமுகனும் அழைக்கப்பட்டான்.

பதுமன் நடந்ததைக் கூறி இருக்கையில் இருந்தான்.

தருமகோபன் முதலிய மந்திரிகள் எழுந்தனர். தம் தலைவனாகிய பதுமன் எண்ணம் என்ன? என்பதை உற்று உணர்ந்தனர். அவன் வழிநின்று சொல்மாரி பெய்தனர். நெய்விட்டு நெருப்பைப் பெருக்குவதுபோல் இருந்தது அவருரை.

## சிங்கன் செவியறிவுறூஉ

சிங்கனுக்கு அவர்தம் போலியுரை பெரும் சினத்தை விளைத்தது. இருக்கைவிட் டெழுந்தான். அண்ணனைப் பணிந்தான். சிவன் கொடுத்த வாழ்வினை எண்ணாது அவமாய் அழிகின்றானே அண்ணன் என்று மனம் கசிகின்றான். ஆதலின் பெற்ற வாழ்வினை அழியாது காப்பாற்றிக் கொள்ளுமாறு நல்லுபதேசம் செய்கின்றான். அந்நெறியில் பல கூறுகின்றான். சில சொல்லுவேன். அவன் ஆயிரம் சிம்மவாயி

றலும் பேசுகின்றான். கடவுளைக் கண்ட கண்ணோடு, அவன் தந்த அருளுடன் கூறுகின்றான்.

'அண்ணா! வந்தவர் யார்? என்று நீவிர் அறியவில்லையே!' என்றான். பதுமனுக்கு வெகுளி எழுகின்றது. அசுரன் போக்கில் நின்று பேசிய அரக்கர் பலருடைய உரைகளையே செவிமடுத்து மகிழ்ந்த அவனுக்கு இவனுண்மை உரை துன்பத்தைத் தருகின்றது. முகம் மாறுகின்றது. புருவம் மேலேறுகின்றது. கண்கள் அனலைக் கக்குகின்றன. மீசை அசைகின்றது. உதடுகள் துடிக்கின்றன.

பதுமனுக்கு மட்டுமன்று; யாவருக்கும் இக் குணமுண்டு. "உங்களை அவர் இவ்வாறு புகழ்ந்தார்" என்றால், 'யார்?' என்று மகிழ்வுடன் கேட்பார்கள். "உங்களிடத்தில் இன்ன குற்றமுண்டு என்றார் அவர்" என்றதும், 'எவன்?' என்று கேட்பார்கள். ஆகவே, மக்கட் கூட்டத்திற்கே இவ்வியல்பு உண்டு.

தனக்கு முன்பிறந்தோன் உடல் மாறுபாட்டில் கருத்தைச் செலுத்தாது சிங்கன் மேலும் நவில்கின்றான்.

"வந்தவர் கடவுளாவார். அவரே நினக்கு வரம் தந்து இவ்வாழ்வைத் தந்தவர்" என்கின்றான்.

"அப் பிரானுக்கு உருவம், பெயர், தொழிலேது? வந்தவாறு கூறுவேன்" என்கின்றான்.

தன்னை நேரிலாப் பரம்பொருள் தனியுருக் கொண்ட<br>தென்ன காரண மென்றியே லைந்தொழி லியற்றி<br>முன்னை ஆருயிர்ப் பாசங்கள் முழுவது மகற்றிப்<br>பின்னை வீடுபே றருளுவான் நினைந்தபே ரருளே.

## பரம்பொருள்

முருகனைப் 'பரம்பொருள்,' என்று குறிக்கின்றான் சிங்கன். இத் தொடர் பெரியார் சொல்லியவாறு, பெருமான் இலக்கண அமைதியுடன் விளங்குகின்றது. முப்பொருளும் பொருளே ஆயினும் கடவுட் பொருளாகிய இப்பொருள், மற்ற இரண்டினும் உயர்ந்தது; ஆதலின் பரம் பொருள் ஆயிற்று. பணம் மிகப் படைத்தோர் உயர்ந்தோரல்லர்; இவ்வாறே வேறு பிறவற்றிலுயர்ந்தோர் உயர்ந்தோரா

கார். தயையும் அறிவுமே பெருமைக்கிடமாகும். இவ்விரு குணங்கட்கும் பேரெல்லையாயோன் இறை முருகனாதலின் அவன் பரம் பொருள் என்று குறிக்கப்பட்டான்.

## தன்னை நேரிலா

இப்பொருளுக்குச் சமமாகிய பொருள் வேறு ஒன்று உலகிலின்று. உவமை கூறவேண்டுமென்றால் அப்பொருளையே அப்பொருளுக்கு உவமை கூறவேண்டுமே யொழிய வேறு வழி இல்லை. ஆதலின் **தன்னை நேரிலாப்** பரம் பொருள் என்றான் சிங்கன்.

## தனி உரு

"தனக்குச் சமமாக ஒரு பொருளிலாத் தனித் தலைவன் அவன்; அவன் வெகுளின் நீ கெடுதல் திண்ணம்" என்று நன்கனம் அறிவிக்கவே 'தன்னை நேரிலாப் பரம்பொருள்' என்று நினைவுக்குக் கொண்டு வருகின்றான்.

இறைவன் கொண்ட உருவம் நம் உருவத்தைப் போன்றதன்று. நம் உருவம் தோன்றும்; வளரும்; தேயும். மலையில் வளர்வது வரை அல்லது மூங்கில் எனப்படும. அதனை வெட்டி அகப்பைக் காம்பாகக் கொள்ளுதலியல்பு. அவ்வகப்பையால் உணவுப்பொருளை எடுத்தால் அப்பொருள் கெடுவதில்லை. மக்களாகப் பிறத்தல் மிக உயர்ந்தது என்பர் பெரியோர். "எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் அரிது அரிது" எனும் மேற்கோளைக் காட்டி ஒரு முறைக்கு இருமுறை அருமை கூறப்பட்டிருக்கின்றது என்று பதசாரம் கூறி மகிழ்வோரையும் கேட்டு மகிழ்ந்திருக்கின்றேன். இத்தகைய பிறவியிற் கிடைத்த உடம்பின் ஒரு பகுதியாகிய கை, படுதலினாலே உணவுப் பொருள் கெடுகிறது. மூங்கில் அகப்பை உயர்ந்ததா? உடல் உயர்ந்ததா? அன்பர்கள் எண்ணிப் பார்க்க. இத்தகைய உடலே நாம் பெற்றுள்ளது.

மேலும், இவ்வுடல் பஞ்சபூத பரிணும சரீரம் என்று பேசப்படுகின்றது. 36 தத்துவம்; 60 தாத்துவிகம்; ஆக 96 தத்துவங்களைக் கொண்டு விளங்குகின்றது. இத்தகைய உடலிலக்கணம் எங்கும் நிறைந்த ஞான உருவனாகிய இறை

வனுருவத்துடன் சிறிதும் இயைபுடையதன்று. ஆதலின் அவன் உருவைத் தனி உரு என்றனன் சிங்கன்.

## அண்ணனிடத்து மதிப்பு

தன்னுணர்வு ஒன்றுமே யற்றவனுயினும் தன்னுடன் பிறந்த உரிமையுடையவன் பதுமன் என்று மரியாதையாக, ' என்றியேல் ' என்று கூறுகின்ருன். தன் அண்ணனை வினு வினனுக வைத்துக்கொண்டு விடை கூறுதற்குச் சிங்கன் முற்படுதலை அன்பர்கள் கவனிக்க.

## பேரருள்

பெருமான் உருவம் கொண்டது அருள் காரணமாக என்று தொடர்ந்து சொல்லுகின்ருன். அருளில் பல படிகள் உண்டு: இங்கே குறித்தது பேரருள். மனை மக்கள்பால் அன்பு என்ற குணத்தால் உருகும் நெஞ்சு, தன்னைச் சார்ந்தோருக்கு ஒரு சிறு தொல்லையுற்ற காலத்தில் எவ்வாறு துண்ணென்று அஞ்சுகின்றதோ, அவ்வாறே தம் முடன் எத்தகைய தொடர்பு மில்லாத பிறருடைய துன்பத் தைக் கண்ட காலத்தில் மனம் உருகிளுல் அவ்வாறு உருகு தற்கு அடிப்படையான குணம் அருள் என்று பேசப்படும்.

பாரி மன்னன் காட்டின் வழிச் சென்ருன். அறிவற்ற சிறு கொடி துவள்வதைக் கண்டான். அதன் துயரத்தைப் போக்க எண்ணினுன். தான் ஊர்ந்து சென்ற தேரினை அக் கொடி படர்தற்கு விடுத்துக் கல்லும் முள்ளும் காலில் உறுத்த நடந்து சென்ருன். இது அருள் ஆகும். சிறந்த வள்ளலாகிய பாரி போன்ருர்வழி வந்துள்ள நம்மனோர் தம் நிலைமையைச் சிறிது சிந்தித்தல் இன்றியமையாததே.

இறைவனருள் பேர் என்ற அடையால் விசேடிக்கப்பட் டிருக்கின்றது. இவ்வடை, ஒரு தேசம், ஒரு காலம், ஒரு சாதி, ஒரு மதம் முதலிய நிலைமைகள் அவனுக்கில்லை என்ப தைக் குறிக்கின்றது. எங்கும் அவன் கருணை! அவன் கருணை நிரம்பாத இடமும் உண்டோ? ஆதலின் அவ்வருள் ' பேரருள் ' ஆயிற்று.

## அருளால் அளித்தன

அவனருளால் நமக்குச் செய்தன யாவை? ஒன்றுமில்லா நிலையில் துன்பக் கடலில் கிடந்த உயிர்களுக்கு உடலைத்

தந்தான். வெற்றுடம்பு மட்டும் தரப்பட்டிருப்பின், நினைத்தல், பேசுதல், செயல் ஆகியவற்றைச் செய்ய நம்மால் முடியாது. பேரிகை ஒலியைப் பரப்பும் தகுதி உடையதே. தனித்த பேரிகை என் செய்யும்? கடிப்பு கொண்டு அடித்த காலத்திலன்றே ஒலி வெளிவரும். பெருமணி ஒன்றிருக்கின்றது. அடித்தாலன்றே இனிய ஓசை அதனின்றெழும். அவ்வாறே நன்றிது தீதிது என்று பகுத்துணரும் ஆற்றல் இல்லா தொழியின் உடல் எதற்குப் பயன்படும்? அறிவுடன் கூடிய காலத்திலன்றே தக்க பயனைத் தரும். ஆதலின் அறிவையும் தந்தான்; தந்து அவ்வறிவை நாம் அநுபவிக்கும்படியும் செய்தான்.

## இறைவனே தந்தது உடல்

இடையில் ஒன்று; சிலர் இவ்வுடலை இயல்பாக உயிர் அடைந்தது என்று எண்ணுதல் கூடும். அறிவுடையது உயிர். அறிவற்றது உடல். இவ்விரண்டுள் எது எதனை அடைந்திருக்க வேண்டும்? உயிர் உடலையா? உடல் உயிரையா? உடல் உயிரை அடைந்தது எனின் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று. ஏன்? அது அறிவற்றது. உயிர் உடலை அடைந்தது எனினும் ஏற்றுக்கொள்ள முடியாது. ஏன்? எனின், உறவினர் தொல்லையுறக் கண்டு அது உடலை விட்டு நீங்காது. மேலும் விரும்பிய காலத்தில் அது உடலை விட்டு நீங்கவேண்டும். இக்குணத்தினை உயிரிடத்தில் காண்கின்றோமில்லை. ஆகவே, உடலும் உயிரை அடைந்திருக்காது; உயிரும் உடலை அடைந்திருக்காது. இவ்விரண்டினையும் ஒன்று கூட்டியவன் ஒருவன் இருந்தே தீரவேண்டும. அவன் முற்றறிவினனாகிய தலைவனைத் தவிர வேறு யாராகவும் இருக்க முடியாது. ஆதலின் இறைவன் தந்தது இவ்வுடல் என்க.

## மனம் முதலிய

அறிவு தந்த இறைவன் மனம் முதலிய அந்தக்கரணங்களையும் தந்துளான். அந்தக்கரணங்களில்லையேல் நம் கதி யாதாகும்? மாடு இருக்கின்றது; அது நம்மைப்போல் உண்டு களித்து இனத்தைப் பெருக்குகின்றது. மக்களுக்கும் அதற்கும் உள்ள வேறுபாடு என்ன? மக்களுக்குப் பகுத்தறிவு உண்டு. விலங்குகட்கோ அக் குணம் இல்லை. 'மனஸ்' அதற்கில்லை. மனசை உடையவன், 'Man' மனிதனுயினன்.

"மக்கள் மானுடர் என்று மனத்தினுல்
மிக்க மேன்மை விளங்கினர்"

—பிரபுலிங்கலீலை

என்றது காண்க.

## இறைவனுணர்வு

இவ்வாறு மனம் முதலிய அந்தக்கரணங்களை உதவிய உத்தமன், மக்கள் வாழ உலகத்தைத் தந்தான்; அநுபவிக்கப் போகங்களை நல்கினுன். இவ்வாறு ஆண்டவனுதவிய அரும் பொருள்களில் கருத்தைச் செலுத்துதல் வேண்டும். சாதாரண மனிதன் சாப்பிடுதல், தூங்குதல் முதலிய சாதாரணமானவற்றிலேயே தன் கருத்தைச் செலுத்திக் காலத்தைக் கழிக்கின்முன். அறிவுடையவனே பிறப்புத் துன்பத்தை உணர்கின்முன். துன்பங்கள் விளைதற்குக் காரணம் என்ன என்பதை ஆராய்கின்முன். முடிவாக எவ்வகைத் துன்பத்திற்கும் அறியாமையே ஆதாரம் என்று காண்கின்முன். அவ்வறியாமையும் உயிரில் தோய்ந்திருக்கின்றதென்றுணர்வான். அவ்வறியாமையை அழிக்க வல்லவன் ஆண்டவனே என்பதை நன்முக உணர்வான். இங்ஙனம் உணர்ச்சி பெற்றேன், அரும்பு, பூ, காய், பழம்போல் சரியை முதலிய நான்கினையும் கைக்கொள்வான். அக்காலத்தில் ஆண்டவன் அருட்குருவாக வருகின்முன். மனிதனுக்கு அருள்புரிய மனிதத் தோற்றத்தையே கடவுள் கைக்கொள்கின்முன்.

பெருமான் உடல் தந்ததால் இவ்வளவும் நிகழ்கின்றது. அவனே ஆணவம் மாயை கர்மம் திரோதாயி மாயேயம் ஆகிய ஐவகைத் துன்பங்களையும் களைந்து வீடு அருள்கின்றனன். பஞ்ச சக்தியால் பஞ்ச பாசத்தையும் அழிக்கின்றனன்.

## நல்லறிவு கொளுத்துதல்

இவ்வாறு சிங்கன் பல சொன்ஞன். மேலும் நல்லறிவு கொளுத்தும் பொருட்டு,

அருவு மாகுவன் உருவமு மாகுவன் அருவு
முருவு மில்லதோர் தன்மையு மாகுவன் ஊழின்

கரும மாகுவன் நிமித்தமு மாகுவன் கண்டாய்
பரம னுடலை யாவரே பகர்ந்திடற் பாலார்.

எல்லாம் அவன். அவனன்றி ஓரணுவும் அசையாது. அன்னவன் ஆடலை எடுத்தியம்பும் வன்மை எவருக்குண்டு? எதனுள்ளும் அடங்காது எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் அவனடியிணைகளை வழுத்துக என்றனன். மேலும்,

வேதக் காட்சிக்கும் உபநிடத் துச்சியில் விரிந்த
போதக் காட்சிக்கும் காணலன் புதியரிற் புதியன்
மூதக் கார்க்குமூ தக்கவன் முடிவிற்கு முடிவா
ஆதிக் காதியா யுயிர்க்குயி ராய்நின்ற அமலன்.

என்று வேதங்களாலும் அறியமுடியாதவன் அவன்; எவ்வுயிரிலும் நிறைந்து நின்றவன்; என்று கூறினன்.

## வெளிப்படைப் பேச்சு

இனி வெளிப்படையாகப் பேச முற்படுகின்றனன் சிங்கன்.

ஞானந் தானுரு வாகிய நாயக னியல்பை
யானு நீயுமா யிசைத்துமென் றாலஃ தெளிதோ
மோனந் தீர்கலா முனிவரும் தேறலர் முழுதும்
தானும் காண்கிலன் இன்னமும் தன்பெருந் தன்மை.

தன்னுடன் பிறந்தானையும் உடன்கூட்டி நாமிருவரும் சொல்லினும், பேசினும் எங்ஙனம் அவன் முழு இயல்பையும் உரைத்தலியலும்? அஃதெளிதோ? என்று வினவும் வினாவின் அழகை அன்பர்கள் கவனிக்கவேண்டும்.

மோனம் நீங்காத முனிவரும் அவனை முழுமையும் அறியார். 'மோன மென்பது ஞான வரம்பு' என்பது இங்கு எண்ணுதற்குரியது. வாய்மூடி இருத்தல் மோனம் அன்று; மன சம்பந்தம் மோனம், சிந்தனை அற்றிருத்தலே **மோனம்** என்று குறிக்கப்பட்டது.

தைலதாரைபோல் இடைவிடாது இறைவனைச் சிந்திக்கும் இயல்புடையோரே **முனிவர்** எனப்படுவோர்.

பெருமான் தானே தன் பெருந்தன்மையை இன்னும் காண்கிலன்; எனின், அதற்குக் காரணம் அவன்பாலுள்ள

அறியாமையா? இல்லை. அவன் பெருமையில் அவனுக்குக் கருத்தில்லை என்பதே காரணமாகும்.

"தம்மையும் தம்தலைமையும் பார்த்துயர்ந்தோர்
தம்மை மதியார் தலைமை உணர்ந்தோர்"

என்பது காண்க.

## பேச்சின் முடிவு

இவ்வாறு கூறிவந்த சிங்கமுகன் முடிவாக உண்மை உறுதி நிறைந்த சீரிய சொற்களைச் சொல்லி முடிக்கின்றான்.

கெடுத லில்லதோர் வளநெறி நீயுநின் கிளையும்
படுத லின்றியே வாழ்தியேன் றின்னன பகர்ந்தேன்
இடுதல் கொண்டிடு சிறையினுடைத் தேவரை யின்னே
விடுதல் செய்குதி என்றனன் அறிஞரின் மிக்கான்.

## சிங்கன் ஊர் திரும்பல்

சிங்கன் கூறிய நல்மொழிகள் பதுமன் செவியில் ஏற வில்லை. ஆகூழ் அவனுக் கொழிந்தது. போகூழ் அவன்பால் முளைந்து நின்றது. அதனைத் தடுக்கவல்லார் யார்? ஆதலின், பதுமன் போரிடுவதிலேயே தன் கருத்தை ஊன்றினான். விதிவழி மதி என்பதை அறிந்த சிங்கன் வாய்மூடி இருந்தான். ஆலோசனை முடிந்தது. ஆசுரபுரியாகிய தன் தீவுக்குத் தான் திரும்பினான்.

## சிங்கன் அழைக்கப்படல்

முருகனும் பதுமனும் போர் துவக்கினர். இரணியன் தோற்றுக் கடலில் மறைந்தான். அக்கினிமுகன் அழிந்தான். மூவாயிரவர் சிந்தினர். பானுகோபன் முடிந்தான். போர் செய்ய ஆள் வேண்டியிருக்கின்றது. இச்சந்தர்ப்பத்தில் சிங்கமுகனைப் பதுமன் அழைத்தான்.

## சிங்கனும் பதுமனும்

ஆசுரபுரியின் நீங்கி விரைந்து வந்தனன் சிங்கன். அண்ணனிருந்த அவையினுள் புகுந்தனன். பதுமன் கால்களில் தன் தலைகள் படும்படி வணங்கினான். கூப்பிய கையனாய் நின்

றுன். வணங்கிய தம்பியைத் தமையன் தழுவினன். ‘நின் முகம் வாடுவானேன் ?’ என்று சிங்கன் வினவுகின்றுன். ‘முருகன் சேனை வந்தது. மைந்தர்கள் யாவரும் அழிந்தனர். இரணியன் ஓடி மறைந்தான். தருமகோபன் முதலிய மந்திரி களும் இறந்தனர். எனக்கு வெற்றியைத் தருபவன் நீ ஒரு வனே. உடனே போர்க்களம் புகுந்து அவன் சேனையை முறியடித்து அவனையும் கொன்று வா. இதற்காகவே யான் நின்னை அழைத்தேன்” என்றனன்.

கேட்ட சிங்கன் உளம் மிக வருந்தினுன். தன் மூத்தோன் கால்களில் வீழ்ந்து மற்றுமொரு முறை வணங்கினுன்.

## சிங்கன் கட்டுரை

“அண்ணு ! ஆலோசனை மண்டபத்தில் கூறியவற்றை எல்லாம் மறந்தாய். வன்மை யமைந்த மைந்தரை இழந்தாய். பழமையான மந்திரிகள் இறந்தனர். எல்லோரையும் இழந் தாய். நின்னறிவு மிகப் புன்மையானது” என்றுரைத்து மேலும் கூறுகின்றுன்.

> மூலமு முடிவுமில் லாத மூர்த்தியைப்
> பாலனென் றெண்ணினை படுவ தோர்ந்திலை
> ஆலம தானதே ஐய என்மொழி
> மேலையின் விதியையார் வெல்லு நீரினுர்.

‘நான், முருகப்பிரான் யார்? என்பதை ஒரு முறைக்குப் பன்முறை எடுத்துக் கூறினேன். அவற்றை அடியோடு மறுத்தாய். ‘பாலன்’ என்று அவனைக் குறித்தாய். பால னுயின் பிறப்பும் இறப்பும் அவனுக்குண்டன்றே ? இவ்விரு நிலையும் கடந்து மூலமும் முடிவும் இல்லாத பெரியோன் அவனுவான்.’

## படுவது ஓர்ந்திலை

அறிவு என்பது யாது? எதிரதாவருமொன்றை அறி தலே அறிவு என்ற உண்மையை அறிவுறுத்தவே, வள்ளுவர், ‘ஆவதறிவான் அறிவுடையான்’ என்றனர். படுவது=வரு வது ; நாளை நேர்வதைக் கவனித்தல் வேண்டும் என்பதாம்.

‘இன்று இறந்து கிடக்கும் அன்னுர் கூறிய சொற்க ளன்றே அன்று நினக்குத் தேன் போன்று இருந்தன. பல சொல்லிய அவர் எந்த நிலையை அடைந்தனர்? யான்சொல்லிய

சொற்கள் நினக்கு ஆலம்போல் நஞ்சா யிருந்தன. அண்ணு! நின்னையும் அடக்கியாளும் விதி ஒன்றிருக்கிறது! அதனை வெல்லும் அறிவு உனக்கு வாய்க்கவில்லை. வாய்த்திருப்பின் என் சொல்வழி நின்றிருப்பாய்.

பல சொல்லுகின்றேன் என்று வேறு எண்ண வேண்டா. உன் கட்டளையின் வழி நின்று போருக்குச் செல்லுகின்றேன். மீண்டும் வருதல் அருமையே. முருகன் என்று கூறப்படும் அவ்வொரு மூர்த்தியை என்ஞல் வெல்லமுடியாது. வெல்லின், வந்து காண்பல். நீயும் பின்னர் நலமுடன் வாழலாம். நானிறந்தால் அக்கதியே மற்றவர்களுக்கும் என்பதை உறுதியாகக் கொள்ளுங்கள். நான் மீளவில்லையேல் நின் புந்தியில் நினைந்தவற்றைச் செய்யுங்கள்.'

கந்தனும் ஒருவனைக் கடக்கப் பெற்றிடில்
வந்தனைக் காண்பனுன் மற்ற தில்லையேல்
அந்தம தடைவரால் ஆரு மையநீ
புந்தியில் நினைந்தன புரிதியால்,

என்றனன்.

'கடக்கப் பெற்றிடில்' என்று சிங்கன் கூறுவது கவனிக்கத்தக்கது.

இவற்றைக் கூறிய சிங்கன் அண்ணனைத் தொழுதனன். சிறிது நேரமும் அங்கு நில்லாது போருக்கென்று விரைந்தெழுந்தான்.

## சிங்கன் போர்

நீண்டநேரம் நியாயமான சண்டை செய்தனன். முற்காலத்தில் நடந்த நியாயச் சண்டையை ஓர் உதாரணத்திற் காணலாம்.

போர்க்களம் ஒன்று. இருவர் சண்டை செய்தனர். இரண்டு வீரரும் தேரின் மீதிருந்தனர். ஒருவன் தேர் அழிந்தது. அதனைக் கண்ட மற்றவன் இதுவே தக்க சமயம் என்று அவனைக் கொல்லவில்லை. தானும் தேரினின்று இறங்கி அவனுடன் பொருதான். இங்ஙனம் போர் புரிந்ததாக நைடதத்தில் கூறப்பட் டிருக்கின்றது.

இம்முறையே, ஒழுங்கான நெறியில் சிங்கன் பொருதான். முருகன் திருவருளை நன்முக உணர்ந்த இவன் தன்

உடன் பிறந்த பதுமனுக்குச் சொல்லிய வாக்கின்வழி நின்று சண்டை செய்தான்.

முற்பட்டு முதலில் போர் செய்தவர் வீரவாகு. அவர் சிறிது இளைத்தார். அறிந்தனன் முருகன். அவர்தம் இளைப்பை நீக்குதற்கு முற்படுகின்றான். அவ்வாறு முருகன் வந்தான் என்று கூறும் செய்யுளைப் படித்து மேற்செல்லுகின்றேன்.

மூவர்கள் முதல்வன் வந்தான் முக்கணன் குமரன் வந்தான்
மேவலர் மடங்கல் வந்தான் வேற்படை வீரன் வந்தான்
ஏவரும் தெரிதல் தேற்றா திருந்திடு மொருவன் வந்தான்
தேவர்கள் தேவன் வந்தான் என்றன சின்ன மெல்லாம்.

முருகனுக்கும் சிங்கனுக்கும் போர் நடந்தது. இவன் இன்ன அம்பினை விடுத்தான்; அவன் அதனை இன்ன அம்பினால் கண்டித்தான் என்று நீளச் சொல்லாது போரின் முடிவிற்கு வருகின்றேன். சிங்கனுடைய ஆயிரம் தலைகளையும் வெட்டித் தள்ளினன் முருகன். வெட்ட வெட்ட அத்தலைகள் மேலும் மேலும் முளைத்தன. கண்டனன் கடவுள். இனி இவை முளைத்தலாகாது என எண்ணினான். அவ்வளவே தலைகளும் கரங்களும் மீள முளைக்கவில்லை.

அற்ப பணம் படைத்தவரைக் காணும் சிலர் 'நீங்கள் நினைத்தாலும் போதும். ஒரு வார்த்தை சொன்னால் அக் காரியம் எவ்வாறேனும் முடிவு பெறும்' என்கின்றார்கள். அழியும் மக்களுக்கு இத்தகைய ஆற்றல் எனின் என்றும் வாழும் இறை எண்ணின் நடக்காதது எது? அன்பர்களே! எண்ணிப் பாருங்கள்.

## சிங்கன் முருகன் அருள் பெறல்

ஒரு தலை இரு கரங்களுடன் மன உறுதியுடன் சிங்கன் நிற்கின்றான். தன் மூத்தோனுக்குத் தான் சொல்லி வந்த உரையினின்றும் வழுவலாகாது என்ற ஒரே எண்ணம் அவனுள்ளத்தில் இருக்கின்றது. முருகனை நோக்கி, 'ஐய! நின் கை வேலொன்றால் வெல்லுவாய் போலும். வேறு படைகளில்லையோ?' என்று சொல்லித், தன் கையிலிருந்த தண்டத்தை முருகன்மேல் எறிந்தான். கண்டனன் முருகன். சிங்கன் எண்ணத்தைக் கருத்துட் கொண்டனன். குலிசத்தை நோக்கி, 'இவனுயிர் பருகி வருக' என்றேவினன்.

விடுத்திடு குலிசமேகி விரைந்தெதிர் தண்டந் தன்னைப்
பொடித்தது போலு மென்னப் பூழிசெய் தடுக்கல் செல்லும்
இடித்தொகை என்ன மார்பத் தெய்தியே அவுணனாவி
குடித்தது புறத்தச் செந்நீர் கொப்புளித் தேகிற் றன்றே.

சிங்கன் இறந்தானா? இல்லை. ஆறுமுகங்களுடனும் பன்னிரு கருணை விழிகளுடனும் தன் முன்னிற்கும் முருகனைக் காண்கின்றான். அவன் செய்த தவந்தான் என்னே! முருகனைக் கண்ட அவன் அவனுடன் ஒன்று கலந்தான்.

முடிவுரை

மரண வேளையில் இறைவன் எதிர்ப்படல் வேண்டும். திருநாவுக்கரசு நாயனார் தேவாரத்தைச் சிந்தியுங்கள்.

அங்கத்தை மண்ணுக் காக்கி ஆர்வத்தை உனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன் பரமா உன்னைச்
சங்கொத்த மேனிச் செல்வா சாதல்நாள் நாயேன் உன்னை
எங்குற்றாய் என்ற போதால் இங்குற்றேன் என்கண் டாயே.

மெய்ப்பொருள் நாயனார் சரித்திரத்திலும் இவ்வுண்மை வெளியாகின்றது. முடிவாக நாம் அறியத்தக்கது யாது?

நின்று மிருந்தும் கிடந்தும் நடந்தும்நினை
என்றும் சிவன்றா ளிணை.

சிங்கமுகன் இறவாத இன்ப வெள்ளத் தழுந்தினான்.

நாளைய தினமே முக்கிய நாள். அன்பர்கள் யாவரும் வந்து கேட்பார்களாக.

நாரணன் என்னும் தேவும் நான்முகத் தவனும் முக்கண்
பூரணன் தானு மாகிப் புவிபடைத் தளித்து மாற்றி
ஆரண முடிவும் தேறா அநாதியாய் உயிர்கட் கெல்லாம்
காரண னாய மேலோன் கழலிணை கருத்துள் வைப்பாம்.

# ரு. சூரபதுமன்

மெய்யன்பர்களே !

இன்றைக்குப் பேச முன்னிற்கும் பொருள் 'சூரபதுமன்' என்பது. இதனைக் குறைவின்றிப் பேசிமுடிக்க முருகன் அருள் முன்னிற்கும் என நம்புகின்றேன்.

## கடவுளுணர்ச்சி

உயிர்த் தொகைகள் பல உலகில் காணப்படுகின்றன. விலங்குகள் பறவைகள் முதலிய பிறவற்றினும் மக்களாகிய நம்பால் உயர்ந்ததொன்றுண்டு. பசி, காமம் முதலிய எவையும் யாவருக்கும் ஒத்திருக்கின்றன. ஆயினும், கடவுளுண்டு என்ற கடவுளுணர்ச்சி மக்களுக்கே உள்ள சிறப்புடைய குணம் ஆகும். அவ் வுணர்ச்சி இருந்தால் மட்டுமே நாம் மக்களாவோம். இன்றேல், மக்களுருவில் காணப்படும் மற்றொன்று என்றே உறுதிகொள்ள வேண்டும்.

## கடவுள் ஒருவனே

துறந்தோர் பலருள் சிறந்த பெரியார் பட்டினத்தடிகள். அன்னவர் தம் மனத்திற்குச் சிறந்ததோர் உபதேசம் செய்தனர். அவ்வுபதேசம் யாவரும் கைக் கொள்ளுதற்குரிய மிக உயர்ந்த தொன்றாகும். என்ன அது ?

" ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு......மனமே
உனக்குப தேசமிதே"—

'தெய்வம் ஒன்றே. அத் தெய்வம் உண்டு. இவ்வுண்மையை உணர்ந்திரு' என்றார்.

சிலர் பல தெய்வம் உண்டு என்ற எண்ணத்தினராயினர்; ஆதலின், தம்முள் சண்டையை மிகுதியும் கொண்டனர். தெய்வச் சண்டை சில்லாண்டுகளின் முன்னர் மிகுதியாக இருந்தது. இந்நாளில் அவற்றைக் காண்கின்றோமில்லை.

அதற்குக் காரணம் கடவுளுணர்ச்சி குறைவு என்று கொள்ள வேண்டும்.

வைதிக மதத்தில் பல தெய்வங்கள் இருக்கின்றன என்று புற மதத்தார் கூறுவர். திருமால், சிவன், கணபதி, சக்தி, முருகன், சூரியன் என்று பல கடவுளரைக் காட்டி வைஷ்ணவம், சைவம், காணுபத்தியம், சாக்தேயம், கௌமாரம், சௌரவம் என்று மதங்களின் பெயரை அடுக்குவர்.

இதனுண்மையை இனிக் காண்போம். தெய்வம் ஒன்றே என்பதும், இரண்டாவதில்லை என்பதும் மனத்தை உறுதிப்படுத்துகின்றன. இவ்வெண்ணமே சிறந்த எண்ணமாகும். முற்கூறிய பட்டினத்தடிகளின் பாட்டில் இரண்டாவது தெய்வம் இல்லை என்ற ஒன்று சொல்லப்படவில்லை என்று சிலர் கருதலாம்.

மக்கள் மூவகையினர். உயர்ந்தோர், கூறியதை ஒத்துக்கொள்வர். இடைப்பட்ட தகுதி யுடையோர், 'அப்படியா?' என்று வினவுவர். இழிந்தோர், 'வேருக இருக்கலாகாதோ?' என்பர். வேதம் இம் மூவகையினரையும் அறிந்தது. முதல் வகையினருக்குக் கடவுள் (ஏகம்) 'ஒன்று' என்றது. இரண்டாம் வகையினருக்கு (ஏவா) 'ஒன்றே' என்றது. மூன்றும் வகையினருக்கு, (அதுதீயம் பிரம்மம்) 'கடவுள் இரண்டாவது இல்லை' என்றது.

முன்னர்ச் சிவன் முதலாகப் பலரைக் கூறினீர்களே? எனின், ஆம். தெய்வம் ஒன்றுதான். அக் கடவுள் அவரவர் பக்குவத்திற்கேற்பப் பெயர் உருவம் தொழில் முதலியவற்றைக் கொண்டான். 'ஒருவனுகவே இருந்தால் என்ன?' என்று சில அன்பர்கள் கேட்கலாம்.

## சிறு கதை

ஒரு சிறு கதை சொல்லுகின்றேன். இராமன் என்னொருவனிருந்தான். அவனுக்கு ஆற்றருகில் ¾ காணி நிலம் இருந்தது. பயிரிட்டான். நான்கு அங்குல அளவிற்குப் பயிர் வளர்ந்திருந்தது. மழை இல்லை. இந்திரன் மகிழ்ந்தான். அளவில்லா மழை பெய்தது. பெருவெள்ளம் வந்தது. ஆற்றில் வெள்ளம் நிறைந்தது. இராமன் நிலத்திலும் நீர் பாய்ந்தது. வெள்ளம் மேலும் மிகுந்தது. பயிர் முழுவதும் மூடப்பட்டது. வெள்ளம் வடிந்தது. நிலமிருந்த இடமே

தெரியவில்லை. ஏன்? மணல் மூடிவிட்டது. ஆற்றிலிருந்த நீர் நேரே பாய்ந்ததால் உண்டாகிய கெடுதி இது. அங்ஙன மின்றி, வெள்ளத்தை அணைகோலித் தடுத்துப் பெருவாய்க் காலிற் செலுத்திப் பின்னர்ச் சிறுவாய்க்கால், கன்னி வாய்க் கால், மடை இவற்றின் வழிச் செலுத்தியிருந்தால் பயிரும் கெட்டிராது, நிலமுடையானுக்கு இழப்பும் நேர்ந்திராது. அன்பர்கள் இதனைக் கவனிக்க.

ஒரே கடவுள்; அக்கருத்தில் எவ்வித ஐயமும் வேண்டா. சிறு நிலம் பெரு வெள்ளத்தால் பயனின்றி அழிந்தது; அவ் வாறு அவனை அளவின்றிப் பரந்த நிலையில் வழிபடல் எளி தன்று. அவ் வழிபாடு பயனின்றி ஒழியும். பல உருவத் தில் பல பெயரில் வழிபடின் பலனுண்டு; பயனுமுண்டு.

சமரச உணர்ச்சி மிக்க இக்காலத்தில் இவ்வுண்மை மிக நன்றாக அறியப்படுகின்றது. தென்மொழி வடமொழி எனும் இரு மொழியிலும் வன்மையுடையவரும் இலக்கண இலக்கிய வல்லுநருமாகிய சிவஞான சுவாமிகள் காஞ்சிப் புராணத்தில் இக் கருத்தினை அழகுற விளக்கிப் போந்தார். 'ஒருவனாகிய இறைபரம்பொருள் உலகு தழைத்தற்காகப் பல உருவம் பல பெயர் கொண்டதேபோல் மருத நிலம் பண்பட்டுச் சிறப்படைய பாலி என்ற ஓர் ஆறே வாய்க் கால் முதலிய பல பெயரையும் உருவத்தையும் ஏற்றது' என்றனர் சுவாமிகள்.

ஒருவ னாகிய சிவபிரான் உலகுயிர் தழைப்பக்
கருவணை கூர்ந்திமுன் னவந்தரு பேதமும் காட்டும்
திருநி கர்ப்பஒர் பாலியே வயல்வளம் செழிப்பப்
பெருகு தண்புனல் பற்பல கால்களாய்ப் பிரியும்.

மரம் ஒன்று. அதன்கண் தோன்றுவன அரும்பு, பூ, காய், கனி முதலிய பல பிரிவினைப் பெற்றிருக்கின்றன. அங்ஙனமே ஒரே பிரம்மத்தி னிடமிருந்து பல உருவங்கள் தோன்றின என்க.

## போக மோட்ச பிரதாயன்

ஆறு சமயக் கடவுளும் வேறல்லர்; ஒருவரே. குறைந்த அறிவிலே போகத்தையும், நிறைந்த அறிவிலே வீட்டை யும் அக் கடவுள் தருகின்றது. இரண்டையும் ஒருவனே தருகின்றான். நடுநிலைமையிலிருப்பவள் தாய். அவள்

பிறந்த குழந்தைக்குப் பால் தருகின்றாள். அவளே வளர்ந்த இளைஞனுக்குச் சற்றுக் கடினமாகச் செரிக்கத்தக்க ரவா லட்டு தருகின்றாள். அவ்வாறே நடுநிலைமையில் எப்போது மிருக்கும் இறைவன் அவரவர் தகுதிக்கேற்ப வேண்டிய வற்றை உதவுகின்றான். அவன் தரும் ஒவ்வொன்றும் பேரின்பத்தையே குறிக்கோளாகக் கொண்டு விளங்கு கின்றது. நிறைந்ததும் சுத்தமானதுமாக இருப்பது பேரின்பமே. இருவகை இன்பத்தையும் உதவும் அவனைப் **போக மோட்ச பிரதாயன்** என்றனர்.

## ஆறு சமயக் கடவுள்

போகத்தையும் வீட்டையும் உதவும் வள்ளல் அவன் ஒருவனே. அவன் ஒருவனே சிவன் முதலாகிய ஆறுருவங் களையும் கொண்டவன். அவனொருவனே ஆறு மதங்களுக் கும் தலைவனாக வீற்றிருக்கின்றான்.

இவ் வுண்மைக் கிருப்பிடமாக ஆறுமுகன் ஆறுமுகங் களும் இருக்கின்றன. முகம் எனினும் வதனம் எனினும் ஒன்றே. வது என்ற தாது, பேசுதல் எனும் பொருள்படும். ஆறுமுகன் தன் ஆறுமுகங்கள் மூலமாகவும் "யான் ஒருவனே ஆறு சமயங்கள் தொறும் எழுந்தருளுகின்றேன். யான் ஒருவனே அங்கங்கிருந்து என்னை வணங்கும் அன்ப ருக்கு முத்தி தருகின்றேன்" என்று கூறுகின்றான்.

"ஆறுசமயந்தோறும் வேறுவேறின்றியான் ஒருவனே
அங்கங்கிருந்து அன்பருக்கு முத்திதருவித்தேன்று
அறிவித்த வதன மணியே"

முருகன் சமஷ்டித் தெய்வம் (கூட்டுத் தெய்வம்); ஆறு கடவுளரும் தானே என்னும் சீரியல்பை அறிவிப்பன; ஆறு முகங்களும். வியஷ்டியாகப் (தனியாகப்) பார்க்கும்போது, சிவன் முதலிய வேறுபாடுகள் தோன்றும்.

## அன்பு

வதனமணி முத்தியை யாருக்குத் தருவான்? அவன், இன்ன தேசத்துப் பிறந்தானிவன்; இன்ன குலத்தில் பிறந் தானிவன்; இன்ன காலத்து வாழ்ந்தானிவன்; இன்ன ஆச்சிரமத்தைக் கைக்கொண்டவனிவன் என்றெல்லாம் நோக்கமாட்டான். தேசம் முதலியன அவனுக்கில்லை. யாரே

ஆயினும் அன்பு செய்வார்க்கு வீட்டின்பத்தைத் தருகின்ருன். அவன் நம்மிடம் எதிர்பார்ப்பது இவ்வன்பு ஒன்றே; வேறேதுமில்லை.

இடையே சிறு விஷயம் ஒன்று சொல்ல விரும்புகின்றேன். கடவுள் அன்பரிடம் மனித உருவில் எதற்கு வருகின்ருர்? வருதற்கு அவருக்கு என்ன வேலை?

"பக்திப்பிச்சை கொண்டு எத்திற வினையுமின்றி இருப்பர்"
—பிரபுலிங்கலீலை

அவர் பக்தியாகிய பிச்சையைக் கொள்வர். அதற்கென்றே அவர் மக்கள் நடுவில் வருகின்ருர். மற்ருெரு பொருள்: "பக்தியொடு கூடிய பிச்சையைக்கொண்டு" ஆதலின் அன்பில் கட்டுப்படுபவன் எம்பிரான் ஆவான்.

## முருகனின் கருணை

முருகன் கலியுக தெய்வமாவன். தனக்குப் பெருந்தீமை செய்தவனுயினும் அவன், அன்பனுயின் அருள் செய்குவான். திட்டினும் மகிழ்கின்ருன். ஏன்? 'நம்மை ஆதாரமாகக் கொண்டு தானே திட்டுகின்ருன்' என்பது அவன் எண்ணம்.

'முத்தமிழால் வைதாரையும் அங்குவாழ வைப்போன்'

முருகன் தயவுக்கு அளவே இல்லை. பிறர் துன்புறச் சகியான். பிறர் என்பது மிகுதியும் அன்பர்களைக் கருக்கொண்டு நிற்கின்றது. அன்பர்களிடத்தில் தானே செல்வான். அறியாத அவர் 'நீ யார்?' என்ருல் தன்னையும் அறிவிப்பான். 'நின் துன்பத்தைக் களைதற்கே வந்தேன். விரைவில் உன் துன்பங்கள் நீங்கும்' என ஆறுதல் கூறுவான். இதற்கு வேறு சான்றுகள் வேண்டா. சயந்தன் கதை ஒன்றே சாலும்.

இந்திரன் மகன் சயந்தன் முருகனை அறியாதவன்: வீர மகேந்திரத்தில் சூரபதுமனுல் சிறை செய்யப்பட்டிருந்தான். அவன்பால் முருகன் சென்ருன். அறியாத அவன், 'யார் நீ?' என்ருன். தன்னையும் அறிவித்து இனி அவன் துயர் நீங்கும் என உறுதியும் கூறி அவனை மகிழ்வித்தான் நம் முருகன்.

இத்தகைய முருகன் அருளுக்குமோர் எல்லை உண்டோ? தீமையைப் பொருட்படுத்த மாட்டான்; பக்திக்கே மகிழ் வான். இவ்வாறு சொல்லும்போது எனக்கு ஐயம் உண்டா கின்றது. கொடுமையிலேயே கருத்தூன்றும் மக்கள் நான் சொல்லி வந்த இதனை ஆதாரமாகக் கொள்ளற்க. சொல்லி வந்த இக் குணச் சிறப்பை இனி முருகன்பால் காண்போம்.

கலியுக தெய்வம் கந்தன். கலியுகத்தில் வரம் கொடுக்க வந்தவன் முருகன். வேறு எவரேனும் உளர் எனின் அவர் களுக்கும் இவனுக்கும் உள்ள வேறுபாட்டைப் புலப்படுத்தக் 'கலியின் கல்மஷத்தைப் போக்குதலில் சமானமில்லாதவர்' என்று வடமொழிக் காந்தம் சனற்குமார சம்மிதையில் முதல் சருக்கத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது.

## போர்ச் சுருக்கம்

முருகன், தேய்பிறையில் 4 நாட்களும் வளர்பிறையில் 5 நாட்களுமாக நேற்றுவரை போர்புரிந்தான். யாவரும் அழிந்தனர். பதுமன் ஒருவனே நின்றனன். உலக அனுட் டானத்தில் நேற்றுவரை சிங்கமுகன் அழிவு கொள்ளப்படு கின்றது. உண்மை வரலாற்றுவழி வளர்பிறை 2-ம் நாளி லேயே சிங்கனழிவுண்ண மற்றை நான்கு நாட்களிலும் ஒழி வின்றி இரவு பகலாகப் பதுமனுடன் போர் நடக்கின்றது.

## சூரனும் எண்ணத்தக்கவன்

சூரன் யார்? இதற்கு விடை கூறும்முன் உங்கள் நினை வுக்கு மற்றொன்றைக் கொண்டுவர விழைகின்றேன். ஸ்மிருதியில் ஆன்மிகக் காண்டத்தில் சொல்லப்பட்டுள்ள வற்றை இங்குக் கூறுகின்றேன். விடியற்காலத்தில் எழுந்த வுடன் உடற்சுத்தி செய்தல் வேண்டும். பின்னர்க் கடவுளை நினைக்க வேண்டும். அதன் பின்னர் ஆண்கள் பெண்களுள் நல்லோரை நினைத்தல் வேண்டும். எண்ணத்தின் வன்மை யால் அவர் குணம் செயல் நம்பால் வரும். அங்ஙனம் அவருடைய குணம் செயல் வர வர நம்பாலுள்ள தீயன ஒழியும். நல்லன நிறையும். அவ்வழியே சூரபதுமனும் எண்ணத்தக்கவன்.

## பதுமன்

பதுமன், காசிபன் என்ற முனிவனுக்கும் மாயை என் போளுக்கும் பிறந்தவன். இறைவனை எண்ணி மிக அருமை

யானதும் மிகமிகக் கடினமானதுமான தவத்தைச் செய்தான். இறைவன் தோன்றினான். தீய எண்ணமே உள்ளத்தில் நிறைந்து நிற்க வரங்களைக் கேட்டான். பிறரைத் துன்புறுத்தவே வரம் கேட்டனன். படிப்பறிவுடைய தீயோர் பலர் நல்லவரைப்போல் நடக்கின்றார்களல்லவா? அங்ஙனம் பதுமன், 'யாவரினும் மேலாக யான் இருத்தல் வேண்டும்' என்ற வரத்தினைக் கேட்டான்.

சிவபெருமானைச் சிலர் 'ஏமாந்தவன் ஆதலின், யார் எதனைக் கேட்பினும் கொடுத்துவிடுவான்' என்று தம்மறியாமை வெளிப்படக் கூறுகின்றார். அவர்கள் சொல்லும் அச்சொல்லின் பொருளைக் காணுங்கள். ஏம் எனின் இன்பம் என்று பொருள்படும். மாந்தவன் எனின் நிறைந்தவன் என்று ஆகும். ஆகவே இன்ப உருவினன் அவன் என்பது பெறப்பட்டது. அவனுக்குள்ள மற்றொரு பெயர் 'சுவாமி' என்பது. ஸ்வம் என்றால் சொத்து என்று பொருள்படும். சொத்துடையான் என்பதே அச் சொல் குறிக்கும் பொருள். இன்ப உருவினனாகிய அவன் எல்லாவற்றையும் சொத்தாகக் கொண்டிருக்கின்றான். அவன், தலைவன்; பிற உயிர் முதலிய யாவும் அவன் அடிமைகள். இந் நிலையிலுள்ள அவன் வரம் தருதலிலுள்ள தடை என்ன இருக்கின்றது? வரம் தந்தனன்.

'வரங்களைப் பெற்றுத் தேவருக்குத்தானே கெடுதி செய்தான்! இதனைச் சிவபெருமான் அறியவில்லையோ?' என்று சிலர் நுழைந்து கேள்வி கேட்பர். பெருமானும் பின்னர் நிகழ்வதை எண்ணித்தான் வரம் கொடுத்தான். பதுமன் உள்ளத்தை அறியாதவன் கடவுளல்லன். அவனே இறைவன்; இறைவன் என்ற சொல்லுக்கு எங்குமிருப்பவன் என்பது பொருள். அத்தகையோன் அசுரன் உள்ளத்துள்ளிருந்ததை அறியாதிருக்கவில்லை. தக்க யாகத்தில் நுழைந்து சிவத் துரோகிகளாகச் சுரர்கள் ஆயினர். அப் பாவம் ஒழியும் காலம் நெருங்கியது. அதனைப் போக்கும் கருவியாக அசுரன் வரம் அமைந்தது. ஆதலின், யாவும் அறிந்த பரமன் வரங்களைத் தந்தனன்.

அரக்கனின் கொடுமை உச்ச நிலை அடைந்தது. சுரர் பாவம் தேய்ந்தது. ஆதலின் முருகன் தோன்றினன். தாருகனை அழித்தனன். திருச்செந்தூர் சேர்ந்தனன். யாவருமழிந்

தனர். பதுமனே மிகுந்தனன். அன்னவனும் போர்க்களத்தில் போர் செய்கின்றான். அவன் நேர் தம்பியாகிய சிங்கன் வரை யாவருமழிந்தது அவன் கருத்திலில்லை. 'இவர்கள் அழிந்தனரே. இவர்கள் அழிந்தவாறே யானும் அழிய வேண்டியவன்தானே' என்று இறந்தாரைக்கொண்டு இனித் தனக்குண்டாகும் கதியில் அவன் அறிவு செல்லவில்லை. நல்லெண்ணங்களே தோன்றவில்லை. முருகனைக் கொல்லவே முனைகின்றான். அவன் அறியாமையை என்னென்பது !

செம்மான் மகளைத் திருடும் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்

என்பது அநுபவ வாக்கு. இவ்வநுபவம் அசுரனுக்கேது ?

## சண்டை

எங்கும் சண்டை நடந்தது. இக்காலப் போர் அப்போரை ஒரு சிறு அளவில் உண்மையாக்குகின்றது. சண்டை நடந்த இடங்களெவை ? சண்டை தண்ணீரின்கீழ், மேல், விண்ணில், நிலத்தின்மேல் நடந்தது. இவ்வளவோ ? ஓரண்டத்தை விடுத்துப் பிற அண்டங்களிலும் சென்று போரிட்டனர். பதுமன் தாய் மாயை. அவன் மாயையின் மகன்; செய்யமுடியாத காரியத்தை எல்லாம் செய்யும் சக்தி மாயைக்கு உண்டு. ஆதலின் அவன் போகாத இடமில்லை. நடந்த போர் மிகப் பயங்கரமானது. இடையிடையே தேவரும் அஞ்சினர்; வருந்தினர். முருகன் ஆற்றலை ஒருவாறு உணர்ந்த திருமால் முதலியோர் அவர்களைத் தேற்றினர். சண்டையை அழகாகக் கூறலாம். ஆனால் அங்கே நான் நுழையவில்லை. சூரனைப்பற்றி நினைவில் கொள்ளவேண்டியதைமட்டும் சொல்லுகின்றேன்.

## முருகன் பேருருவம்

சட்டி நாள். மாலை 5 மணி. அசுரன் தன்னாற்றல் அழிந்து அலுத்து நிற்கின்றான். ஆயினும் மாற்றானைக் கொல்லவேண்டும் என்ற எண்ணம் மட்டும் அலுக்கவில்லை. முருகன் தயவினை எண்ணுங்கள். தன்னைக் கொல்லுதற்கு எத்தகைய செயலையும் செய்யத் துணிந்து நிற்கும் அசுரனிடத்திலும் கருணை காட்டுகின்றான். "நம் வடிவை

நோக்கித் தவறான எண்ணங்களைக் கொண்டிருக்கின்றான். ஆதலின் உண்மையை உணர்த்துவோம். பின்னர்ப் புத்தி வரும்" என்று நினைத்துத் தன் விசுவரூபத்தைக் காட்டுகின்றார்.

பிருதிவி முதலாகிய தத்துவங்களால் ஆகிய அண்டங்கள் எண்ணில்லாதன பேருருவத்துடன் தோன்றிய முருகன் உடலில் காணப்பட்டன. இவற்றைக் காண்பித்த முருகன் எண்ணம், அசுரனுக்குத் தன் சாமர்த்தியத்தைக் காண்பித்தலன்று; உண்மையை அறிவித்துத் தனக்குக் கேடு சூழும் அசுரனைக் கடைத் தேற்றுதலேயாகும்.

முருகனுக்குத் தந்தையாகிய சிவபெருமானுக்கும் இந் நற்குணம் உண்டு. 'மகனறிவு தந்தை யறிவு' என்பது உண்மை வாக்கு. சிவபிரான், புலவனேபோல் மதுரைச் சங்கத்தில் சென்று நின்று 'என் செய்யுட்குக் குற்றம் கூறியவன் யாவன்?' என்றான். 'நானே, நின் செய்யுள் பொருட் குற்றம் உடைத்து என்றனன்' எனத் தன் முனைப்பால் கூறினான் கீரன். அன்னவன், உண்மை உணர்ந்து அறிவு பெற வேண்டுமென்று இவன் தன் நுதல்விழியினைச் சிறிதே காட்டினன். அவ்வாறே தந்தையைப்போல் மகனும் போர்க்களத்தில் அறியாமையால் மூடுண்ட அவுணன் உணருமாறு தன் உருவைக் காட்டுகின்றான்.

வேதம் ஆண்டவனை எப்படிப்பட்டவன்? என்றது. 'அணுவினுள் அணுவாய் அண்டத்திற்கு அண்டமாய் இருப்பவன்' என்று கூறிற்று. இக் கருத்தே,

அண்டங்க ளெல்லாம் அணுக்களாக அணுக்களெல்லாம்
அண்டங்க ளாகப் பெரிதாய்ச் சிறிதாயி னானும்

—பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல்.

இது வேதக் கருத்து.

அசுரன் ஆண்டவை 1008 அண்டங்கள். அவை பிருதிவி அண்டங்களுள் வெகு சிலவே. இவற்றைக் காட்டினும் எண்ணில்லாத வேறு பல அண்டங்கள் காட்சி அளிக்கின்றன. விசுவரூபத்தைமட்டும் முருகன் காட்டினானில்லை. அவ்வுருவத்தைக் காணும் சக்தியையும் அசுரனுக்குச் சிறிது அருள்கின்றான். அவன் தயவினை எவ்வாறு புகழ்வது!

## காணும் உபகாரம், காட்டும் உபகாரம்

கடவுள் இரண்டுவகை உபகாரங்கள் செய்கின்முர். ஒன்று காட்டுதல்; மற்ருென்று தானும் காணுதல். இதனை இன்னும் தெளிவாகக் கூறுகின்றேன்.

என்முன் இவ்விளக்கு இருக்கின்றது. இவ்விளக்கே எனக்குப் பார்த்தலில் முழுத்துணையாக இருக்கின்றது. சிலர் கண்ணே பார்க்கின்றது என்று கருதலாம். இல்லை. கண்ணுக்குப் பார்க்கும் சக்தியைத் தருவது விளக்கு. அடுத்துக் கண், விளக்கு பார்க்கும் அளவே பார்க்கும். தனக்கெனப் பார்க்கும் சக்தி இருப்பின் விளக்கொளி செல்லா இடத்தில் கண்ணொளி செல்லவேண்டும். கண் பார்ப்பதாயின் இச் சுவருக்கு அப்பால் இருக்கும் பொருளைக் கண் பார்க்க வேண்டும். ஆனால், கண் பார்க்கின்றதா? இல்லை. ஏன்? விளக்கொளி அச் சுவருக்கப்பால் செல்லவில்லை. சென்றிருப்பின் கண்ணும் காணும். ஆதலின், விளக்குத் தானும் காண வேண்டி இருக்கின்றது. விளக்கு காண்பதனையே நாமும் காண்கின்ருேம். ஆகவே விளக்கு இருவகையில் உதவி புரிகின்றது. ஒன்று காட்டுதல்; மற்ருென்று காணுதல்.

கடவுள் நிலையும் இப்படியே. நமக்குப் பார்க்கும் சக்தியை இறைவன் தருவது **காட்டும் உபகாரம்** எனப்படும். உடனிருந்து தானும் காண்பது **காணும் உபகாரம்** என்று சொல்லப்படும். இவ்வுண்மையை அறிவிக்கவே கோயிலில் உண்ணச் செய்கின்றனர். **திருவிசைப்பாவில் திருமாளிகைத்தேவர்** "தொண்டனேன் நுகருமா றுகரே" என்று இவ்வுண்மையை விளக்கிஞர். ஒரு சான்று போதாது. "தொண்டனேன் விளம்புமா விளம்பே" என்று அவர் மீண்டும் கூறுகின்முர். 'நான் உண்ணவேண்டும் அதற்காக நீ உண்' என்பது முன்னதன் பொருள். 'நான் பேச வேண்டும், அதற்காக நீ சிறிது பேசு' என்பது பின்னதன் பொருள். நாம் கண்ணை ஒத்திருக்கின்ருேம். கடவுள் விளக்கினை ஒத்திருக்கின்முன். விளக்குத் தான் காட்டுமளவும் கண் காண்பதுபோல இறைவன் தான் உணர்த்துமளவும் உயிர்களாகிய நாம் உணர்கின்ருேம். விளக்குத் தானும் காண்பதுபோல கடவுள் தானும் உணர்கின்முன்.

## பதுமன் நிலை

நிற்க, முருகன் காட்டிய விசுவரூபத்தில் அசுரனுள்ளம் இயைந்தது. சூரன் தன்னை மறந்தான். தான் செய்துகொண்டிருந்த போரினை மறந்தான். இறந்த மகனை மறந்தான். உயிர்விட்ட சோதரர்களை மறந்தான். தன் மக்களையும் மந்திரிகளையும் உடன் பிறந்தோரையும் கொன்றவன் தன் முன்னிற்பவன் என்பதையும் மறந்தான். பகைவரியல்பு என்ன? கார்காலத்தில் மாங்காய் கிடைத்தல் அருமை; அக் காயினை விரும்புவோர் இலைகளைத் தள்ளித் தள்ளித் தேடுவர். அவ்வாறே பகைவன் என்போன் தன் மாற்றலனுடைய குற்றங்களைத் தேடித் தேடி எடுத்துரைப்போன். அந்நிலையிலுள்ள பதுமன் சொல்லியவற்றைக் கவனித்தல் நம் கடமையுமாகும். பகைவன் சொன்ன குணமும் நட்புடையோன் சொன்ன குற்றமும் ஒத்துக்கொள்ளத்தக்கன. நட்பினன் கூறும் இன்னுரை இன்னு உரையே.

## பதுமன் மெய்யுரை

பதுமன் கூறினன் பல. ஒன்றினையே சொல்லுதற்கு முற்படுகின்றேன்.

கோலமா மஞ்ஞை தன்னிற் குலவிய குமரன் தன்னைப்
பாலனென் றிருந்தே னந்நாட் பரிசிவை உணர்ந்தி லேன்யான்
மாலயன் தனக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற மூர்த்திஇம் மூர்த்தி யன்றே.

'இம் மூர்த்தியன்றே' என்கின்றனன் அவுணன். 'இ' எனும் சுட்டு அருகிலுள்ளாரைக் குறிக்கும்; சண்டையில் அசுரனும் முருகனும் மிக நெருங்கி இருக்கின்றார்கள் என்பதை அறிவிக்கின்றது. மேலும் அவுணன் ஆண்டவனை நன்றாகக் காண்கின்றான் என்பதையும் அறிவிக்கின்றது.

## மூர்த்தி

'மூர்த்தி' என்ற சொல்லுக்கு வடிவத்தை உடையவன் என்பது பொருள். (மூர்த்தம்=வடிவம்) வடிவம் இல்லா ஆண்டவன் என்னைக் காப்பாற்ற இவ்வடிவத்தைக் கொண்டான் என்றுணர்ந்து கூறுகின்றான்.

## கோலமா

முருகன் எவ்வாறிருக்கின்றான்? நம் மக்கள் சமய அறிவு குறைந்திருக்கின்றார்கள். எக்காலத்திலும் பிறரைக் குறைகூற யான் பின்வாங்குவேன். ஆனால், சைவத்தைப் பற்றிக் குறைகூறுதற்கு எனக்கு உரிமையுண்டு. விபரீதமாக அறிதல் மிகக்கொடிது; அதனினும் அறியாதிருத்தலே நன்று போலும்! சண்டைக்கு முருகன் கடாவில் வந்தனன் என்கின்றனர். அவ்வாறே திருவிழாக்காலங்களிலும் கொள்கின்றனர். எடுத்துக் கூறினாலும், 'சண்டைக்கு வரும்போது மயில் ஏது?' என்பர். இந்திரன், போர் நடந்தபோது முருகனை மயிலாகத் தாங்கிக்கொண்டிருந்தான். பதுமன் சக்கரவாளம் என்ற பெரிய பாம்புருவங்கொண்டு முருகனை விழுங்க வந்தான். அக்காலத்தில் இறைவன் இந்திரன் மயிலாகத் தன்னைத் தாங்கவேண்டும் என்று எண்ணினான். அவ்வளவில் இந்திரன் மயிலானான். மயில் பாம்புக்குப் பகை. மயிலினைக் காணும் பாம்பு தன் தலையைத் தொங்கவிடும். அசுரனாகிய பாம்பை அடக்க இந்திரனாகிய மயிலைக்கொண்டான் வேலன். போர் முடிவுவரை இம் மயில்மீதே முருகன் இருந்தான். ஆதலின் முருகனை மயிலின்மீது அரக்கன் காண்கின்றான்.

**மா** மஞ்ஞை: மா=கருமை: மயிலில் கருநிறம் மிகுதியாகவும் பிறநிறம் குறைவாகவும் இருக்கின்றது. தண்ணீரில் ஏழுவகைச் சிறப்பு நிறங்களிருந்தாலும் கருமை நிறமே வெளிப்படையாகத் தெரிகின்றது. அவ்வாறே மயிலும்.

மா=பெருமை. முருகன் தன்மீதிருக்கும் பெருமையைக் கொள்ள இந்திரன் கொண்ட உருவம் என்க.

> சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணும்
> மாயிருந் தூவி மயிலலங் கடையே

எனும் தொல்காப்பிய **மரபியல்** 48-ம் சூத்திரத்திற்கு உரை எழுதிய **நச்சினார்க்கினியர்**, சேவல் எனும் பெயர் பறப்பனவற்றுள் ஆண்பாற்கெல்லாம் உரித்து; அவற்றுள் மயிலுக்கு ஆயின் அஃதாகாது, என்று சூத்திரத்தின் வழியே பொருள்கூறி இறுதியில், 'செவ்வேள் ஊர்ந்த மயிற்காயின் அதுவும் நேரவும் படும்' என்றார். ஆதலின், எல்லாவகைத் தனிப் பெருமையையும் உடைய மயில் **மா** மயில் என்க.

கோலம் என்றால் மிகுந்த அழகு என்பது பொருள் கார்காலத்தில் தோகையை விரித்தாடும் மயிலின் காட்சி கண்கொள்ளாக் கவினின்பத்தைத் தருவது. விரிந்ததோகை யின்மேல் முருகனைக் காணல் எத்தகைய இன்பத்தை விளைக்கும்!

இங்கும், ஓர் எண்ணம் மிக்க வருத்தத்தை விளைக்கின்றது. அதனைக் கூறாமல் இருக்கவும் முடியவில்லை. சாமர்த்தியமாக இருக்கும் ஒருவனை, 'மயில்மேல் முருகன் இருத்தலைப்போல் இருக்கின்றான்' என்பர். இது எவ்வளவு அறிவுடைமையோ? கூறுதற்கில்லை.

மயில் என்பது யாது? என்பதைச் சாத்திரத்தின் வழியே பார்ப்போம். திருவாவினன்குடித் திருப்புகழில் ஓர் அடி,

நாத விந்து கலாதி நமோநம

என்பது.

நாதம்=கோழி: விந்து=மயில்: 'விந்துவெனும் தடமா மயிலூர்' என்பது திருப்போரூர்ச் சந்நிதிமுறை ஆகும். விந்துவின்மீது நாதனாகிய முருகன் உளனாதலின், என்றும் அவனுக்கு மயிலுண்டு. விந்து சுத்த மாயை; சுத்த மாயையை அடக்கி ஆள்பவன் முருகன். ஆதலின் மயிலூர்ந்து நிற்கின்றான்.

இனிப் பௌராணிக விற்பத்தியைக் காண்போம். இந்திரனை மயிலாகக் கொண்டான் என்பதே அது.

"குமரன் தன்னைப் பாலன் என்றிருந்தேன்" என்னும் வரியில், தன் உண்மை உணர்ச்சி இல்லாக் காலத்தை எண்ணித் தன்னை மூடன் என்கின்றான். இது தொனிப்பொருள். காவியங்களுக்கு, இதுவே உயிர் ஆகும்.

## குமரன்

குமார: எனும் வடமொழிச்சொல் தமிழில் குமரன் என்றாயிற்று. இச் சொல்லுக்குப் பல பொருளுண்டு. அவற்றை ஒதுக்கிக் குமார தந்திரம் உபோற்காதத்தில் கூறப்பட்டவற்றையே இங்குக் குறிக்கின்றேன். "கு= அஞ்

ஞானத்தை; மார=ஒழிப்பவன்; அஞ்ஞானத்தை ஒழிப்பவன்" என்பது இதன் பொருளாக அங்குக் கூறப்பட்டது. சைவசமயம், சிவதருமோத்திர உரையாசிரியரும் எடுத்தாண்டனர்.

## அந்நாள்

'அந்நாள்' எந்நாள்? "இன்று இப்பொழுது யான் பாலன் என்று கருதவில்லை. தானே வலியவந்து அறிவுரையை வீரவாகு கூறிய காலத்திலும் அறிவு சிறிது மில்லேனைப் 'பாலன்' என்றிருந்தேன். என்னைச் சார்ந்தோருடன் ஆலோசனைசெய்த காலத்தில், என் தம்பி சிங்கமுகன் இடித்துரைத்தும் 'பாலன்' என்றிருந்தேன். 'என் மகன் இரண்யன், 'முருகன் கடவுள். அவனுடன் போர் வேண்டா' என்ற காலத்திலும், 'பாலன்' என்றிருந்தேன்."

அந்நாள், என்பது தாப்பிசைப் பொருள் கோளாக அமைந்திருக்கின்றது. அந்நாள் பாலன் என்றிருந்தேன் எனவும், அந்நாள் பரிசிவை உணர்ந்திலேன் எனவும் இயையும்.

## பரிசு இவை

யாரை உணர்ந்திலேன்? 'கோலமா மஞ்ஞை தன்னில் குலவிய குமரன் றன்னை'. அக்காலத்தில் யான் என்ன உணரவில்லை? 'பரிசிவை உணர்ந்திலேன் யான்.' பரிசு என்பது புத்தி, அறிவு, உணர்ச்சி என்ற பலபொருள்களை உடையது. **அநுபூதியில்,**

> முருகன் குமரன் குகன்என் றுமொழிந்
> துருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்
> பொருபுங் கவரும் புவியும் பரவும்
> குருபுங் கவஎண் குணபஞ் சரனே.

என்றனர் அருணகிரிநாதர். முருகன், குமரன், குகன் என்று அவன் பெயர்களைக் கூறி உருக உருக உணர்ச்சி வரும். உணர்ச்சி என்பது அநுபவ அறிவு.

பரிசு என்பதற்குத் தன்மை என்றுலும் பொருந்தும். முருகன் தன்மை இங்குக் குறிக்கப்படுகின்றது. பரிசு இவை. என்றதில், இவை என்ற பன்மையைக் காண்க.

பரிசு, குணம் என்றும் ஆகுமாதலின் குணங்களை உணர்கின்றேன் என்முன் எனலுமாகும்.

இவை என்றது, அண்மையிலுண்டாகிய உணர்ச்சிகளைக் குறிக்கின்றது.

## அவுணன் உணர்ச்சி

அவுணனுக்கு எத்தகைய உணர்ச்சி வந்தது?

"மாலயன் தனக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற மூர்த்திஇம் மூர்த்தி யன்றோ"

என்பதே அவனுக்கு வந்த உணர்ச்சி. யார்க்கும் என்றதன் சிறப்பு யாது? மால் தனக்கும் அயன் தனக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும் மூல காரணன் முருகன் என்று கூட்டிக் காணல் வேண்டும். உணர்ந்தவன் நிலையில் உணரப்பட்ட பொருளின் உயர்வை உணர்க. அவன் எண்ணங்களில் அடுத்ததொன்று காண்போம்.

## முருகன் திருவடி எழில்

அழகில் சிறந்தவன் மன்மதன். அவனழகையும் குறைக்கும் பேரழகன் முருகன். அள்ளிக்கொள்ளும் பேரழகன் இவன் என்பதை இவன் நாமங்களுள் ஒன்றாகிய குமரன் என்பதே குறிக்கும். மாரன் - மன்மதனை; கு ; குறைப்பவன் : மாரன் கருநிறத்தோன் ; முருகன் செந்நிறத்தோன்; செவ்வேள் என்பதைக் காண்க. இறந்தவன் மன்மதன்; என்றும் அழியாதவன் முருகன். கரு நிறத்துடன் மாய்ந்த அழகன் மன்மதன் ; செந்நிறத்துடன் என்றும் மாறா அழகன் முருகன். ஆதலின் கோடிக்கணக்கான மன்மதர்களுடைய அழகுகள் எல்லாம் ஒன்றாய்த் திரண்டு உருப்பெற்றாலும் முருகப்பிரான் திருவடி எழிலுக்கு ஆற்றாது மறையும் என்று பதுமன் பகர்கின்றான்.

ஆயிர கோடி காமர் அழகெலாம் திரண்டொன் றாகி
மேயின எனினும் செவ்வேள் விமலமாம் சரணந் தன்னில்
தூயநல் லெழிலுக் காற்றா என்றிடின் இனைய தோல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்.

அசுரன் செய்த தவமே தவம்! வேதமும் காணுதற்கரிய திருவடியை அவன் காண்கின்றான். அதன் அழகில் ஈடுபடுகின்றான்.

## அசுரன் அனுபவம்

அடுத்து அவன் பெற்ற அநுபவம் எவை?

போயின அகந்தை போதம் புகுந்தன வலத்த தான
தூயதோர் தோளும் கண்ணும் துடித்தன புவன மெங்கும்
மேயின பொருள்கள் முற்றும் வெளிப்படு கின்ற விண்ணோர்
நாயகன் வடிவங் கண்டேன் நற்றவப் பயனீ தன்றே.

அகங்காரம் எல்லாவற்றிற்கும் காரணம். அகம் - நான்: தான் என்ற முனைப்பே அகங்காரமாகும். இதன் காரியம் துன்பம். துன்பம் ஒழிந்தது.

ஒன்று ஒழியின் அவ்விடத்தில் மற்றொன்று புகுதல் இயல்பன்றோ. அந்நெறியில், 'போதம் புகுந்தன'. போதம் என்பது அநுபவ சாத்திர ஞானங்களைக் குறிக்கும். இனி வரும் நன்மைக்கடையாளமாக வலத் தோளும் வலக் கண்ணும் துடித்தன. எங்கும் தங்கும் இறைவனைக் காணும் அவன் எல்லாப் பொருள்களையும் வெளிப்படக் காண்கின்றான். தேவநாயகன் வடிவத்தைக் கண்டான். இதுவே தவத்தின் சிறந்த நற்பயனாகும்.

## தடுத்தது மானம் ஒன்றே

இவ்வாறு பல எண்ணிச் செல்கின்றான்.

அடுத்த ஊரில் ஒரு நந்தவனம் இருக்கின்றது. அதன் கண் பல்வகை மலர்கள் அலர்ந்திருக்கின்றன; நறுமணம் நிறைந்திருக்கின்றது. சதாகதி என்பது காற்றுக்குப் பெயர். அது சதா இயங்கிக்கொண்டிருத்தலின் அப் பெயரைப் பெறுகின்றது. கந்தவாகன் என்பது மற்றொரு பெயர். நறுமணத்தை ஏற்றுத் திரிகின்றமையால் அப் பெயர் அவனுக்குப் பொருந்தும். நந்தவனத்து நறுமணத்தைக் கொண்டுவந்தது காற்று. சிறிது நேரம் அம் மணம் வீசிற்று. பின் நீங்கிற்று.

அவ்வாறே இடைக் காலத்தில் பல எண்ணங்கள் பதுமனுக்குத் தோன்றின. எண்ணிச் சென்ற அவன் 'மனிதனுக்கு முக்கியமானது எது?' என்றெண்ணினான். மானம் ஒன்றே மக்களாவாருக்கு உயிர் என்று கருதுகின்றான். ஆனால், அவன் மானம் அல்லாததை மானம் எனக் கொள்கின்றான். வணங்கத் தகாதவனை வணங்குதல் அவமானம்:

வணக்கத்திற்கே உரிமை பூண்ட முருகனை வணங்குவதோ அவமானம்? சூரன் தவறாக எண்ணுகின்றான்.

இழிந்த மான் காட்டின் வழிச் செல்லுகின்றது. அத னுடல்மயிர் செடியொன்றில் சிக்கிக்கொண்டது. அச்செடியின் முன்னர்த் தாழ்ந்து தன் மயிரை விடுவித்துக்கொள்ள மானுக்கு எண்ணமில்லை. மயிர் போனபின் வாழவும் அது விரும்பவில்லை. ஆகவே அவ்விடத்தில் உயிர் விடுகின்றது. 'மயிர் நீப்பின் வாழாக் கவரிமா'. இங்குச் செடி தாழ்ந்தது; விலங்கு உயர்ந்தது. பதுமன் எண்ணத்தைப் பார்ப்போம்.

சூழதல் வேண்டும் தாள்கள் தொழுதிடல் வேண்டு மங்கை
தாழதல் வேண்டும் சென்னி துதித்திடல் வேண்டும் தாலு
வாழதல் வேண்டும் தீமை அகன்றுநான் இவற்கா ளாகி
வாழ்தல் வேண்டும் நெஞ்சம் தடுத்தது மானம் ஒன்றே.

அகங்காரம் முனைந்து முளைத்தால் அது அழிதலில்லை; ஆதலால் பெரியோர் வருந்தினர். நம்மாழ்வார்,

'நீர்நும தென்றிவை வேர்முதல் மாய்த்து'

என்றனர்.

மானம்: மா=To Measure: அளத்தல்; என்பது அதன் பொருள். தான் அடங்கலா, அன்றி மற்றவரை அடக்கலா என்று அறிதல்வேண்டும். வந்தவன் உயர்ந்தவன்; அவனுக்கு அடங்கவேண்டுமே அன்றி அவனை அடக்க எண்ணுதல் தவறு என்ற உணர்ச்சி இல்லாதவனானான். விசுவரூபத்தைக் கண்டபின்னரும் நிலைத்த உண்மை உணர்வு பதுமனுக்கில்லாதொழிந்தது. வேப்பம் பூவில் ஒரு புழு பிறந்தது. வேப்பந் தளிரைத் தின்று வளர்ந்தது. தற்செயலாகக் கருப்பந்தோட்டத்துள் அது சென்றது. கரும்பைத் தின்றது. 'சீ, இது கசக்கின்றது. எனக்கிது உதவாது' என்று ஒதுக்கிற்று. மீண்டும் வேப்ப மரத்தை அடைந்தது. அப் புழுவையே ஒத்து நிற்கின்றான் பதுமன். என்றும் அறியாமையில் அழுந்திக் கிடந்த அசுரன் அறிவுஉருவ ஆண்டவனைக் கண்டு அனுபவித்தும் அவனை வேண்டா என்றொதுக்குகின்றான்.

கடவுள் கரும்பினும் மிக இனியன் என்பதைத் திருவிடைமருதூர் தேவாரம் கூறும்.

கரும்பினும் இனியான் தன்னைக் காய்கதிர் சோதியானை
இருங்கடல் அமுதம் தன்னை

## அசுரன் அருள்பெறல்

அசுரன்பால் அகங்காரம் மீண்டும் குடியேறியது; சண்டையிடவே துணிந்தான். "உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்து" என்றார் தொல்காப்பியனார். அசுரன் நன்றாக உணரவில்லை. அசுரனுக் கருள அறுமுகவன் உளங்கொண்டான். ஆதலின் வேலினுக்குக் கட்டளை இட்டான். 'இங்கிவன் ஆகம்போழ்ந்து ஏகுதி இமைப்பின்' என்றான்.

முருகனுக்குப் பெருமை வேலால். ஆதலினாலேதான் அருணகிரியார், 'வேலே விளங்கு கையான்' என்று முருகனைக் குறித்தார். வேல் ஞான உருவினது. அஞ்ஞானிக்கு ஞானம் மிகத் தேவையான ஒன்று. முழு அஞ்ஞானியாகிய அவுணனுக்கு ஞான சம்பந்தத்தை வேல் மூலமாக வேலவன் உண்டாக்குகின்றான். 'கல்லாத மாந்தருக்குக் கற்றுணர்ந்தார் சொல்கூற்றம்.' அதனால்தான் கண்ணுதல் திருமகனார் நல்லறிவுச் சுடர் கொளுத்தியும் அறிதரும் ஆற்றல் அற்றனன் அரக்கன்.

வேல் சென்றது. மாமர வுருவில் நின்ற அரக்கனைத் தடிந்தது. அரக்கன் மீண்டும் தன்னுருவத்துடன் வேலினைத் தொடர்ந்தனன்; வேல் திரும்பிற்று; அவனுடலில் பாய்ந்தது. அவனை இரண்டாகப் பிளந்தது. சூரபதுமன் உடல் ஒரு தனிச்சிறப்புடையது. ஓர் உடலில் இரண்டுயிர்களிருந்தன. 'ஒரு பேருருவின் இரு பேரியாக்கை'பெற்றவன் அவன். சூரன் ஓர் உயிர். மற்றோர் உயிர் பதுமன் என்பது. ஈருயிரும் தனித்தனி பிரிக்கப்பட்டன. இரண்டுயிரும் கோழியாகவும் மயிலாகவும் முன்னேக்கி வந்தன. வென்றவன் தோற்றவன் மேல் ஏறி இருத்தல் இயல்பு. அவ்வாறு முருகன் மயில்மீதிலிருந்தான். கோழியைக் கைப்பிடியாகப் பிடித்தான்.

இதுவரை பெருமானுக்கு அக்கினி தேவன் கோழிக் கொடியாக இருந்தனன். அவனிருந்த இடத்தில் பதுமன் என்ற உயிர் அமைந்தது. இந்திரன் மயிலாக எம்பெருமானைத் தாங்கி நின்றனன். அவனிருந்த இடத்தைச் சூரன்

என்ற உயிர் ஏற்றது. ஆகவே மயில்மீதிருந்து சேவலங் கொடியுடன் வேலே விளங்கு கையனாக ஞானவேந்தன் அருள் புரிந்தான்.

## வேலும் மயிலும்

'வேலும் மயிலும்' என, மயிலினை வேலுடனிணைத்துக் கூறுகின்றோம். ஞானம் வேல்; அதன் தொடர்பை மயில் பெற்றது. ஆகவே இரண்டையும் கூறுவோர் உயர்ந்த நிலையை அடைகின்றனர். கந்தரநுபூதியிலும்,

'ஆடும் பரி வேல் அணி சேவல்'

என்றமைத்தனர். ஞானம உதவிய வேலினை இடையில் வைத்தனர். முன்னும் பின்னும் நோக்கும் சிங்கத்தை ஒத்து முன்னிருக்கும் மயிலுடனும் பின்னிருக்கும் சேவலுடனும் சம்பந்த முடையது வேலாகும். இவை இரண்டும் இறை முருகனுக்கு வாகனமாகவும் கொடியாகவும் அமைந்தன.

## கோயிலுக்குச் செல்க

இறுதியாக ஒரு விடயத்தைச் சொல்லி முடித்துக் கொள்வேன்?

பெருமான் கோயிலுக்குச் செல்லுதல் வேண்டும். சிலர் கோவிலுக்குச் செல்லக் கூசுகின்றனர். முருகனைப் பாருங் கள்! இவன் உடம்பெல்லாம் பாம்பை அணிந்துகொண்டிருக் கின்றான். இன்றும் உடுப்பி என்ற திருநகரத்தில் பாம்புருவ மாக முருகன் எழுந்தருளி யிருக்கின்றான். சர்ப்ப ரூபாய நம: என்பது அவன் நாமங்களில் ஒன்று. சந்நிதிக்கு வந்த பாம்பையும் அவன் ஒதுக்கமாட்டான் என்பதை இவை அறிவிக்கின்றன. பிறகு மக்களைப் பற்றிக் கூறுவானேன்?

தீயவை புரிந்தா ரேனும் குமரவேள் திருமுன் உற்றால்
தூயவ ராகி மேலைத் தொல்கதி அடைவ ரென்கை
ஆயவும் வேண்டுங் கொல்லோ அடுசமர் இந்நாட் செய்த
மாயையின் மகனு மன்றோ வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான்.

## குமரவேள்

வேள்: எனின் பார்ப்போர் ஆசைப்படும் படியான அழகன் என்று பொருள். என்றும் குழந்தை ஆகும் அழகு இவனுக்குண்டு. முருகன் எங்கிருக்கின்றான்?

இருமுது குரவர் நாப்பண் இளமையோ டிருந்து சேயென்று
ஒருவரும் பெயரும் வேறே ஒருவருஞ் சாமி யாகா
குருபர னிறைஞ்ச உண்மை கொடுத்தொரு சாமி என்று
பொருவரு பெயரும் பூண்ட புனிதனைப் புகழ்ந்து வாழ்வாம்.

—திருஆனைக்கா புராணம்

சேய் எனும் ஒரு பெயருடன் பெற்றோரிடையில் என்றும் இளமை யழகுடன் இருக்கின்றனன். நக்கீரர், 'பழமுதிர்சோலை மலைகிழவோனே' என்று முருகாற்றுப்படையைப் பாடியவுடன் முருகன் முற்பட்டுப் பூதத்தாலுண்டாகிய துன்பத்தைத் துடைத்தனன். பின்னர், நக்கீரரைப் பார்த்து, 'கிழவனே! என்றழைத்தாயே. கிழவனுக்கு விரைந்து தொழில் செய்யு மாற்றலுண்டா?' என்று நகைத்துக்கொண்டே வினவினர் என்றும், உணர்ந்த கீரர் 'என்றும் இளையாய் அழகியாய்' என மீண்டும் பாடினர் என்றும் பெரும்பற்றப் புலியூர் நம்பி திருவிளையாடலில் கூறப்பட்டது.

## திருமுன்

இத்தொடர் சந்நிதி எனும் சொல்லின் முழுசக்தியையும் பெற்றிருக்கின்றது. முருகன் சந்நிதிக்குச் செல்லுதலின் அருமையைப் புலப்படுத்துகின்றது 'உற்றால்' என்றவினை.

திருமுன் செல்லின் ஆகாதன இல்லை. இழிந்தது மாயை. அதன்கண் தோன்றிய மிக இழிந்தோன் பதுமன். அவனும் பிறர் வணங்கத்தக்க உயர்வைப் பெற்றான் எனின், பிறர் அடையும் பேறினையும் கூறமுடியுங் கொல்!

## நம் கதை

அன்பர்களே! நாம் வந்த காரியம் ஒன்று. இன்று செய்து கொண்டிருப்பது மற்றொன்று. தலைவன் ஒருவனிருந்தான். அவனிடம் வேலைக்காரன் ஒருவனிருந்தான். தலைவனுக்கு மாம்பழத்தில் விருப்பம் மிகுதியும் உண்டு. ஆகவே தன் வேலைக்காரனிடம் ஓர் அணுவைக் கொடுத்து 'மாம்பழம் வாங்கி வா' என்றனன். தலைவன் கட்டளையை மனத்துட்கொண்டு கடைத்தெருவை வேலையாள் அடைந்தான். அங்கே கொய்யாப்பழத்தைக் கண்டான். வேலையாளுக்கு அப்பழத்தின்மேல் விருப்பமுண்டாதலின் அவன் விருப்பம் அதன்பால் சென்றது. தன் நினைவே ஒழுங்கானது

என எண்ணினான். அணுவைக் கொடுத்துக் கொய்யாப் பழத்தை வாங்கினன்; உண்டனன். முதலாளியின் விருப் பத்திற்கு மாறாக நடந்தமையால் அவனைச் சென்று பார்க்க வும் நாணி இருந்தனன்.

இக் கதைதான் நம் கதை.

| | | |
|---|---|---|
| தலைவன் | = | கடவுள் |
| வேலையாள் | = | உயிர் |
| அணு | = | உடல் |
| மாம்பழம் | = | பக்தி |
| கொய்யாப் பழம் | = | மோகம் |
| கடைத்தெரு | = | பூலோகம். |

இவற்றை ஒப்பு நோக்கிப் பார்க்கின் நன்றாக விளங் கும். வாழ்நாளை வீணாகக் கழித்தலாகாது. பாற்கடலி லுள்ள மீன் பாலைக் குடித்துப் பசியாற வேண்டும். அவ்வா றின்றி இழிந்த புழு, பூச்சிகளைத் தின்று வாழல் வாழ் வாகாது. அவ்வாறே இறைவன் அருட்பாலில் வாழும் நாம் இழிந்த பிறவற்றில் நம் கருத்தைச் செலுத்தல் தக்கதன்று.

## முடிவுரை

முருகனுக்காகச் சூரனைப் பற்றி இதுவரை பேசினோம். முருகன் சந்நிதியடைந்து அவன் உயர்ந்தான். ஆதலின் நாமும் அப்பரமன் சந்நிதியை அடையவேண்டும். ஆண்டவன் அவன், அடிமை நாம் என்பதை உணரல் வேண்டும். உணர்ந்து வாழ்த்தி வணங்கவேண்டும். அங்ஙனம் வாழ்வதே வாழ்க்கை எனப்படுவது. வாழ்த்தினைக் கூறிமுடித்துக்கொள்வேன்.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

ஆறிரு தடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீ ரடியா ரெல்லாம்.

வேலும் மயிலுந் துணை

கந்தர்சட்டிச் சொற்பொழிவுகள்

முற்றும்

## பிழையும் திருத்தமும்

| பக்கத்து எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| உ௬ | சக்தி கராய | சக்தி தராய |
| ,, | சக்தி கராய | சக்தி தராய |
| ௫௫ | உளச் செருக்க கற்றிலாய் | உளச் செருக்கினை யகற்றிலாய் |
| ,, | இட்டு நோய் | இட்டாறு நோய் |
| ,, | மிகுந்தழ | மிகுந்தெழ |
| எஉ | அறிவற்ற | அறிவு குறைந்த |
| எ௫ | தம் தலைமையும் | தங்கள் தலைமையும் |
| ,, | தமையுணர்ந்தோர் | தமை யடைந்தோர் |

# முருகன் புகழ் மாலை

முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான். ௧.

காக்கக் கடவியநீ காவா(து) இருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா—பூக்கும்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்காய் இனி. ௨.

உன்னை யொழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே. ௩.

வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை. ௪.

மொய்தார் அணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதா ரையும்அங்கு வாழவைப் போன்வெய்ய வாரணம்போல்
கைதான் இருப(து) உடையான் தலைபத்தும் கத்தரிக்க
எய்தான் மருகன் உமையாள் பயந்த இலஞ்சியமே. ௫.

ஆனா அமுதே அயில்வேல் அரசே
ஞானா கரனே நவிலத் தகுமோ
யானா கியஎன் னைவிழுங் கிவெறுந்
தானாய் நிலைநின் றதுதற் பரமே. ௬

அளியாலுஞ் சோலை
ஒளிசேர்வான் செந்தூர்
தெளிவாயால் நெஞ்சே
அழியாவீ டுண்டே. ௭

நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே
நீவந்த வாழ்வைக்கண்(டு) அதனாலே
மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
மார்தங்கு தாரைத்தந் (து) அருள்வாயே
வேல்கொண்டு வேலைப்பண் (டு) எறிவோனே
வீரங்கொள் சூரர்க்கும் குலகாலா
நாலந்த வேதத்தின் பொருளோனே
நான்என்று மார்தட்டும் பெருமாளே. ௮

துய்யதோர் மறைகளாலும் துதித்திடற்(கு) அரிய செவ்வேள்
செய்யபேர் அடிகள் வாழ்க சேவலும் மயிலும் வாழ்க
வெய்யசூர் மார்பு கீண்ட வேற்படை வாழ்க அன்னான்
பொய்யில்சீர் அடியார் வாழ்க வாழ்கஇப் புவனம் எல்லாம். ௯

வேலுமயிலுந்துணை